Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

Editor: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 260, 261

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 8. ஜீவியச் சந்தா ரூ.



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி — ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம் வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1970 ஆகஸ்டு, ஸெப்டம்பர் ஸாதாரண௵ ஆவணி, புரட்டாசி

# ஸ்ரீ ராமாநுஜன்—260, 261



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 22 | ஸாதாரண ௵ ஆவணி-புரட்டாசி ௴<br>1970 ஆகஸ்டு - செப்டம்பர் ௴ | ஸஞ்சிகை 8, 9. |
|---|---|---|


## அன்பர்களுக்கு அறிவிப்பு

அன்புடையீர் ! நிகழும் ஸாதாரண ஸம்வத்ஸரத்தின் பெருமையைப்பற்றி அடிக்கடி நாம் அறிவிக்க வேண்டுமோ? நினைவூட்டத்தான் வேண்டுமோ? ஏற்கெனவே நாம் தெரிவித்திருக்கிறபடி அபூர்வக்ரந்த வெளியீடுகள் இடையூறொன்றுமின்றி நமது மனோரதப்படியே நடைபெற்றுவருகின்றன. ஸ்ரீராமாநுஜனுடைய சென்றவிதழ் முமுக்ஷுப்படி ஸாரார்த்த தீபிகையைத் தாங்கி வெளிவந்தது. அப்படி முறையே ஸ்ரீவசநபூஷணுதி ஸாரார்த்த தீபிகைகளைத் தாங்கி வெளிவர வேண்டும். தத்வத்ரயஸாரார்த்த தீபிகையும் ஸ்ரீவசநபூஷண ஸாரார்த்ததீபிகையும் அச்சுமுடிந்து ஸித்தமாகியேயுள்ளன. அவற்றை ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே வெளியிட நிச்சயித்தும் அங்ஙனம் தெரிவித்துமிருந்த நாம் அவ்வபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ள நேர்ந்தது ; காரணம் சுருக்கமாகத் தெரிவிக்கப்படுகிறது.

ரஹஸ்யார்த்தங்கள்—தத்துவார்த்தங்கள் அல்லது சாஸ்த்ரார்த்தங்கள் நிரம்பிய நூல்களில் எல்லார்க்குமே ருசியுண்டாவது அரிது. லோகாபிராமமான கட்டுரைகளை வாசிப்பதில்தானே பலர்க்குப் பள்ளமடையான ருசி; இதைப் பலர் ஸ்பஷ்டமாகவும் தெரிவித்து நமக்குக் கடிதமெழுதி வருகிறுர்கள். அன்னவர்களுக்கு ரஹஸ்யார்த்த நூல்களை யனுப்புவது தகுதியற்றதென்றே முடிவுசெய்து கொண்டோம். விருப்பமுள்ளவர்கள் தெரிவித்துத் தருவித்துக்கொள்ள வேண்டியது. தத்வத்ரய ஸாரார்த்த தீபிகை பெறவிரும்புமவர்கள் [ஏற்கெனவே சந்தா செலுத்தியவர்களாயிருந்தால்] ஒரு ரூபாய் மட்டும் ஸ்டாம்பாகவோ M. O. மூலமாகவோ போஸ்டல் ஆர்டர் மூலமாகவோ அனுப்பி அதனைப் பெறுக. ஸ்ரீவசநபூஷண ஸாரார்த்த தீபிகைக்கும் இதுவே நியமம். வருடச்சந்தாவோ ஜீவியச்சந்தாவோ செலுத்தினவர்களுக்குமட்டுமே இந்த நியமமென்பதை மீண்டும் தெரிவிக்கி

ரேம். மற்றையோர்கள் - இரண்டு ரூபாயனுப்பி தத்வத்ரய ஸாரார்த்ததீபிகையும், மூன்று ரூபாயனுப்பி ஸ்ரீவசனபூஷண ஸாரார்த்த தீபிகையும் பெறுவார்களாக.

## — விருந்தளிப்பின் அறிவிப்பு —

மணவாளமாமுனிகளின் அறுநூருண்டு நிறைவுவிழாக் கொண்டாட்டம் நிகழ்த்தும் வகைக்குப் பலர் பலவாறு திட்டமிட்டு வருகிருர்கள். அவற்றை நடை முறையில் உலகமறியும். ஸ்ரீராமாநுஜன் மூலமாக நாம் நடத்த நிச்சயித்திருப் பதைக் கேளீர். நாளது ஐப்பசி மாதத்திற்குள்ளாக அல்லது தை மாதத்திற்குள் ளாக * அரிய பெரிய அறுநூறு விருந்துகள் * வெளியிட நிச்சயித்து இப்போது இருநூறு விருந்துகளை வெளியிட்டுவிட்டோம். ஸமீபகாலத்தில் நாம் திருவரங்கம் பெரிய கோயில், மதுரை, ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார்திருநகரி, திருக்குறுங்குடி முதலிய திவ்யதேசங்களுக்கு விடைகொள்ளவும் ஆங்காங்கு பலபல ஸஹ்ருதய ஸஹ்ருந் மணிகளைச் சந்தித்து வார்த்தையாடவும் வாய்த்தது. அவர்கள் பெரும்பாலும் ஸ்ரீராமாநுஜனை விரும்பி வாசிப்பவர்களாம். அவர்களனைவரும் ஒருமிடருகச் சொன்னதுகொண்டே நாம் இந்த அறுநூறு விருந்துகளை அளிக்க ஆசைகொண்டோம். ஒருகால் வாசித்துவிட்டு உள்ளே போட்டுவிடாமல் அடுத்தடுத்து எடுத்து வாசிக்கக்கூடிய விருந்துகள் நிரம்பிய ஒரு ஞானபொக்கிஷம் வேண்டுமென விரும்பினுர்கள்ஒவ்வொருவரும். அனைவரையும் ஒருநிகராக த்ருப்தி பெறுத்த இயலாது. ஆயினும் ஒருவாறு த்ருப்திபெறுத்த முயன்று இதனை வெளியிடுகிறேம்.

உபந்யாஸக ஸௌபாக்ய மென்று பெயரிட்டு நாம் வெளியிட்டிருப்பவற்றை உலகம் அநுபவித்திருக்கின்றது. அவற்ருல் உபந்யாஸகர்களும் பெரும்பாலும் பயன் பெற்று வருவதாகப் பலவிடங்களிலிருந்தும் தெரிவித்து வருகிருர்கள். அன்னவர் களுக்கு இவ்வறுநூறு விருந்துகளும் நித்ய போக்யமான நிதியாகும். ... *

## ஒரு முக்கியமான விண்ணப்பம்

இந்த விருந்துகளெல்லாம் அனைவரும் விரும்பி வாசிக்கக்கூடிய நிலைமை யில் அமையவேணுமென்பதே அடியேனுடைய குறிக்கோள். பரமஸத்வநிதியான மணவாளமாமுனிகளைச் சிந்தனை செய்துகொண்டே யெழுதப்படுவதாதலால் ஸாத்விகர்கள் உகக்கும்படியான முறையில்தான் ஒவ்வொரு விருந்தும் அமையும். வைதிகர்களோடு லௌகிகர்களோடு வாசியற அனைவரும் திருப்பித் திருப்பி அடுத்தடுத்து வாசிக்கும்படியான விஷயங்கள் இதில் மலிந்திருக்கவேணுமென்பது ஆசை. அடியேனுடைய கண்ணில் பல விஷயங்கள் தினப்படியாகப் படுவதுண் டாதலால் அவற்றில் பொருட்கேடு சுவைக்கேடு முதலியன தோன்றினுல் அவற்றைப்பற்றின விமர்சங்களும் இதில் இடம்பெறும். இது முக்கியமாக உலக நன்மையை உத்தேசித்தேயாகும். இதில் மேலே 9 முதல் 16 வரையிலுள்ள பக்கங்களில் காணும் விருந்துகள் இதற்குச் சான்ருகும். திருப்பாவையைப் பற்றின இன்சுவைப் பொருள்கள் பலவற்றையும் ரஸிகர்கள் அநுபவிப்பதற்கு அந்த எட்டுப் பக்கங்களும் இன்றியமையாதனவாம். இத்தகைய சிலவிஷயங்களால் ஒருவ ரிருவர் வருந்த நேர்ந்தாலும் உலகமெல்லாம் களிக்குமென்பது நமது நம்பிக்கை.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

**மணவாள மாமுனிகளின் அறுநூருண்டு நிறைவு நினைவு மலர்களுள் ஒன்ருன**

# அரிய பெரிய அறுநூறு விருந்து

**ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதியது**

## — தேஹவைத்தியனும், ஆத்மவைத்தியனும் —

1. "நோயற்றவாழ்வே குறைவற்ற செல்வம்" என்றிருக்குமவர்கள் நோயற்ற வாழ்ச்சியின் பொருட்டு நித்தியமும் மருத்துவனுக்குக் கைகாட்டவேண்டும். அவர் சொல்லுகிறபடியே நடந்துவரவேண்டும். அவர்க்குப் பணம் தரவேண்டும். நோய் உடலுக்குப் போலவே ஆன்மாவுக்குமுண்டு; ஆன்மாவும் நோயற்று வாழ வேண்டுமாளுல் இதற்காகவும் மருத்துவனை நாடவேண்டும்; உடல்மருத்துவன் பணம் பெற்றுக்கொண்டு பொய்பித்தலாடகம் பேசி வஞ்சனைகள் செய்வான். உயிர்மருத்துவன் நம்மிடம் பணம் எதிர்பாராததோடு வேண்டும் ஸமயங்களில் நமக்குப் பணம் தருவன்; இந்த மருத்துவனுக்கு நாம் கைகாட்டவேண்டாம். அவனுடைய கையை நாம் காணவேணும். "அஞ்சேலென்று கைகவியாய்" என்று வேண்டி அவனது அபயமுத்திரையோடு கூடிய திருக்கையை நாம் காணவேணும். மருத்துவன் சொல்லுகிறபடி நாம் கேட்டு அப்படியே நடந்துகொள்ளவேணு மென்பது இங்குமுண்டு. ஆனல் இந்த மருத்துவன் மனம் போனபடியே புதிது புதிதாக ஏதும் சொல்லமாட்டான். வெகு நாளைக்கு முன்னமே தன் கட்டளைகளை கீதாதிகளிலே யெழுதிவைத்திருக்கிருன்; அதன்படி நாம் நடந்துகொள்ளவேண்டும்.

## — உடல் மருந்துக்கும் உயிர் மருந்துக்குமுள்ளவாசி —

2. உடல்மருத்துவர்கள் ஒருவரிருவரல்லர்; பல்லாயிரவருளர். ஊர் தோறும் வீதிதோறும் பலபலருளர். உயிர் மருத்துவன் ஒருவனே. அவனைத்தான் * மருத்துவனுய் நின்ற மாமணிவண்ணு! * என்று பெரியாழ்வாரழைக்கிருர். * வைத்யோ நாராயணோ ஹரி: * என்று வைதிகர்கள் சொல்லுவர்கள். ஸஹஸ்ர நாமத்தில் (நிர்வாணம் பேஷஜம்) *பிஷக்* என்று பிஷக்காகச் சொல்லப்படுகிருன். உடல்மருத்துவன் மருந்தென்று ஒன்றைக் கொடுத்து அதற்காகவும் பணம் பிடுங்குவன். இந்த உயிர்மருத்துவன் தானே மருந்தாயுமிருப்பன். *மருந்தும் பொருளுமமுதமுந்தானே * என்கிருர் பேயாழ்வார். * நிர்வாணம் பேஷஜம் * என்கிறது ஸஹஸ்ரநாமம். *மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கென்று பெருந் தேவர் குழாங்கள் திருநாட்டிலே பிதற்றிக்கொண்டிருப்பதாக நம்மாழ்வாரருளிச் செய்கிருர். திருநாட்டிலும் மருந்து வேண்டியிருக்கிறது. இதன் மருமத்தை த்வயத்தின் முடிவிலுள்ள நம: பதம்காட்டும்; அதைப்பெரியார் வாய்க் கேட்டுணர்க.

## — கைகால் முளைத்த மருந்தையே ஆழ்வார் தேடுகிறார் —

3. நம்மாழ்வார் நினைவு வந்தபடியாலே அவருடைய அற்புதமானவோர் அருளிச்செயல் நினைவுக்கு வருகிறது. உலகத்தில் நோயாளிகளை நோக்கி வினவுமவர்கள் "யார் வைத்யர்? எது மருந்து?" என்றுகேட்பார்களே தவிர 'ஆர் மருந்து?' என்று ஒருவரும் கேட்கமாட்டார்; கேட்பதில்லை. மருந்தென்கிற வஸ்து அசேதனமாகையாலே 'எது மருந்து?' என்றுதான் கேட்கக்கூடியது; அப்படித்தான் கேட்டு வருகிறார்கள். நம்மாழ்வாரோவென்னில், திருவாய்மொழியில் (7—1—5) *ஆர்மருந்தினியாகுவார்? * என்கிறார். "ஆர்மருத்துவராகுவார்" என்றாராகில் பொருத்தமாயிருக்கும். ஆர்மருந்தாகுவாரென்றது விலக்ஷண ப்ரயோகமாகவன்றோ வுள்ளது; ஆழ்வார் அசேதனமான மருந்தைக் கொள்பவரல்லர் என்பது இதனால் விளங்கிற்றன்றோ. கைகால் முளைத்த மருந்துதான் உயிர்நோயைத் தீர்க்கும் மருந்தாகும். சுடராழி சங்கேந்தியிருக்கும் மருந்தையே நம்மாழ்வார் நாடுகிறார். நம்மாழ்வாரைச் சேர்ந்த நாமும் அதையே நாடுவோம். அந்த மருந்தின் பிரதிநிதிகள் ஆசாரியர்கள். *பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து* ... *

## — பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாரில்லை —

4. நோய்கள் ஒருவகைப்பட்டிருக்கையன்றியே பலவகைப்பட்டிருப்பதையறியாதாரில்லை. ஒவ்வொரு நோய்க்கும் மருத்துவர்கள் பலபலருளர். ஒரு நோய்க்கு ஒன்றுதான் மருந்து என்பதும் கிடையாது. சிரங்கு என்கிற ஒரு சிறு நோய்க்கு எத்தனை மருந்துகள் பார்த்து வருகிறோம்! பெரியாழ்வார் ஒரு நோயையெடுத்துக்கூறி இதற்கு மருந்தறிந்தவன் ஒருவனேயுளன், வேறுயாருமிலர் என்கிறார் ஒரு பாசுரத்தில். அந்தப் பாசுரம் தெரியுமோ? * எருத்துக் கொடியுடையானும் பிரமனுமிந்திரனும், மற்றுமொருத்தரும் இப்பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை* என்பதாம். சிவனும் பிரமனுமிந்திரனும் முதலான எந்தத் தெய்வமும் பிறவியாகிற நோய்க்கு [ஸம்ஸாரவியாதிக்கு] மருந்தறியமாட்டாதென்றார். பின்னை அறியுந்தெய்வம் ஒன்றுமில்லையோவென்ன, திருமாலிருஞ்சோலை மலையுறையுந் தெய்வமே மருந்தறியுந் தெய்வமென்று தலைக்கட்டினார். மலைப்பிராந்தத்தில்தான் ஸித்தௌஷதங்கள் விளையுமென்று கூறுவர்கள். ஆகவே இந்த மருந்தும் மருத்துவனும் திருமாலிருஞ்சோலைமலையில்தானுள்ளதாகக் கண்டுபிடித்தனர் பெரியாழ்வார். மிகுந்த ஆபத்தென்று மருத்துவனிடம் ஓடிச்செல்லுமவர்கள் 'ஐயா! ஒன்றும் பயமில்லையா? உங்கள் வாயினால் பயமில்லையென்று ஒரு சொல் சொல்லிவிட்டால் போதுமையா!' என்பர்கள். அப்படியே மருத்துவனாய் நின்ற இந்த மாமணி வண்ணனை நோக்கியே (அடுத்த பாசுரத்தில்) *அஞ்சேலென்று **கைகவியாய்*** என்று பிரார்த்திக்கிறார் பெரியாழ்வார். உண்மையில் இந்த மாமணிவண்ண மருத்துவன் அஞ்சேலெனறு கைகவித்தால் ஏழேழ் பிறவிக்கும் அஞ்சவேண்டியதேயில்லை. *போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரறநீக்கித் தன்தாளின்கீழ்ச் சேர்த்து அவன் செய்யுஞ்சேமத்தை யெண்ணுவாரில்லையே! ... ... *

## — மருந்தில்லாததொரு மஹாவியாதி —

5. ஸர்வஜ்ஞனான எம்பெருமானுங்கூட மருந்தறியப்பெறாத ஒரு வியாதியுண்டு. அஃது இன்னதென்று தெரியுமா? எடுத்துக்காட்டினால்தான் தெரிந்து கொள்ளமுடியும். நாம் எடுத்துக்காட்டுவதற்குமுன்னே அவரவர்களே சிறிது ஆலோசித்துப்பார்த்துத் தெரிந்துகொள்க. நாமேயெடுத்துக்காட்டுகிறோம். வடமொழியில் அஸூயையென்றும் தென்மொழியில் பொறாமையென்றும் சொல்லப்படுவதொன்றுண்டே; இது மனிதர்களுக்கு மிகப்பெரிய வியாதி. உண்மையில் இதற்கு மருந்தே கிடையாது; உலகத்தில் அவரவர்களுக்குப் பெருமைகளைப் பகவான் அருள்செய்கிறான். குலத்தாற்பெருமை, தனத்தாற்பெருமை, அழகினாற் பெருமை, கல்வியினாற்பெருமை,..............என்னும்படியான பெருமைகளை மனிதன் தன் முயற்சியினால் பெறமுடியாது; எம்பெருமானருள் ஒன்றினால்தான் பெற முடியும். இவை பெற்றவர்களைக்கண்டு நாம் உகக்கவேணுமேயல்லது பொறாமைப் பட்டுப் பயனில்லை. ஆனால் பொறாமைப்படுகிறோம். இது மருந்தில்லாத வியாதியே. இந்த வியாதி உண்டாகாமலே யிருந்தால் க்ஷேமம். உண்டாகி விட்டால் உயிருள்ளளவும் செத்துச் சுண்ணாம்பாக வேண்டியதே. ... *

## — வைத்யரை வேறு நகரந்தேடி யோடச்செய்த வைதிகர்கள் —

6. ஒருவர் டாக்டர் படிப்பு படித்து உயர்பதவியில் தேறினார். L. M. P., M. B B. S., முதலான பட்டங்களெல்லாவற்றுக்கும் மேலான பட்டம் பெற்றார், பிறகு செய்யவேண்டியதென்ன? ப்ராக்டிஸ்செய்து பொருளீட்ட வேண்டியது தானே. அதற்கு வழிதேடினார். ஸமீபத்தில் தனிகர்கள் வாழும்படியான ஒரு பெரிய அக்ரஹாரம் சென்று அங்கு ஒரு விடுதியில் தங்கி, தம்முடைய சிகித்ஸைத் திறமையை விளம்பரப்படுத்தினார். வீட்டு வாசலில் பெரிய போர்டு பலகைகள் மாட்டிவைத்தார். "இவ்வூரில் பெரிய டாக்டர் இன்னார் வந்திருக்கிறார்; இன்ன தெருவில் இன்ன கதவிலக்கமுள்ள வீட்டில் தங்கியிருக்கிறார்" என்று வீதிதோறும் பறைசாற்றச் செய்தார். ஏழைகளுக்கு இலவசமாக சிகித்ஸை செய்வதாகவும் விளம்பரப்படுத்தினார். மாதம் இரண்டாயிற்று. ஒரு சிறு பையன் கூட சிகித்ஸைக் கென்று வரவில்லை. அதனால் இவ்வூரில் வேறு டாக்டர்கள் இருக்கிறார்களோ வென்று அவர்க்கு ஐயமுண்டாயிற்று. ஆங்காங்கு மூலை முடுக்குகளிற் சென்று விசாரிக்கச் செய்தார். வைத்தியரொருவரும் கிடையாதென்று திண்ணமாகத் தெரிந்துகொண்டார்; இவர்க்கோ மிக வியப்பு உண்டாயிற்று. இவ்வளவு பெரிய ஊரில் ஒருவர்க்காவது வயிற்றுவலி தலைவலி கூடவா வராமலிருக்கும்; டாக்டரை நாடாமலிருப்பது எப்படி ஸம்பாவிதமாகும்? என்று ஆச்சரியப்பட்டார். அக்கம் பக்கத்தில் சில வைத்தியர்கள் இருக்கக்கூடுமென்றும், அவர்களிடம் சென்று இவர்கள் சிகித்ஸை பெற்று வரக்கூடுமென்றும் எண்ணிப் பார்த்தார். அதைப்பற்றியும் விசாரணைசெய்து பார்த்ததில் 'இவ்வூருக்கு யோஜனை தூரத்தளவும் ஒரு வைத்யரும் கிடையாது' என்று தெரியவந்தது.

பிறகு இதன் மருமத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ருசி பிறந்து, தானே அவரவர்களின் வீடுகளிற் சென்று நான் ஒரு பெரிய டாக்டர்; இவ்வூரில்

ப்ராக்டிஸ் பண்ணவந்து இரண்டுமாதங்களுக்கு மேலாயிற்று; இதுவரை ஒருவர் கூட என்னிடம் ஒரு சிறிய சிகித்ஸைக்கும் வரவில்லையே, என்ன காரணம்? இவ்வளவு பெரியவூரில் ஒருவர்க்குமேயா நோய்நொடி வாராமலிருக்கும்? என்ன விஷயம்? என்று கேட்டார். அதற்கு எல்லாரும் ஏககண்டமாக ஒரேவிதமான பதில் சொன்னூர்கள் (அதாவது) "டாக்டரே! இவ்வூரில் எங்களுக்கெல்லாம் ஒரு பெரிய குரு இருக்கிறூர்; அவரிடத்தில் நாங்கள் உபதேசம் பெறுகிறவர்கள்; அவ்வுபதேசத்தின் படியே நடந்துகொண்டும் வருகிறோம்; அதனுல் எங்களுக்கு ஒரு நோயும் வருவது கிடையாது. ஆகவே எங்களுக்கு சிகித்ஸாபேக்ஷையே நேருவதில்லை" என்றூர்கள். இங்ஙனம் சொல்லக்கேட்ட டாக்டர் "அது எவ்விதமான உபதேசம்? நான் அதைத் தெரிந்துகொள்ளலாமோ?" என்ன; ஆகா, நன்ருகத் தெரிந்துகொள்ளலாமென்று கூறி அதைத் தெரிவித்தார்கள்; "தினமிரண்டு; வாரமிரண்டு; பக்ஷமிரண்டு; மாஸமிரண்டு; ருது இரண்டு; அயனமிரண்டு; வருஷமிரண்டு—இதுதான் உபதேசம்" என்றூர்கள் டாக்டருக்கு இது சிறிதும் விளங்கவில்லை. பிறகு 'இந்த ஸூத்ரங்களை நீங்களே விவரிக்கவேணும்' என்று அவர்களை வேண்டிக்கொள்ள அவர்களே விவரித்தார்கள். (அது மேலே வருமாறு—)

**தினமிரண்டு**=போஜனமென்பது, தோன்றினபோதெல்லாம் செய்யலாகாது. "ருதம் த்வா ஸத்யேந பரிஷிஞ்சாமீதி ஸாயம் பரிஷிஞ்சதி, ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமீதி ப்ராத:" என்று மந்த்ரமோதின இரண்டுவேளை மட்டுமே போஜனம் செய்யவேண்டும்; இடைப்பலகாரம், கடைப்பலகாரம் என்பது எதுவும் கூடாது. இதுதான் **தினமிரண்டு** என்றதன் கருத்து. போஜனமும் நித்திரையுமாகிற விரண்டும் வ்யவஸ்திதமாயிருக்கவேணு மென்பதையும் இதற்குக் கருத்தாகக் கொள்ளலாம். **வாரமிரண்டு**=வாரத்தில் இரண்டு நாளாவது ஆலயஞ்சென்று தொழுதுவரவேண்டும்; இதனுல் தினபபடி சென்று தொழக்கூடா தென்பதில்லை. இரண்டுநாள் தவறவே கூடாதென்றபடி. **பக்ஷமிரண்டு**=இரண்டுவாரங் கூடினுல் ஒருபக்ஷமாகிறது. வாரந்தோறும் ஒருஅப்யஞ்ஜநம் [எண்ணெய் தேய்த்துக் கொள்வது] தவறலாகாதென்றபடி. **மாஸமிரண்டு**=இரண்டு பக்ஷங்கள் கூடினுல் ஒரு மாஸமாகிறது; ஏகாதசீ தோறும் உபவாஸம் தவறலாகாதென்றபடி. **ருது இரண்டு**=இரண்டு மாதங்கள் கூடினுல் ஒரு ருதுவாகிறது; "மாஸி மாஸி க்ஷுஹஸ்தாநாம்" என்றபடி மாதத்திற்கொருமுறை வபனம் செய்வித்துக்கொள்ள வேண்டுமென்றவாறு. இதுவும் தேஹாரோக்யத்திற்குச் சேர்ந்த காரியமேயன்றே. **அயனமிரண்டு**=ஆறுமாதங்கள் சேர்ந்தால் ஓர் அயனமாகிறது. மூன்று மாதங்களுக்கொருமுறை விரேசனங் கொள்ளவேணு மென்றபடி. **ஸம்வத்ஸரமிரண்டு**=சிலர் நித்யம் தேசாடனமே செய்துகொண்டிருப்பர். சிலர் ஒருநாளும் ஊரைவிட்டுக் கிளம்பாமலே யிருப்பர். இரண்டும் பிசகு. ஆறுமாதத்திற் கொருமுறை திவ்யதேச ஸேவையையோ சிஷ்யாநுக்ரஹத்தையோ வ்யாஜமாகக் கொண்டு சிலநாள் வெளி ஸஞ்சாரமும் செய்துவர வேண்டுமென்றபடி. ஆக இந்த நியமங்களை விரதமாகக் கொண்டிருப்பவர்களுக்கு நோய்நொடி வாராது; வைத்யாபேக்ஷையிராது என்றதாயிற்று. இந்த ஸதுபதேசம் அவ்வூரில் ஸபலமாயிருப்பதுகண்டு இங்கு நம்மால் ஜீவிக்க இயலாதென்று வெளியேறிவிட்டார் டாக்டர்; அவ்விடத்தில் விரைவில்மஹா தனிகராயினர்.

## — ரஹஸ்யக்ரந்த காலக்ஷேப பரர்களின் கதை —

7. ஓர் அக்ரஹாரத்தில் ஒரு பரமைகாந்தி, அவர் பெரிய குடும்பி; அவ்வூரில் வேறு யாரும் ஸ்ரீவைஷ்ணவர்கள் கிடையாது உபநயனம் கலியாணம் முதலானவை செய்யவேண்டியிருந்தால் அப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களில் தம்முடைய பந்துக்கள் விசேஷமாக வாழ்கிற வேறொரு நகரத்தில் சென்று நடத்திவிட்டு ஊர்வந்துசேருவர். இப்படியிருக்கையில் ஒரு ஜீயர்ஸ்வாமி சிஷ்யர்கள் நால்வருடன் அந்த அக்ரஹாரத்தில் வாஸத்தை விரும்பி வந்து சேர்ந்தார்; நீர்வளம் நிலவளம் நிரம்பியது அவ்வூர்; அதனால் அங்கு வந்து சேர்ந்தார். அங்கு ரஹஸ்யக்ரந்த ப்ரவசனம் ஆரம்பித்தருளினர். கூடவந்த நால்வரும் காலக்ஷேபம் செய்து வருகிறார்கள். இந்நால்வரில் ஒருவர் வயதில் மூத்தவர்; மற்றொருவர் கல்விகளில் தேர்ச்சிபெற்ற வித்வான், இன்னொருவர் சிறந்த தனிகர். வேறொருவர் ஸத்குல ப்ரஸூதரான ஆசார்ய புருஷர். ஆக இந்நால்வரும் ஜீயர் ஸ்வாமி பக்கலில் சிஷ்யர்களாயிருந்துகொண்டு ரஹஸ்யக்ரந்த காலக்ஷேப பரர்களாயிருந்து வருகிறார்கள். இப்படியிருக்கையில், அவ்வூர் ஸ்திரவாஸியாகச் சொல்லப்பட்ட பரமைகாந்திஸ்வாமி தம்முடைய ஒரு மகனுக்கு உபநயன முஹூர்த்தம் நடத்த நிச்சயித்தார். இதுகாறும் இவர் சுப காரியங்களை வெளியூர்சென்று நடத்திவருவது வழக்கமென்று சொல்லியிருக்கிறோம். இப்போது ஜீயர் ஸ்வாமியுடன் நான்கு பெரியார்கள் வந்திருப்பதால் வைதிக கோஷ்டியை அலங்கரிக்க இவர்களிருக்கிறார்களேயென்று ஸ்வக்ருஹத்திலேயே உபநயனத்தை நடத்தி விடலாமென்று நிச்சயித்து, ஜீயர் ஸ்வாமியிடம் சென்று இந்த உத்தேசத்தை விஜ்ஞாபித்து 'ஸ்வாமி இந்நால்வரையும் வைதிக கோஷ்டிக்கு அனுப்பியருள்வதாக வாக்களித்தால் சிரஞ்ஜீவியின் உபநயனத்தை இவ்விடமே நடத்திவிடுகிறேன்'' என்றார். அதற்கு ஜீயர் ஸ்வாமி "இதுவொரு பெரிய காரியமா? இதற்கு முன்னடியாக என் அபிப்பிராயம் கேட்க வேணுமா? எப்போது அழைத்தாலும் அவர்களையனுப்பி கோஷ்டியைச் சிறப்பாக நடப்பிக்கத் தடையில்லை'' என்று பேரன்புகாட்டி ஸாதித்தருளினர். இவர் பரம ஸந்தோஷத்தோடு அங்கேயே உபநயன ஸம்விதானங்கள் செய்து, உபநயனத்திற்கு முதல்நாள் ஒருகோஷ்டி க்ரமம் உண்டே: அதற்கு அந்த நால்வரையும் அழைத்தார். நால்வரும் உடனே புறப்பட்டு வந்துவிட்டார்கள். சந்தனமெடுக்க வேண்டிய ஸமயம் வந்தது; நால்வரில் ஒருவர் வயதில் மூத்தவரென்று சொல்லியிருக்கிறோமே; அவரிடம் அக்ர பூஜையாகச் சந்தனம் கொடுக்கப்போனர். வித்வானயிருந்தவொருவர் 'ஓய்! உமக்கு மூளையில்லையா? குட்டிச்சுவர்போல வயது ஏறிவிட்டதனால் என்ன பிரயோஜனம்; ராம சப்தங்கூட தெரியாத அவனுக்கா முதல் பூஜை பண்ணுகிறீர்? நான் பெரிய வித்வானென்பது உமக்குத் தெரியாதா?' என்று அதட்டினர். ஸரிதானென்று அவரிடம் கொடுக்கச் சென்றார்; நால்வரில் ஒருவர் நல்ல தனிகரென்று சொல்லியிருக்கிறோமே அவர் 'ஓய்! படித்துவிட்டதனால் பெருமை வந்துவிடுமோ? ஜன்மதரித்திரனைத் துப்புவாருண்டோ? படித்தவனயிருந்தாலும் பணக்காரனிடம் வந்துதானே பல்லைக்காட்டவேணும். நான் பூலோக குபேரனென்பதை நீர் கேள்விப்பட்டதே கிடையாதா? இப்படி வாரும்' என்றார். இனி நாலாமவர் ஸத்குல ப்ரஸூதரான ஆசார்ய புருஷர். அவர் எழுந்து 'ஓய்! தலை

நரைத்ததனுலும் பெருமையில்லை; கல்விகற்றதனுலும் சிறப்பில்லை; தனிகனுய் இருப்பதனுலும் உயர்த்தி இல்லை; இந்த மண்டுக்களை யெல்லாம் உடையவர் ஸிம்ஹாஸனதிபதிகளில் சேர்த்திருக்கிருரா? நான் சிஷ்ய ஸம்பத்துடைய பெரிய ஆசார்ய பீடஸ்தனென்பது உமக்குத் தெரியாதா? இப்படி வாரும்' என்ருர். நால்வரும் தங்கள் தங்கள் பெருமைகளைச் சொல்லிக்கொண்டு 'ஓய்! ஜாக்கிரதை! சந்தனக்கிண்ணி எகிறிவிடும்' என்கிருர்கள். இந்நால்வரும் ரஹஸ்யக்ரந்த காலக்ஷேப பரர்களென்பதை மறக்கவேண்டாம்.

மேன் மேலும் விவாதம் வளர்ந்ததேயொழிய ஸாமரஸ்யம் ஏற்படவேயில்லை. கோஷ்டி நடைபெருமலே ஆலத்தி வழித்து முடித்துவிட்டார்கள். பிறகு அந்த க்ருஹஸ்தர் வெகு வருத்தத்துடன் ஜீயர் ஸ்வாமியிடம்சென்று நடந்த செய்திகளை விரிவாகவுரைத்து அழுது நின்ருர்; ஜீயரும்வருத்தப்பட்டு 'ஸ்வாமீ! அழவேண்டாம்; நாளைக்கு ஸரியாக கோஷ்டி நடக்கும்படி செய்விக்கிறேன், போம்' என்று சொல்லி யனுப்பிவிட்டார். பிறகு நால்வரும் வந்து சேர்ந்தவாறே அவர்களை யழைத்து "அஹங்காரம் அக்நிஸ்பர்சம் போலேயென்று சொல்லியிருக்கிறது; நைச்யம் பாவிக்க வேணும்; இன்று போயிருந்து கோஷ்டியை ஒழுங்காக நடப்பித்து வாருங்கள்" என்று சொல்லி யனுப்பிஞர் ஜீயர். நால்வரும் உபநயன கோஷ்டிக்கு வந்து சேர்ந்தார்கள். சாத்துப்படியெடுக்கும் ஸமயத்தில் ஒவ்வொருவரும் நைச்யம் பாவித்துக் கைகூப்பி யிருந்துவிட்டார்கள் ஒருவரும் வாங்கிக்கொள்ளவில்லை. அவரிடத்திலாகட்டும், அவரிடத்திலாகட்டும் என்று சொல்லியே ஒவ்வொருவரும் கைகூப்பி விட்டார்கள்; இன்றைக்கும் கோஷ்டி நடைபெருமலே ஆலத்தி வழித்தாயிற்று. *

## — ஆஸ்திக வைதிக குடும்பத்தின் சீர்கேடு —

8 சாஸ்த்ரங்களில் திடநம்பிக்கையுள்ள ஆஸ்திகர்கள் இஹலோக ஸுகங்களைச் சிற்றின்பமென்று இகழ்ந்தும், பரலோக ஸுகத்தை – அதாவது நலமந்தமில்லதோர் நாட்டில் எய்தும் ஆனந்தத்தைப் பேரின்பமென்று புகழ்ந்தும் போருகிருர்கள். புண்ய பாபங்களென்பது கிடையாதென்றும் நரக ஸ்வர்க்க மோக்ஷாதிகள் கிடையாதென்றும் வாதிக்கின்ற நாஸ்திகர்கள் வேதாந்திகளால் சிற்றின்பமென்று இகழப்படுகின்ற மண்ணுலக போகங்களையே பேரின்பமாகப் பேசுகின்ருர்கள். இக்காலத்தில் ஆஸ்திகர்களின் குடும்பங்களில் ஜனிக்கின்ற பிள்ளைகளுக்கும் நாஸ்திக்யருசியே மிகுந்துவரக் காண்கிறது; ஆனல் இது அவர்களுடைய குற்றமன்று. தாய் தந்தையர் இளமை தொடங்கியே பிள்ளைகளை ஒழுங்கான வழியில் விடாமல் தீய பழக்கமுள்ளவர்களோடு பயில விடுவதனுல் அன்னவர்களுடைய பழக்கமே இப்பிள்ளைகளுக்கும் பழக்கமாய் விடுகிறது. "ஸம்ஸர்கஜா தோஷ குணா பவந்தி" என்றன்றே பெரியோர்கள் சொல்லுவது. "சேரிடமறிந்து சேர்" என்று ஔவையாரும் கூறிவைத்தார். ஆகவே ஸஹவாஸதோஷமே நமது பிள்ளைகளுக்கு அநர்த்தமாய்த் தலைக்கட்டுகிறது. அதை விலக்கவேண்டுவது முக்கியம். .... ... ... ... ... *

## - புனர்வஸு பத்ரிகா பரீக்ஷணசிக்ஷண விருந்து இருபத்தைந்து -

9. மயிலையில் நின்றும் நெடுநாளக வெளிவரும் புனர்வஸுபத்ரிகையின் நெ. 153ல் ஒரு பண்டிதர் "திருப்பாவை—சுடர்(க்)கொடியின் சொல்லமுதம்" என மகுடமிட்டு எழுதிவருகையில் (4. ஆழி) என்றிட்டு எழுதியிருப்பதாவது—இப் பாட்டில் கோபிகள் மார்கழிநீராட மழைபெய்யுமாறு மேகதேவதையைப் பிரார்த்திக்கின்றனர்கள்; இப்போது ஆறுகளும் குளங்களும் வறண்டுகிடக்கின்றனவா என்ன? இவர்கள் நீராடத் தண்ணீரே இல்லையா என்ன? இனிமேல் மழைபெய்துதானு ஆகவேண்டும்? இப்போது இவர்கள் ஜலாசயங்களில் ஜலக்ரீடைபண்ணுமலா இருக்கிறுர்கள்? தண்ணீரே இல்லாமலிருந்தால் முதல்பாட்டில் "நீராடப் போதுவீர்! போதுமினே" என்றழைத்து நீராடப்புறப்பட்டிருக்க மாட்டார்களன்றே? இன்றைக்கு இந்த விரதத்தை யனுஷ்டிக்க ஏற்பாடு செய்திருக்கவோ, வீட்டை விட்டுக் கிளம்பித் தோழிகளையழைக்கவோ மாட்டார்களன்றே? இப்போது நீராட்டத்திற்குரிய ஜலஸௌகரியம் பூர்ணமாகவே யிருக்கின்றது; ஆகவே இப்போது ஜலத்திற்கு அபேக்ஷையே கிடையாது. எப்படியும் இப்போது நீராட்டம் நடந்தேவிடும் அடுத்தவருடத்திற்காகத்தான் இப்போது பெய்யும்படி வேண்டுகிறுர்கள்; இதனல் பலபேர்களுக்குண்டான ஸந்தேஹம் தீர்க்கப்பட்டுவிட்டது— என்று. இத்தகைய அரும்பெரும்பொருளைக்கண்டறிந்து வரைந்தது விலக்ஷண மேதாவிலாஸமே. "இதனல் பலபேர்களுக்குண்டான ஸந்தேஹம் தீர்க்கப்பட்டு விட்டது" என்று பண்டிதர் தலைக்கட்டினதுண்டே, இதுதான் பரமரஸம். ஏரிகளும் குளங்களும் நதிகளும் நீர்நிரம்பியிருக்க கோபிகள் 'மழைபெய்திடாய்' என்று வேண்டுவது பொருத்தமாக இல்லையே யென்று பல நிருபகர்கள் ஸந்தேஹங்கொண்டிருந்தார்களாம்; இந்த வேண்டுகோள் இந்த வருஷத்திற்காகவன்று, மேல் வருஷத்திற்காகவே யென்று தாம் கண்டறிந்து துணிந்து வெளிட்டதனல் ஸந்தேஹம் தீர்ந்து விட்டதாம். ப்ரஜ்ஞையும் ப்ரதிபையும் மிக வியக்கத்தக்கது.

### — ஸ்வாத்மாநுரூபலேகனவைகரீ ஸமுத்போதனம் —

10. இதைச்சிறிது மாற்றியெழுதியிருக்கலாமென்று தோன்றியது. எங்ஙனே யென்னில்; வர்ஷருதுவின் மாதங்கள் ஆவணியும் புரட்டாசியுமேயொழிய மார்கழியன்று. 'நபச் ச நபஸ்யச் ச வார்ஷிகாவ்ருதூ' என்று வேதமுமோதிற்று. மார்கழிமாதம் ஹேமந்த காலமேயொழிய வர்ஷா காலமன்று; இதற்கு முந்தின சரத்ருதுவிலுங்கூட மேகம் வர்ஷியாதென்பதை "கர்ஜதி சரதி ந வர்ஷதி, வர்ஷதி வர்ஷாஸு நிஸ்ஸ்வநோ மேக;" என்பதனல் பண்டிதராஜன் பகர்ந்தான். "தர்சயந்தி சரந்நத்ய புலிநாநி சநைச் சநை:" என்று வான்மீகி முனிவரும் செல்லிவைத்தார். ஆக இந்த ஹேமந்த காலத்தில் மழைபெய்யப் பிரார்த்திப்பது அஸங்கதமாகையாலே இந்தப் பாசுரம் அவதரித்ததே ஸமஞ்ஜஸமாகத் தோன்றவில்லை— என்றெழுதியிருக்கலாம், அதவா, மற்றொருபடியாகவும் எழுதியிருக்கலாம்; "நீராடப் போதுவீர் போதுமினே" என்றழைத்தவர்கள் எல்லாருமாகக்கூடி ஒரு பொய்கைக்கோ யமுனைக்கோ போய்ச் சேரவேண்டியிருக்க, அது செய்யாதே நந்தகோப

னுடைய கோயில் காப்பானை யெழுப்புவதும் நந்தகோபயசோதாதிகளை யெழுப்புவதுமாய் பொய்கைக்கரையின் பேச்சேயில்லாமல் ப்ரபந்தத்தை முடித்துவிட்டபடியாலே இது விப்ரலம்பகவாக்யமாயிருந்ததென்று கூசாமல் எழுதியிருக்கலாம். எதையெழுதினாலும் காகிதம் தாங்குமன்றோ. 'இவை சில அபூர்வார்த்தங்கள்' என்று உகந்து வாசிக்கவும் வியக்கவும் அதிகாரிகளு முள்ளார்களன்றோ.

## — புள்ளுஞ்சிலம்பினவில் மற்றோரதிசயமும் கேளீர் —

11. "6. புள்ளும்" என்றிட்டு (மேலே குறித்த புனர்வஸுவில் பக்கம் 24ல்) முன்னம் குறித்த பண்டிதர் தாம் எழுதி யிருப்பதாவது, பாவைக்களம் செல்வதற்குப் புறப்பட்டவர்கள் இந்த கோஷ்டியில் இன்னமும் வந்து சேராதவர்களை யெழுப்புவதாக அமைந்திருக்கிற பத்துப் பாசுரங்களுக்கு அவதாரிகையிடுகிறார் இப்பண்டிதர்–; தூக்கம் விழித்தெழுந்து வராதவர்களும் வாட்டும்; அவர்களுக்காகக் கொஞ்சம் பொறுப்போம் என்று ஒருத்தி சொன்னாளாம் அவர்களுக்காக நாம் ஏன் காத்திருக்க வேண்டும்? நாமெல்லோரும் காலத்தில் எழுந்து வந்துவிடவில்லையா? இதைப்போல் அவர்களும் வந்திருக்க வேண்டாமா? 'வீணாக மற்றவர்கள் காத்திருப்பார்களே!' என்று எண்ணமில்லாதவர்களைப்பற்றி நமக்கு ஏன் கவலை? என்று மற்றொருத்தி சொன்னாளாம். அதற்குமேல் அவள் மீண்டும் சொன்னாளாம்—'அப்படியன்று அம்மா! ஒரு காரியத்திலும் நாம் அவசரப்படக்கூடாது; பரவசமாகத் தூங்கிக் கொண்டிருப்பர்களே யொழிய வேணுமென்று வராமலிருப்பர்கள்? தூக்கமென்பது பொல்லாததன்றோ. என் செய்வர்கள் பாவம்! விழித்துக் கொண்டபின் பரிதாபப் படாமலா இருப்பர்கள்! என்று சாந்தமாகவும் ஸாமர்த்தியமாகவும் கூறினாளாம். இப்படிப்பட்ட அம்மையார் புராணங்களை அநுவதிக்கவும் வெள்கி நிற்க வேண்டியிருந்தும் இன்சுவைமிக்க தத்துவங்களை யுணர்த்தவேண்டி அநுவதித்தோமித்தனை. இவ்விஷயங்களெல்லாவற்றிலும் தத்துவப் பொருள்களை க்ரமேண கேளீர்.

## — மார்கழி நீராட்டத்தின் மருமமுணர்த்துதல் —

12. திருப்பாவையில் 'முதற்பாட்டில் *நீராடப்போதுவீர் போதுமினோ* என்றும், மூன்றாம்பாட்டில் *நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்* என்றும், நாலாம்பாட்டில் *நாங்களும் மார்கழிநீராட மகிழ்ந்து* என்றும், இருபதாம்பாட்டில் *நப்பின்னை நங்காய்! இப்போதே யெம்மை நீராட்டு* என்றும், இருபத்தாறாம் பாட்டில் * மார்கழி நீராடுவான்* என்றும் இங்ஙனே பலகால் நீராட்ட ப்ரஸ்தாவம் நிகழ்ந்துள்ளது. மார்கழி நீராட்ட மஹோத்ஸவமென்று ஆங்காங்கு உத்ஸவமும் நடத்தப்பட்டு வருகின்றது. ஆண்டாள் திருவவதாரஸ்தலமான ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஆண்டாளை நீர்நிலையருகில் எழுந்தருளச்செய்து நடத்தப்படுகிறது. ஆனால் திருப்பாவையில் *நீராடப்போதுவீர் போதுமினோ* என்றழைத்தவர்கள் நீராடுமிடமான நீர்நிலைக்குச் செல்லவில்லையே; தாங்கள் நீராடினதாகவும் சொல்லவில்லையே; இதன் மருமமென்ன? என்று தெரிந்துகொள்ளவேண்டும் நாலாம் பாட்டில் *ஆழிமழைக்கண்ணா* வென்று மழைத்தெய்வமான மேகத்தை விளித்து *நாங்களும் மகிழ்ந்து மார்கழி நீராட உலகினிற் பெய்திடாய்என்று நியமித்திருப்பதை நோக்குங்கால் மெய்யாகவே நீரிலே தோய்வதை உத்தேசித்

திருப்பதாக ஸ்புஷ்டமாகிறதே; மேலே அந்த அனுட்டானம் செய்ததாகத் தெரிய வில்லையே யென்று சங்கிப்பதற்கு ஆஸ்பதமுள்ளதுதானே.

— முன்னோர்மொழிந்த முறைகாட்டுதல் —

13. பூர்வாசார்ய வியாக்கியானங்களில் இந்த சங்கை பரிஹாரமடையும் படியாக அருளிச் செய்யப்பட்டுள்ளது. *நீராடப் போதுவீர்!* என்றவிடத்து மூவாயிரப்படியில் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி வருமாறு— "[நீராட] இத்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ண ஸம்ச்லேஷம். தமிழரும் கலவியைச் சுனையாட லென்ருர்கள். * ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்" என்று பகவத் ஸம்ச்லேஷத்துக்கு க்ரீஷ்மகாலத்தில் குளிர்ந்த மடுவில்படிவதை த்ருஷடாந்தமாகச் சொல்லிற்றிறே" என்று. ஆருயிரப்படி ஸ்ரீஸூக்தியும் காணீர்; "[நீராட] இவர்கள் தங்களுக்கு நீராடவென்று நோயாசையிறே. யமுனு ஜலம் ஒருத்தியுடைய விரஹாக்னியாலே சுவறுமே. தமிழர் கலவியைச் சுனையாடலென்ருய்த்துச் சொல்லுவது. க்ருஷ்ணஸம்ச்லேஷத்தையாய்த்து இவர்கள் நீராட வென்கிறது. *ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்* என்னுமாபோலே" என்று. ஆக இவற்ருல், பகவானிடத்தில் அவகாஹிப்பதுதான் நீராட்டமாக மறைத்துச் சொல்லப்பட்டதென்று விளங்கும்.

— எம்பெருமானே உண்மையான தடாகமெனநிருபிக்கும் விருந்து —

14. முகுந்தமாலையில் *கரசரணஸரோஜே காந்திமந்நேத்ரமீநே ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே அகாதமார்க்கே, ஹரிஸரஸி விகாஹ்யாபீய தேஜோஜலௌகம் பவமரு பரிகிந்ந: கேதமத்ய த்யஜாமி* என்கிற சுலோகத்தை நன்கு சிந்தனை செய்வது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் (8 5-1) *மாயக்கூத்தா... கண்ணு! கண் கைகால் தூய செய்ய மலர்களா சோதிச் செவ்வாய் முகிழதா, சாயல் சாமத்திரு மேனி தண்பாசடையா, தாமரைநீள் வாசத்தடம்போல் வருவானே!* என்றும், *வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதகமணித் தடம்* என்றும் எம்பெருமானைத் தடாகமாகவே பேசினுர். ஸ்ரீரங்கராஜஸ்தவமருளிச் செய்துகொண்டே (திருக்கோட்டியூரிலிருந்து) திருவரங்கம் பெரிய கோயிலில் புகுகின்ற பட்டர் ஐம்பதறுபது சுலோகங்களினுல் திருக்காவேரியையும் திருச்சோலைகளையும் திருமதிள்களையும் திருவீதிகளையும் திருமண்டபங்களையும் சந்திரபுஷ்கரிணி திருப்புன்னை முதலானவைகளையும் அநுபவித்து, ஸ்ரீரங்கநாதன் கர்ப்பக்ருஹத் திருமுன்பே வந்தவாறே *பிப நயந! புரஸ் தே ரங்கதுர்யாபிதாநம் ஸ்திதமிவ பரிபுல்லத் புண்டரீகம் தடாகம்* என்றும், *உத்புல்ல பங்கஜ தடாக மிவோபயாநி ஸ்ரீரங்கராஜமிஹ* என்றும் ஒரு தாமரைத் தடாகத்திலே படிவதாகப் பணித்தாரேயன்றி ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்கின்றேனென்ருரல்லர். ஆகவே திருப்பாவையில் நீராட்ட ப்ரஸ்தாவம் நிகழ்ந்ததானது பகவதவகாஹனத்தையே சொன்னபடியாம். இதுமட்டுமன்று; [திருவிருத்தத்தில்) *காலை நன் ஞானத்துறை படிந்தாடிக் கண் போதுசெய்து* என்றருளிச்செய்தபடியே ஞானத்துறையாகிய ஆசாரியர்களிடத்துப் படிந்து குடைந்தாடுவதையும் சொன்னபடியாகும். இதற்குச் சேருமாறு ஸ்வாபதேசார்த்தங்களை விளக்குதற்குப் பாங்காகவன்றே (திருப்பாவையில்) ஸ்ரீஸூக்தி

கள் தொடையுண்டு திகழ்கின்றன. இந்த விளக்கத்தை அடியேனுடைய திருப்பாவையுரைகள் பலவற்றிலும் ரஸிகர்கள் அநுபவிக்கலாம், அநுபவித்துப் பிரவசனம் செய்து வருகிறார்கள். நமது அவ்வுரைகள் உலகம் பரந்தவை.

— ஐய்ங்கார் பாசுரமொன்று காட்டும் தெளிவு —

**15.** பிள்ளைப் பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதிகளுக்கும் நூற்றெட்டு வெண்பாக்களிட்டு* நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி யென்னும் பிரபந்தம் பாடியுள்ளார். அதில், திருநாங்கூர்த் திருப்பதிகள் பதினொன்றில் ஒன்றான திருவெள்ளக் குளத்திற்கு இட்ட வெண்பா வருமாறு;—

"நானடிமை செய்யவிடாய் நானுனே னெம்பெருமான் *
தானடிமை கொள்ளவிடாய் தானுனன் *—ஆனதற்பின்
வெள்ளக்குளத்தே விடாயிருவரும் தணிந்தோம் *
உள்ளக் குளத்தேனை யொத்து." என்பதாம்.

(இப்பாட்டின் கருத்துச் சுருக்கம்.) எம்பெருமானுக்கு அடிமை செய்யவேணுமென்கிற விடாய் நமக்கிருப்பதுபோல, நம்மை அடிமைகொள்ள வேணுமென்னும் விடாய் அவனுக்குமுள்ளது இருவருடைய விடாயும் தீரவேணும் என்னபண்ணினால் விடாய் தீரும். குளத்திலே படிந்தால் தீரும். சேலும் கயலும் சேறும் பாசியும் மலிந்த குளத்திலே படிந்து தீரும் விடாயன்று இது. இந்த விடாய் தீருகைக்குத் திருவெள்ளக் குளமென்று ஒரு விலக்ஷணமான குளமுண்டாயிற்று. இதிலே அவன் நித்ய ஸந்நிதிபண்ணி ஸம்ஸாரிகளை அடிமைகொண்டு தன் விடாய் தீரப்பெறுகிறான். நாமும் இங்கே அடிமைசெய்து நம்விடாய் தீரப் பெறுகிறோம். திருவெள்ளக்குளமென்று ஊர்க்கும் பெயர் பெருமானுக்கும் பெயர். அத்தலத்தில் விளங்கும் திருக்குளத்திற்கும் திருநாமம், ஆக, ஹரி ஸரஸி விகாஹனமே நீராட்டமென்றதாயிற்று. (இந்த வெண்பாவில் ஈற்றடியில் குளம் என்றது-சர்க்கரைப்பாகுக்கு வாசகமான குடமென்கிற வடசொல் விகாரம்).

— பாகவதர்களைத் திருப்பள்ளி யுணர்த்துவதற்கு ஹேதுக்கள் ஐந்து —

**16.** *நீலாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்ய க்ருஷ்ணம்* என்ற தனியனுக்குச் சேர *நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பனை கண்ணபிரானைப் பள்ளியுணர்த்துவதையே பிரதானமாகக் கொண்ட இத்திருப்பாவையில் ஆறுவது பாசுரந் தொடங்கிப் பதினைந்தாம் பாசுரமளவும் பத்துப் பாசுரங்கள் பாகவதர்களைப் பள்ளியுணர்த்துவன. 1. "ஏக: ஸ்வாது ந புஞ்ஜீத புஞ்ஜீத தசபிஸ் ஸஹ" என்று சாஸ்த்ரம் பரம போக்யமான வஸ்துவை ஒருவனாக அநுபவிக்க லாகாதென்றும் பத்துப்பேரோடு கூடியே அநுபவிக்கவேணுமென்றும் சொல்லியிருக்கையாலே பெருங்கூட்டமாகக் கூடி யநுபவிக்கப் பாரிக்கின்றனர் ரென்பது முதல்ஹேது.

**17.** பரத்வமென்னும் ஒரு திருக்குணம்மாத்திரமே விளங்குமிடமான பரமபத நாதனை யநுபவிக்கப் பலகோடி நூறாயிரவர் திரளும்போது ஸகலதிருக்குணங்க

ளும் ஒருங்கே விளங்கு மிவ்விடத்தே அநுபோக்தாக்கள் அதனிலும் விஞ்சியிருக்க வேண்டாவோ என்கிற ஆவலுமுள்ளமை இரண்டாவது ஹேது.

18. பெரு வெள்ளத்திலே இழியுமவர்கள் பெருந்திரளாக இழியுமா போலே ''ஆழியானென்னு மாழமோழையில்'' என்ற பெரியாழ்வா ரருளிச்செயலின்படி அகாத ப்ரவாஹமான இவ்விஷயத்தில் பெருந்திரள் மிக அவசியமென்றும் கருதி ணர்கள்; *காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்* என்னும்படியான விஷயத்தில் பலர் கூடியிருப்பது தைர்ய ஹேதுவாகு மன்றோ. இது மூன்ருவது ஹேது.

19. நம்மாழ்வார் திருவாய்மொழியில் ''அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ'' என்று பாகவத கோஷ்டியில் சேரப் பெறுகையையே புருஷார்த்தமாகக்கூறி, முடிவிலும் ''வந்தவ ரெதிர் கொள்ள மாமணி மண்டபத்து, அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை'' என்று அப்பேறுதன்னையே பெற்றதாகக் கூறியிருக்கையாலே பகவதநுபவத்திற் காட்டிலும் பாகவத கோஷ்டியில் அந்வயமே பரமபுருஷார்த்தமாகத் தேறுதலால் இங்ஙனேயொரு பத்துப்பாட்டுகள் அமைத்து அதனை வெளியிட விரும்பினது தான்காம் ஹேது.

20. இங்கு மிக முக்கியமாகக் கருதத்தக்க தொன்றுண்டு; அதாவது— விபீஷணுழ்வான் பெருமாளிடத்தே ஆச்ரயிக்க வரும்போது கட்டும்காவலு மொன்று மின்றிக்கேயிருக்க நேராகப் பெருமாள் திருவடிகளிலே வந்து பணியலா மாயிருக்கவும் அது செய்யாதே ''வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து'' என்கிற சாஸ்த்ரார்த்தத்தை நிறைவேற்ற வேண்டி வானர முதலிகளை முன்னிட்டாப்போலே இவர்களும் பாகவதோத் தமர்களை முன்னிட்டுக் கொண்டு சாஸ்த்ரார்த்த பரிபாலனம் பண்ணுகிருர்கள்.

— எழுப்பப்படுமவர்கள் உறங்குபவர்களல்லர் —

21. பகவதநுபவத்தில் அபிநிவேசம் எல்லார்க்குமொத்திருக்கும்போது, சிலர் உள்ளே கிடத்துறங்குவதாகவும், சிலர் வெளியே உலாவி உணர்த்துவ தாகவும் பாசுரமிட்டால் இது பொருந்துமோ? உள்ளே கிடந்துறங்குவார்க்கு அவா குறைவுபட்டதென்றும், வெளியே நின்று உணர்த்துவார்க்கு அவா அதிகமென் றும் தேறுமே; இவ்விதமான ஏற்றத்தாழ்வு பாகவதர்களுக்குள் இருக்கத் தகாதே! என்னில்; கேண்மின்; கண்ணபிரானுடைய திருக்குணங்களும் திவ்ய சேஷ்டி தங்களும் ராமசரங்கள் போலே சிலரை மயங்கப்பண்ணும், சிலரைத் துடிக்கப் பண்ணும். உள்ளே கிடப்பவர்கள் மயங்கினவர்களின் கோஷ்டியில் சேர்ந்தவர்கள். வெளியே எழுப்புமவர்கள் துடிப்பவர்களின் கோஷ்டியில் சேர்ந்தவர்கள், ஆகவே அனைவரும் பகவத்குணநுபவத்திலீடுபட்டவர்களே யென்னத் தட்டில்லை.

— நாமுரைக்கும் உள்ளுறைபொருள்களுக்கு ஓர் எடுத்துக்காட்டு விருந்து —

22. [தாயைக் குடல்விளக்கஞ் செய்த தாமோதரனை] தாயாவது காயத்ரி; ''காய த்ரீச் சந்தஸாம் மாதா'' என்று வேதத்தில் காயத்ரியைச் சந்தஸ்ஸுக்களுக்கு மாதாவாகச் சொல்லியிருக்கையாலே இங்குத் தாய் என்றது காயத்ரியை; அதைக் குடல்விளக்கஞ் செய்கையாவது குடலென்பது நடுவான பாகம். காயத்ரியில் நடுப் பாகமாவது ''பர்க்கோ தேவஸ்ய தீமஹி'' என்பது. இதுதானே அதில் உயிரான

பாகம். இதை விளக்கம் செய்வதாவது ப்ரஹ்மவர்ச்சஸ்ஸு அதிகரிக்கச்செய்கை. இனி, திருமங்கையாழ்வார் *குலந்தரும் செல்வம் தந்திடுமென்ற பாசுரத்திலே "பெற்றதாயினுமாயினசெய்யும்" என்றருளிச்செய்திருக்கையாலே திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தையும் தாயாகக் கொள்ளலாம். கண்ணபிரானுக்கு தேவகிப் பிராட்டி ஒரு தாய்; யசோதைப்பிராட்டி மற்றொரு தாய்; தேவகியைக் காட்டிலும் யசோதையே சிறந்த தாயெனக் கொண்டாடப் படுகிறாள். அதுபோல ஸ்ரீவைஷ்ணவ ஸந்தானத்திலும் காயத்ரியைக காட்டிலும் திருவஷ்டாக்ஷரியே மிகச் சிறந்ததாகக் குலாவப்படுகிறது. ஆசார்ய ஹ்ருதயத்தில் "ச்சந்தஸாம்மாதாவாலும் அதுக்குத் தாயாய்த் தாயினுமாயின செய்யுமத்தாலும் பிறப்பிக்குமது இருவர்க்கும் ச்ரேஷ்ட ஜன்மம்" என்ற சூர்ணிகை இங்கே அநுஸந்தேயம். திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்திற்கு [குடல்] நடுப்பாகமாவது நமஸ்ஸு. அதை விளக்கம் செய்பவர் ஆசார்யர். ஸ்வரூப விரோதி உபாயவிரோதி ப்ராப்யவிரோதி என்ற மூவகை விரோதிகளையும் கழிப்பதன்றோ நமஸ்ஸு; ஸ்வரூபாம்சத்திலும் உபாயாம்சத்திலும் உபேயாம்சத்திலும் தாங்கள் உஜ்ஜ்வலர்களாயிருந்து தமர்களையும் உஜ்ஜ்வலர்களாக்குமவர்- தாயைக் குடல்விளக்கம் செய்பவர் என்றதாயிற்று [தாமோதரன்] தாம்பினால் கட்டுண்டவனென்பது கருத்து. கண்ணன் தாம்பினால் கட்டுண்டது தன்னுடைய இச்சையினாலத்தனையொழிய கருமம் காரணமாகவன்று. அவ்வளவேயுமல்லாமல் அந்த தாமபந்தம் அவனுக்கு தேஜஸ்கரமாயும் நின்றது. அதுபோலவே ஆசாரியர்களும் இந்நிலவுலகில் பத்தஸம்ஸாரிகளிலே ஒரு கோவையாய் பந்தத்திற்கு உட்பட்டிருந்தது கருமத்தினாலன்றிக்கே பகவதிச்சையினாலாயது. அதுதானே அவர்களுக்கு தேஜஸ்கரமாயும் நின்றது. ஆக இத்தன்மையைப் பற்றி ஆசார்யனைத் தாமோதரனென்னத் தட்டில்லை. இங்ஙனமே கண்டுகொள்க.

### — ஆழிமழைக்கண்ணாவின் அந்தரங்கப்பொருள் விருந்து —

பகவத்விஷயத்தில் அவகாஹிப்பதும் ஞானத்துறைபடிந்தாடுவதுமே நீராடவென்றதின் கருத்தாயின் ஆழிமழைக்கண்ணாவென்று மேகதேவதையை விளித்து மழைபெய்ய நியமிப்பானேன்? என்று கேள்வியெழும். நீராட வென்றதன் அந்தரங்கப்பொருளை உணர்த்தியதுபோல மழைபெய்ய நியமித்த இதன் அந்தரங்கப் பொருளையும் உணர்த்துகின்றேன். பூருவாசாரியர்களின் ஒரு ச்லோகம் கேளீர்;

"லக்ஷ்மீநாதாக்க்யஸிந்தௌ சடரிபுஜலத: ப்ராப்ய காருண்யநீரம்
நாதாத்ரௌ அப்யஷிஞ்சத் ததநு ரகுவராம்போஜசக்ஷுர்ஜ்ஜராப்யாம்,
கத்வா தாம் யாமுநாக்க்யாம் ஸரிதம், அத யதீந்த்ராக்க்யபத்மாகரேந்த்ரம்
ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி ஸததம் தேசிகேந்த்ரப்ரமௌகை:" என்பது.

23. இதன்பொருளாவது, நம்மாழ்வாராகிற காளமேகம் ச்ரிய:பதியாகிற கடலிலேபுக்குக் கருணையாகிற நீரை முகந்துகொண்டு ஸ்ரீமந் நாதமுனிகளாகிற மலையினுச்சியில் வர்ஷிக்க, அந்த மழை உய்யக்கொண்டார் மணக்கால்நம்பிகளாகிற இரண்டு அருவிகளாலே பெருகி யமுனைத்துறைவர் (ஆளவந்தார்) என்னும் ஆற்றில் தங்கி அங்கு நின்றும் பெருகி எம்பெருமானாராகிற ஏரியை நிறைத்து [வீராணத்தேரியின் தீர்த்தம் எழுபத்துநான்கு மதகுகள்வழியாகப் பெருகிப் பல ஊர்களிலே பாயுமாபோலே] எழுபத்துநான்கு ஸிம்ஹாஸனாதிபதிகளின்வழியாக ஸம்ஸாரி சேதநர்கள் பக்கலிலே இடையறாது பெருகிக்கொண்டிருக்கின்றதென்கை

24. ஆக, நம்மாழ்வார்போன்றவொரு ஆசார்யரை ஆழிமழைக்கண்ணு வென்று விளித்து, *லக்ஷ்மீ நாதஸமாரம்பாம்--குருபரம்பராம்* என்கிறபடியே கருணைக்கடலான எம்பெருமான் தொடங்கி நிகழ்கின்ற ஆசார்யபரம்பரையில் ப்ராப்தமான அர்த்தங்களை மேலெழக்கொள்ளாமல் உள்புக்குமுகந்துகொண்டு, திவ்யமங்கள விக்ரஹச்சாயையினால் தேவபிரானுடைக் கரிய கோலத்திருவுரு உள்ளேவிளங்கும்படியைக் காட்டிக்கொண்டு திருவாழியாழ்வானைப்போல் விரோதி நிரஸநஞ்செய்துகொண்டும், ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வானைப்போல் கம்பீரமான திருமிடற்றோசையைக் காட்டிக்கொண்டும் ஸ்ரீஸூக்திகளைத் தாராளமாகப் பெய்து எங்களை யுஜ்ஜீவிப்பித்தருள வேணுமென்கிற பிரார்த்தனையே அந்தரங்கப் பொருளென்னத் தட்டில்லை.*

— ஆசார்ய மேகஸாதர்ம்ய நிரூபண விருந்துகள் பத்து —

*ஆழிமழைக்கண்ணுவென்று ஆசார்யச்ரேஷ்டரே விளிக்கப் படுகிறாரென்றதற்குப் பொருத்தமாக மேகத்திற்கும் ஆசார்யர்க்கும் பத்து வகையான ஒப்புமைகள்.

25. (1) மேகமானது உப்புக்கடலிலுள்ள க்ஷாரமான ஜலத்தையும் தான் முகந்து மிக மதுரமாக்கிப் பெய்கின்றது. அதுபோல் ஆசாரியர், நால்வேதக் கடலிலுள்ளனவாய் மந்தமதிகளுக்கு தூரவகாஹங்களாய் அபோக்யங்களான அர்த்தங்களைத் தங்களுடைய திருநாவீறு கொண்டு பரம போக்கியமாக்கி உபகரிப்பர்.

26. (2) மேகமானது "உயிரளிப்பான் மாகங்களெல்லாந் திரிந்து" (திருவிருத்தம் 32) என்றருளிச் செய்தபடியே லோகரக்ஷணார்த்தமாகப் பெய்யவேண்டுமிடங்களிற் சென்று பெய்வதுபோல, ஆசாரியர் "எண்டிசையும் பேர்த்தகர நான்குடையான் பேரோதிப் பேதைகாள்! தீர்த்தகரராமின் திரிந்து" என்கிற பூதத்தாழ்வாருடைய நியமனப்படியே "ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜந கிரிம்..................ஸாலக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி:" என்னும்படியாக ஸகல திவ்ய தேசங்களிலும் ஸகல க்ஷேத்ரங்களிலுமெழுந்தருளி ஆத்மோஜ்ஜீவநார்த்தமாக அர்த்தங்களைப் பொழிவர்.

27. (3) மேகமானது மழைபெய்து பள்ளமான விடங்களையும் நிரப்புவது போல ஆசாரியரும் ஸதுபதேச வ்ருஷ்டிகளைச் செய்து நீசர்களாயிருப்பவர்களை உத்துங்கர்களாக்குவர்.

28. (4) மேகமானது எப்போதும் வர்ஷியாது; காலவிசேஷங்களிலேயே வர்ஷிக்கும்; இங்ஙனே ஆசாரியரும் சில சில ஸமயவிசேஷங்களைக் குறிக்கொண்டு ஸதுபதேசவர்ஷங்களைச் செய்வர்.

29. (5) மேகமானது ப்ராப்த காலங்களில் பெய்யாவிடில் உலகில் பலவகைப் பீடைகள் உண்டாகின்றன. அதுபோல் ஆசாரியரும் ஸமயங்களில் ஸதுபதேசங்களைச் செய்தருளாவிடில், தேஹாத்ம ப்ரமம் ஸ்வஸ்வாதந்த்ர்ய ப்ரமம் அந்யசேஷத்வ ப்ரமம் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வய யோக்யதாப்ரமம், பாந்தவாபாஸ லோலத்வம், விஷய ஸங்கம் முதலான பல பீடைகள் தோன்றும். இவை ஆசார்யோபதேசத்தாலல்லது கழியமாட்டா.

30\. (6) மேகம் எவ்வளவு வர்ஷித்தாலும் த்ருப்தியடைவது மில்லை, கைம்மாறு கருதுவது மில்லை. அதுபோலவே ஆசாரியரும் கைம்மாறு கருதாமல் எவ்வளவு உபதேசித்தும் த்ருப்தியடையாமலே மேன்மேலு முபதேசித்துக்கொண்டேயிருப்பர்.

31\. (7) மேகம் சில காலங்களில் சில நீர்த்துளிகளைப் பெய்து ஓய்கிறது; மற்றொருகால், போதும்போது மென்னும்படியாக அபரிமிதமாய் வர்ஷிக்கிறது. இங்ஙனமே ஆசாரியரும் சில ஸமயம் மந்த்ரோபதேசமென்று சிஷ்யர் செவியிலே சில அக்ஷரங்களைச் சொல்லி நிற்பர்; மற்றொருகால் [காலக்ஷேபக்ரந்த ப்ரவசனம் செய்யுமிடத்து] ச்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராண உபய வேதாந்த ரஹஸ்ய ஸாரார்த்தங்களை அபரிமிதமாக வர்ஷித்து 'இது என்ன அதிவ்ருஷ்டி!' என்று வியப்புறச் செய்வர்.

32\. (8) மேகம் ஊஷரங்களிலே வர்ஷித்து நீரை நிஷ்ப்பலமாக்குகிறது; சிப்பிகளிற் பெய்து முத்துக்களை யுண்டாக்கி ரத்ன பூஷணங்களுக்கு உதவுகிறது. இப்படியே ஆசாரியரால் சில வ்யக்திகளிடத்தில் உபதேசிக்கப்படும் அர்த்தங்கள் அநவதானத்தினாலும் விஸ்மரணத்தினாலும் அப்ரயோஜனமாகின்றன. சில மேதாவிகள் பக்கலிலோ வென்னில் விசேஷமான புஷ்டியை யடைந்து ஸ்ரீவசந பூஷணம், உபதேச ரத்தினமாலை என்னும் பெயர்களால் ஆத்மாலங்கார ஹேதுக்களாகின்றன.

33\. (9) மேகம் பெய்த நீரானது நதிகளிலும் தடாகங்களிலும் கிணறுகளிலும் சென்று சேர்ந்து ஸர்வோபஜீவ்யமாகின்றது; வேறிடங்களிற் சேர்ந்து ஒருவர்க்கும் கொள்ளத்தகாததாக ஆகின்றது. அதுபோலவே ஆசார்யர் ஸத்பாத்ரங்களில் வர்ஷிக்கும் அர்த்த விசேஷங்கள் ஆசார்ய பரம்பரையாய் க்ரஹித்து அநுபவிக்கத் தக்கதாயும், அபாத்ரங்களில் தந்த அர்த்தங்கள் பழுக்கக் காய்ச்சின இரும்பிலே விட்ட தண்ணீர்போல் அஸத் கல்பங்களாயும் ஆகின்றன.

34\. (10) மேகமானது "எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள், மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்" (பெருமாள் திருமொழி) என்கிற படியே, பயிர், சாதகபக்ஷி முதலிய அநந்ய கதிகளால் எதிர்பார்க்கப் பட்டிருந்து அவற்றுக்கு உபகாரகமாயும், "நீர்காலத்து எருக்கிலம்பழவிலைபோல் வீழ்வேனை" (நாச்சியார் திருமொழி) என்கிறபடியே எருக்கஞ் செடிகளிற் பெய்து நஷ்டத்தை விளைப்பதாயும் ஆகிறது. அதுபோல, ஆசார்யதிவ்ய ஸூக்திகளும் அநந்யகதிகளால் குதூஹலத்தோடு எதிர் பார்க்கப்பட்டு உபயோகங்கொள்ளப்படுவனவாய், பிறரிடத்திலே பெருகி "சாறுவாகமத நீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே சாக்கியக் கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரி முறித்திட" (ஆர்த்திப் பிரபந்தம்) என்கிறபடியே அநர்த்த ஹேதுக்களாய் முடியும். இங்ஙனே மற்றும் பல வகையான உவமைப்பொருத்தங்கள் காணலாம்.

இவ்வகையான சுவைப்பொருள்களையறிய இன்னொருபிறவி பிறக்கவேணும்.

## ஆழ்வார் திருநகரியில் ஆனந்தவெள்ளம் (விருந்துகள் 14.)

35. உடல்நிலையை நோக்கி இந்த ஆயுச்சேஷத்தில் பாவியேனுக்கு இனி திவ்யதேச ஸேவாப்ரஸக்தியில்லை யென்று அறுதியிட்டிருந்தகாலத்திலே அசிந்திதமாகச் சில திவ்யதேசங்களை ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. "விதிவாய்க்கின்று காப்பாரார்? "விதிவாய்க்கின்றுவாய்க்குங் கண்டீர்" என்கிற ஆழ்வார் பாசுரங்கள் பழுதாகுமோ? ஸ்ரீஸக்ஷேத்ரநாகரஸ்வாமியென்று ப்ரஸித்தராய் [அடியேனுக்கு ஸம்பந்தியான] ஸ்ரீமதுபயவே. இளையவில்லி சடகோபாசாரியர்ஸ்வாமிக்கு நேற்று ஆனி அவிட்டத்தில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் ப்ராப்தமாயிற்று. ஸ்வாமி சில ஸம்வத்ஸரங்களாகத் திருவரங்கம் பெரிய கோயிலில் வாழ்ந்துவந்தாலும் ஆழ்வார் திருநகரி யாசார்யபுருஷரேயாதலால் இந்த ஷஷ்டியப்தபூர்த்தி யுத்ஸவத்தை அவ்விடத்திலேயே கொண்டாடுமாறு சிஷ்யவர்க்கங்கள்பண்ணின ப்ரார்த்தனைக்கிணங்கி, திருநகரியிலேயே திருமூலநன்னாள் முதலாக ஐந்துநாள் உபயவேத புராணேதிஹாஸ பாஷ்ய பகவத்விஷயாதி பாராயணச் சிறப்புடன் ஒரு மஹோத்ஸவமாகவே கொண்டாடப்பட்டது. இதில் அந்வயித்து ஸத்தை பெறுவதென்கிற ஒரு வியாஜத்தினால் திருநகரிக்கு விடை கொள்ளும் பாக்கியம் வாய்த்தது. "அம்ருதஸாகராந்தர்நிமக்நஸர்வாவயவ:" என்று ஸ்வாமி யெம்பெருமானார் ஸாதித்தபடியே பெற்ற பேறுதன்னை அடைவே விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன். அடியேன் ஸங்கல்பித்த அறுநூறு விருந்துகளில் மனமுவந்த விருந்துகளிவை.

— மங்களாசாஸன சித்ரபத்யமாலிகா விஜ்ஞாபனம் —

36 ப்ரஸ்தாவித்த ஸ்ரீமத் இளையவில்லி ஸ்வாமி ஸாதாரண ஸம்வத்ஸரம் ஆனித்திங்கள் அவிட்ட நன்னாளில் அவதரித்தவராதலால்

"ஸாதாரணஸமாயநெ அவஷாவி ஶ்ரவிஷ்டா நக்ஷத்ரெ ஜாதோ
வாநுயநிஷாரீ விரம ஜயது" என்று ஆசாஸநவாக்யமிட்டு

இதன் ஒவ்வோரக்ஷரத்தையும் ஒவ்வொரு பாதத்திற்கும் முதலெழுத்தாகவைத்து, ஸ்வாமியின் திருநாமமும் ஆழ்வார் திருநாமமும் ஒத்திருக்கையாலே ஆழ்வார் துதியாக அமைத்து ஏழு சுலோகங்கள் விஜ்ஞாபனம் செய்திருந்தேன். சுலோகங்களின் அமைப்பு முழுவதும் நம்மாழ்வார் துதியேயாதலால் ஆழ்வார் ஸன்னிதியிலேயே முன்னணித் திருமண்டபத்தில் இதை உபந்யஸிக்கும்படி ஸகல ஸ்வாமிகளும் ஏககண்டமாக நியமித்ததனால் இரண்டுநாள் மாலைவேளைகளில் அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. அவ்வநுபவத்தைப் பூர்த்தியாக இங்கே வெளியிட அவகாசமில்லை; அவற்றில் முதல் சுலோகந்தையும் முடிவு சுலோகத்தையும் மட்டுமே இங்கு ஸம்க்ஷேபமாக விவரிக்கிறேன். மேலே குறித்த மங்களாசாஸன வாக்யத்தில் முதல் நாலெழுத்து ஸா தா ர ண என்பது. முடிவு நாலெழுத்து ரம் ஜயது என்பது. இவ்வெட்டெழுத்துக்கான இரண்டு சுலோகங்களை விவரிக்கிறேன்.

𑌸𑌾𑌮𑍍𑌯𑌂 𑌵𑍇𑌦𑍋𑌪𑌦𑍇𑌷𑍍𑌟𑍍𑌰𑌾 𑌦𑍍𑌵𑌿𑌯𑍁𑌗𑌮𑍁𑌖𑌵𑌤𑌾 𑌵𑍇𑌧𑌸𑌾 𑌧𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑌂
𑌧𑌾𑌰𑌾𑌸𑌮𑍍𑌪𑍂𑌰𑍍𑌣𑌦𑍃𑌕𑍍𑌤𑍍𑌵𑌂 𑌶𑌤𑌸𑍃𑌷𑍍𑌟𑍇𑌚 𑌤𑌮𑌾 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌨𑍍𑌤𑌂 𑌸𑍍𑌵𑌵𑌾𑌗𑍍𑌭𑌿𑌃 ।
𑌰𑌤𑍍𑌨𑍈𑌰𑍍𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌪𑍂𑌰𑍍𑌣𑍈𑌰𑍍𑌮𑌧𑍁𑌰𑌲𑌲𑌿𑌤𑌵𑌾𑌗𑍍𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑍈𑌸𑍍𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌤𑍁𑌲𑍍𑌯𑌂
[illegible] 𑌶𑌠𑌾𑌰𑌿𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

— ஸாம்யம் வேதோபதேஷ்ட்ரா த்வியுகமுகவதா வேதஸா தாரயந்தம் —

37. வடமொழி வேதத்திற்கு ப்ரவர்த்தகன் நான்முகன் என்பது "அநாதி நிதநா ஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா" இதிப்ரமாண ஸித்தம். வெவ்வேறு வகைப்பட்ட ஸ்வரஸந்நிவேசத்தையுடைய நான்கு வேதங்களையும் நான்கு முகங்களினால் வெளியிட்டான் விரிஞ்சன். அங்ஙனே திருவாய்மொழியை வெளியிட்ட நம்மாழ்வாரும் நான்கு முகங்களாலே வெளியிட்டார். எங்ஙனே யென்னில்; (1) தாமான ஆண் தன்மை யழியாதே பேசினார் எழுபத்துமூன்று பதிகங்கள். தாய்முகத்தாலே பேசினார் ஏழு பதிகங்கள். தலைவிமுகத்தாலே பேசினார் பதினேழு பதிகங்கள். தோழிமுகத்தாலே பேசினார் மூன்று பதிகங்கள். ஆக இங்ஙனே நான்கு முகங்களுடைமையாலே நான்முகனோடொப்பர் ஆழ்வார்.

— தா(ரா)ராஸம்பூர்ணத்ருக்த்வம் சதஸ்ருஷ்டேச தமா ஸத்வமந்தம் ஸ்வவாக்பி: —

38. மேலே விவரித்தபடி நான்கு முகமாக வெளிவந்த பாசுரங்களில்[நான்கு நிலைமைகளிலும்] மல்கு நீர்க்கண்ணராயிருக்கும்படியை வெளியிட்டது ஆழ்வார்க்கு அஸாதாரணமான விசேஷம்; *என்றென்றேங்கியழுதக்கால்* ஆகாயத்தை நோக்கியழுவன் தொழுவனே * என்றிவை முதலான பாசுரங்கள் தாமான தன்மையில் அழுதபடியைக்காட்டுவன. * கண்ணீர்மிகக் கலங்கி * கண்ணநீர் கைகளாலிறைக்கும் * என்றிவை முதலான பாசுரங்கள் தாய் பேச்சினால் தம்முடைய அழுகையைக் காட்டுவன, * எம்மாற்றுமை சொல்லியழுவோமை * மல்கு நீர்க்கண்ணேற்கு * என்றிவை முதலான பாசுரங்கள் தலைவி பேச்சினால் தம்மழுகையைக் காட்டுவன. *குவளையொண்மலர்க் கண்கள் நீர்மல்க* மழைபெய்தாலொக்கும் கண்ண நீரினொடு * என்றிவை முதலான பாசுரங்கள் தோழி பேச்சால் தம் அழுகையைக் காட்டுவன. அழுகையைக் காட்டுவதனால் என்ன ஏற்றமென்னில்; " அழுநீர் துளும்ப ... இவரலமாப்பு அவர்களுக்குப் புத்ர வியோகத்திலே " என்னு மாசார்ய ஹ்ருதய சூர்ணையினால் அவ்வேற்றமறிக. மஹர்ஷிகள் புத்ர வியோகத்தாலே அழுதார்கள், ஆழ்வார் பகவத் விச்லேஷத்தாலே அழுதார் என்றுணர்க.

— ரத்நைர் வேதார்த்த பூர்ணைர் மதுரலலித வாக்விஸ்தரைஸ் ஸிந்துதுல்யம் —

39. ஸ்ரீமந்நாதமுனிகள் *பக்தாம்ருதம்* என்கிற சுலோகத்தில் * நமாம்யஹம் த்ராவிட வேதஸாகரம் * என்று திருவாய்மொழியைக் கடலாகப் பேசினார். கூரத்தாழ்வான் (ஸ்ரீ வைகுண்டஸ்தவே) *பக்திப்ரபாவேத்யாதி ச்லோகத்தில் *ஜீயாத் பராங்குசபயோதி:* என்று நம்மாழ்வாரையே கடலாகப் பேசினார். ஆழ்வாரைக் கடலாக ரூபணம் செய்வதற்கிணங்கச் சில பொருத்தங்களை ஸாதிக்கையில் வேதார்த்தரத்னநிதி : என்றது மிகமுக்கியமான பொருத்தம். கடல் ரத்ந

கரமாயிருப்பதுபோல ஆழ்வார் வேதார்த்த ரத்னகரமாயிருக்கிறாரென்று ஆழ்வார்க்கும் கடலுக்கும் ஸாம்யம் நிர்வஹிக்கப்பட்டது. வேதார்த்த ரத்ன நிதித்வம் ஆழ்வார்க்குச் சொன்னது திருவாய்மொழிக்குச் சொன்னபடியாகுமத்தனை. "யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்கலஸூத்ரதாம்" என்று புகழப்பெற்ற கூரத்தாழ்வான் வேதார்த்த ரத்ன நிதியென்று ஸாதித்தபோது 'ஆழ்வார் வேதார்த்த ரத்ன நிதிதானோ?' என்று நம்போல்வார் சிந்திக்க அவகாசமேயில்லை. அடியேனுடைய சொற்பொழிவுகளில் வேதார்த்த ரத்னங்கள் பலபலவும் எடுத்துரைக்கக் கேட்டவர்களும் பலர். ஆக இத்தன்மையால் கடலோடொத்தவர் ஆழ்வார்.

— ணத்வம் நஸ்யேவ யுக்தாம் விக்ருதிமதிவஹந்தம் சடாரிம் ப்ரபத்யே —

40. உண்மையில் புருஷச்ரேஷ்டராகத் திருவவதரித்த ஆழ்வார் பெண்மையெய்திப் பேசுவது எதற்காக வென்றும், இங்ஙனே விகாரமெய்துதல் தகுதியற்றதென்றும் சில சிற்றறிவாளர் பேசுவதுண்டு; அவர்களைத் தெளிவிக்கும் வழி கேளீர்; வடமொழியில் (ந)என்னுமெழுத்து (ண)என்னுமெழுத்தாக விகாரமடையக் காண்கிறோம். நதி:- ப்ரணதி:; நமதி- ப்ரணமதி என்றிப்படிப்பட்ட விடங்களிலே நகாரம் ண காரமாக விகாரமடைவது "ரஷாப்யாம்நோ ணஸ் ஸமாநபதே" என்கிற சாஸ்த்ரமடியாக ஆகிறாப்போலே ஆழ்வாருடைய ஆண்மைக்கு உண்டாகிற பெண்மை விகாரமும் சாஸ்த்ரஸித்தமே; எந்த சாஸ்த்ரமென்னில், *ஸ்வாமித்வாத்மத்வ சேஷித்வ பும்ஸ்த்வாத்யாஸ் ஸ்வாமிநோ குணா:. ஸ்வேப்யோ தாஸத்வ தேஹத்வ சேஷத்வ ஸ்த்ரீத்வ தாயிந:* என்று உபபத்திஸூசகமான சாஸ்த்ரம். எம்பெருமானுடைய ஸ்வாமித்வம் நமக்கு ஸ்வத்வத்தைக் கொடுக்குமாபோலவும், அவனுடைய ஆத்மத்வம் நமக்கு சரீரத்வத்தைக் கொடுக்குமா போலவும், அவனுடைய சேஷித்வம் நமக்கு சேஷத்வத்தைக் கொடுக்குமா போலவும் அவனுடைய புருஷோத்தமத்வம் நமக்கு ஸ்த்ரீத்வத்தைக் கொடுத்தே தீருமாயிற்று ஆக இப்படி ஸம்ப்ரதிபன்னமான ஸ்த்ரீத்வத்தை யடைபவருமான ஆழ்வாரைச் சரணம் புகுகின்றேனென்றதாயிற்று. ... ... ... *

— இனி முடிவான சுலோகம் —

41. [illegible]
[illegible]
[illegible] 1
[illegible] ||

ரம் ஜ ய து என்கிற நான்கெழுத்துக்களுக்காக இட்ட இந்த சுலோகத்தின் கருத்து இது காணீர்;- பண்டு திருநகரியிலே யெழுந்தருளியிருந்த மணவாள மாமுனிகளை தர்சன நிர்வாஹார்த்தமாக ஆழ்வார் திருவரங்கந்திருப்பதி யேறப் போகவிட்டாப்போலே இவ்விளையவில்லி ஸ்வாமியையும் ஸ்ரீரங்கப்ராந்தத்திலுள்ள ஸம்ஸாரிகளை உபதேசாதிகளாலே திருத்திப் பணிகொள்வதற்காக அவ்விடத்தேறப்போகவிட்டு ஸ்ரீஸூக்திரத்நாகரபிருதையும் மற்றும் ஸகல ஸம்பத்ஸம்ருத்தியையுமளித்தருளின ஆழ்வாரை நிச்சலும் துதித்து மகிழ்வெய்துகிறோமென்கை.

## ஆழ்வார் ஸன்னிதி நித்யக்ரமத்தின் அத்புதவைகரி

42. மேலே விவரித்த ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவாநுபவாபதேசத்தாலே அங்கு ஆழ்வாருடைய நித்ய கோஷ்டியையும் நைமித்திக கோஷ்டியையும் அநுபவிக்க ப்ராப்தமான ஆனந்த விசேஷம் வாழ்நாளுள்ளளவும் மறக்க முடியாதது. ஏற்கெனவே பல ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு சில பர்யாயம் இவ்விடம் விடைகொண்டு ஸேவித்திருந்தேனெனினும் அப்போது விசேஷோத்ஸவ ஸந்தர்ப்பங்களினால் நித்யக்ரமத்தை யநுபவிக்க அவகாசமில்லையாயிருக்கும் போலும். இப்போது மூன்றுநாள் பெற்ற அநுபவம் எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் நெஞ்சை விட்டகலாது. "மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணுமினத்தாரை யல்லா திறைஞ்சேன்" என்று தனியனிட்ட வொரு பெரியார் இந்த நித்ய க்ர ம த் தி ல் நெஞ்சைப் பறி கொடுத்தேயிட்டனரென்று அறுதியிட்டேன். நாள்தோறும் காலை ஒன்பது மணி முதல் பதினொரு மணி வரையில் ஆழ்வார் திருமுன்பே ப்ராப்தமாகு மநுபவம் இவ்விருள் தருமா ஞாலத்திற்கு மிகமிக வியக்கத்தக்கதேயாகும். ப்ரதான கல்பம் அநுகல்பம் என்று இரண்டுண்டே; இங்கு ப்ரதான கல்பமொழிய அநுகல்பமென்பது எதிலுமில்லை. பெரிய திவ்ய தேசங்களிலுங்கூட அலங்காரத் திருமஞ்சனம் பஞ்சபர்வங்களில் மட்டும் நடைபெறும்; அதுவும் பெரும்பாலும் அநுகல்பமேயாகும். [இது தேவப்பெருமாள் ஸன்னிதி யநுபவத்தைக் கொண்டு எழுதினபடி.] ப்ரஸ்துதமான ஆழ்வார் ஸன்னிதியில் தினப்படியாகத் திருமஞ்சனம் முதலாக இப்போது நடைபெறும் வியவஸ்தை எந்த காலத்தில் எந்த மஹாநுபாவர் செய்ததோ அறியோம். ராஜாஜ்ஞைகூட இங்ஙனே செல்லமாட்டாதென்பது திண்ணம். அவரவர்கள் நேரில் ஸேவித்து உள்குழைய வேண்டும் விஷயங்களை என்னவென்று எழுதுவது?

43. ஸ்ரீமதுரகவி வம்சத்தவர்கள் அண்ணாவியார் என்று வழங்கப்படுகிறார்கள்; அவர்கள் முறைவட்டமாகத் திருமஞ்சனக் கவிஸேவிக்குமழகு 'என்னுயிரை யுருக்கி யுண்ணுமே' என்னநிற்பதாகும். அர்ச்சகரும் ஸம்க்ஷேபமாகக் கவிஸேவிக்கிறார், திவ்யப்பிரபந்தங்களைத் திருநக்ஷத்ரக்கிரமமாக ஸேவித்து இருபத்தேழுநாள்களில் உபதேசரத்தினமாலை திருவாய்மொழி நூற்றந்தாதியுட்பட நாலாயிரத்தையும் ஆழ்வார் திருச்செவி சாத்தியருளுமழகு இந்நிலவுலகில் வேறெங்கும் காணக்கூடியதன்று. அரையரும் தினப்படியாக ஸமயம் தவறாது காத்திருத்து தொடக்கமும் சாற்றும் தேவகானத்திலே ஸேவிக்குமழகும் அழகியதே. இந்த அருளிச்செயல் ஸேவாக்ரமத்தை ஏற்கெனவே (ஸ்ரீராமாநுஜனில்) வெளியிட்டிருக்கிறேன். ஸ்தலாசார்ய புருஷர்கள் பெரும்பாலும் அருளிச்செயல் வல்லவர்களாய் * மேம்பொருள் போகவிட்டுப் பாசுரத்திற்கு இலக்கானவர்களாயிருப்பதால் *ஊழிதோறூழியோவாது வாழியவென்கிற மங்களாசாஸனம் ஒருநாளும் வழுவாமே நிகழ்ந்து வருவதாயிருக்கின்றது. இப்பெரும்பாக்கியத்தை திருவாய்மொழிப்பிள்ளை ஸந்ததியார்

*பலரடியார்முன்பருளிய* என்னும் க்ரமத்திலே பெற்றுவருவதை இத்திருநகரியில் ஒருவர் தப்பாமல் அனைவரும் ஒருமிடறாகச் சொல்லக் கேட்டும் கட்கூடாகக் கண்டும் உள்ளம் பூரித்தேன். ஒன்றான திருவாய்மொழிப்பிள்ளையின் தனியனில் *ப்ரஸாதலப்த பரமப்ராப்ய கைங்கர்யசாலிநே* என்று புகழப்பட்ட கைங்கர்யம் இதிஹாஸப்படி வேறொன்றாயினும் அவருடைய திருவம்சஸ்தர்கள் அநுபவித்துவரும் கைங்கரியத்திற்கு அது ஈடாகாதென்னத்தட்டில்லை.

— வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே —

44. ஆழ்வார் ஒரு பதிகத்திற்குப் பயன் கூறுமிடத்து *வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே* என்கிறார். [திருவாய்மொழி நாலாம் பத்தில் – மூன்றாம் பதிகத்தில்.] இப்பாசுரத்தில் வையம்மன்னி வீற்றிருத்தல் என்கிறபலனும் விண்ணுமாள்வர் மண்ணூடே என்கிற பலனுமாக இரண்டு பலன்கள் ஸாதிக்கிறார்; மண்ணூடே விண்ணுமாள்வதென்கிற பலன் எப்படியானாலும் வையம்மன்னி வீற்றிருப்பரென்று ஆழ்வார் திருவுள்ள முகந்து ஸாதித்த பலன் சால்வழகியது; விண்ணுமாள்வர் மண்ணூடே என்பதற்கு-இந்த லீலாவிபூதியிலிருந்து கொண்டே பரமபதத்தையும் ஆளப் பெறுவர்கள் என்று பொருள். இதை ஆசாரியர்கள் விவரித்தருளுகையில் இங்கிருந்து கொண்டே பரமபதம் தங்கள் சிறுமுறியின்படி செல்லுமாறு ஆளப் பெறுவர்களென்றும், அங்குப் போன பிறகு அங்குள்ள நித்ய முக்தர்கள் 'ஆண்மின்கள் வானகம்' என்று சொல்ல அதன் பிறகு ஆளுகையன்றிக்கே இங்கிருந்து கொண்டே ஆளப் பெறுவர்களென்றருளிச் செய்கிறார்கள். அடியேனுக்குத் தோன்றுவதாவது—ஆழ்வார் திருமுன்பே அருளிச் செயல் வல்லவர்கள் இப்படி திருவோலக்கமாக எழுந்தருளி யிருந்து *ஊற்றின்கண் நுண் மணல் போலுருகா நிற்பர் நீராயே* என்றும் *ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகு முருகுமே* என்றும் ஆழ்வார் தாமே அருளிச்செய்தபடி தாங்களும் உருகிக்கொண்டு கேட்பாரையும் உருகச் செய்து கொண்டு அருளிச் செயலை ஸேவிக்க, அவர்களிடையே இருக்கப் பெறுவதானது விண்ணையாள்வதற்கும் மேற்பட்ட பேறன்றோ, ஆகவே வையம்மன்னி வீற்றிருத்தல் ஒருபலன், மண்ணூடே விண்ணு மாளுகை மற்றொருபலன் என்று கொள்ளாமல் இவையிரண்டும் சேர்ந்து ஒரே பலன் என்று கொள்ளலாம். ஆழ்வார் தம்முடைய ஸ்ரீஸூக்திகளின் இனிமையைத்தாமே கண்டு இதை ஓதுமவர்கள் ஒருநாளும் பரமபதம் செல்லப்பெறாதே இந்நிலவுலகி லிருந்து கொண்டே திருவாய்மொழியையே ஓவாத ஊணாக உண்டு கொண்டிருக்கக் கடவர்கள் என்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்தவிது ஆச்சரியமோ.

— தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன் —

45. நம்மாழ்வார் தாமே மேலே ஒன்பதாம் பத்தில் * தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன் மாலைகள் சொன்னேன்* என்கிறார்; இந்த ஸ்ரீஸூக்தியின் ஔதார்யத்தை என்னென்போம். தம்முடைய கவித்திறமையையும் பக்தி ப்ரகர்ஷத்தையும் காட்டுவதற்காக வன்றிக்கே தொண்டர்கள் அமுதுண்ண வேணுமென்கிற திருவுள்ளங்கொண்ட ஆழ்வார் அருளிச் செய்து வைத்ததும், அதற்குச் சேர நாத

முனிகள் பக்தாம்ருதம் என்று தனியனிட்டருளினதும், ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர்போல்வாரான ஆசாரியர்கள் "நமக்கு ஸம்ஸ்க்ருத வேதமிருக்க இந்தத் தமிழ்ப்பிரபந்தங்கள் ஏதுக்கு? என்று நினையாதே இதை வலக் கண்ணாகவும் வடமொழி வேதத்தை இடக்கண்ணாகவுங் கொண்டதும் விலக்ஷண பகவத் ஸங்கல்பமென்னுமித்தனை.

— ஆழ்வார்க்கும் ஒருகுறையுண்டு —

46. * கங்குலும் பகலும் பதிகத்திற்குப் பயனுரைக்கின்ற ஆழ்வார் *முகில் வண்ணவானத்து இமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே* என்கிறார், அங்ஙனம் பேரின்பவெள்ளத்திலிருப்பு வானத்திலன்று. இந்நிலத்தில்தான், இத்திருநகரியில்தானென்றும், ஆழ்வார் தம்முடைய விபவகாலத்தில் இங்ஙனே பேரின்பவெள்ளத்து ஆழ்ந்திருக்கப்பெறாதது. அவர்க்குப் பெரிய குறையென்றும், நாமே பாக்யசாலிகளென்றும் அங்கே திருவோலக்கத்தில் விஜ்ஞாபித்தேன். *

— பொலிந்துநின்ற பிரான் புறப்பாடு வைபவம். —

47. திருவோண நன்னாளில் பொலிந்துநின்ற பிரானுக்குப் பரமவிலக்ஷணமாக நடைபெற்ற புறப்பாட்டையும் ஸேவிக்க ப்ராப்தமாயிற்று "புறப்பாடழகு பெருமாள் கோயிலில்தான்" (அதாவது காஞ்சியில்தான்) என்றிருந்த வடியேனை மருள்கொண்டவனாக்கிவிட்டது அப்புறப்பாட்டழகு. இரண்டொரு ஸம்வத்ஸரமாக இத் திருப்பதியில் 'மாறன் உபயவேதாந்த பாடசாலை' ஸ்தாபனம் பெற்று நாற்பதைம்பது வித்யார்த்திகளை வளர்த்துவருகையாலே அப்பிள்ளைகளும் பெரியோர்களோடு சேர்ந்து அருளிச்செயல் ஸேவித்ததும் வேதபாராயணம் செய்ததும் அந்த திவ்ய கோஷ்டியை ஸ்ரீமத் பரமஹம்ஸ எம்பெருமானார் ஜீயர்ஸ்வாமி பரம கம்பீரமான தமது திருமிடற்ரோசையினால் சோபிக்கச் செய்தருளினதும் *நித்யஸ்ரீர் நித்ய மங்களமென்று பல்லாண்டு பாடுதற்குரியது; பலகால் பல்லாண்டுபாடினேன்.

— ஸ்ரீமத் பரமஹம்ஸ எம்பெருமானார்ஜீயர்ஸ்வாமி ஸேவை —

48. ஆழ்வார் திருநகரியில் பொலிந்து நின்ற பிரான் ஆழ்வார் தேவஸ்தானம் போலே எம்பெருமானார் தேவஸ்தானமென்று தனிப்பட்டு விளங்குவது இத் தலத்தில். மணவாளமாமுனிகளருளிச் செய்த யதிராஜ விம்சதிக்கு விஷய பூதரும், "ஸ்ரீமந்! யதீந்த்ர! தவ திவ்யபதாப்ஜஸேவாம் ஸ்ரீசைலநாதகருணாபரிணாம தத்தாம்" என்கிற ச்லோக ரத்னத்திற்கு விசிஷ்ய விஷய பூதரும், பவிஷ்யதாசார்யத் திருமேனியென்று குலாவப்படுபவருமான எம்பெருமானார்க்கென்று இத் திருநகரியில் ஒரு தனிப்பட்ட அக்ரஹாரம் சதுர்வேதிமங்கலமென்று மணவாள மாமுனிகளால் திருநாமஞ்சாத்தி நிருமிக்கப் பெற்று அதுதன்னிலே சீருமசிறப்புமுற விளங்குமிந்த தேவஸ்தானம் மாமுனிகள் காலந்தொடங்கியே ஜீயர் ஸ்வாமிகளால் பரம்பரயா பர்பாலிக்கப்பட்டு வருவது ஸ்ரீ வைஷ்ணவவுலகமறிந்தது. இங்கு தற்காலம் ஸேவை ஸாதித்தருளா நின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஜீயர் ஸ்வாமி 'தேஜஸ்வீ யசஸ்வீ ப்ரஹ்மவர்ச்சஸீ" என்று வேத மோதின கணக்கிலே ஸேவை ஸாதித்தருள்வது * நல்லார் நவில் குருகூர் நகர்

ஸ்ரீவைஷ்ணவ ஸர்வஸ்வ மென்னலாயிருந்தது. பொலிக பொலிக பொலிக வென்கிற ஆழ்வார்மங்களாசாஸனம் நன்கு பலித்து வருகின்றதென்று பாவியே னுள்ளம் பொங்கிநின்றது. அடியேனும் பொலிகவென்று காப்பிட்டு வந்தேன். *

## திருக்குறுங்குடி ஸ்வாமியை ஸேவிக்கப் பெறுதல்

49. அடியேன் திருக்குறுங்குடிக்கு விடைகொண்டு பல ஸம்வத்ஸரங்களாயின. *வேதநூற் பிராயம் நூறு புகுந்திருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி பெரிய ஸ்வாமி காலத்திற்குப் பிறகு இப்போதுதான் விடைகொண்டு ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. ஸேவிக்கும்போதே, அஸ்மத்குல கூடஸ்தவிரசித வரவரமுநிசதகத்தில்

"புண்ட்ரைர் த்வாதசபிர் யதாவிதி த்ருதைச் சுப்ரைரதப்ரச்சவி:
தத்தாத்ருக்ச்சரதம்புவாஹபடலீளைந்தர்ய ஸம்பந்நிதி:,
தீபக்த்யாதி குணௌகஸம்ப்ருதயசஸ்ஸந்தோஹஸந்தேஹதா
மூர்த்திஸ் ஸா வரயோகிந: ப்ரதிகலம் ஜாகர்த்து சித்தே மம."

என்றுள்ள ச்லோகமே ஸ்ம்ருதி விஷயமாயிற்று. திருவரையில் சாத்திய செந்துவராடையும் ஈராறு திருநாமமணிந்தவெழிலும் தூமுறுவல் கொண்ட துணை மலர்க் கண்களுமாய் இனிதிருந்த இருப்பு அந்த திவ்யதேசப் பாசுரங்களையே நினைப்பூட்டி "நின்று தோன்றிக் கண்ணுள் நீங்கா நெஞ்சுள்ளும் நீங்காவே—பாவியேன் பக்கத்தவே—என்னெஞ்சம் நிறைந்தனவே—என்றே அநுஸந்தானமாயிற்று. "ப்ரியப்ராயா வ்ருத்திர் விநயமஸ்ருணோ வாசி நியம:" என்று அறுபத்தாறு வருடங்களுக்கு முன்பு சிந்தனை செய்த பவபூதி ச்லோகம் அன்று திடீரென்று நினைவுக்கு வந்தது. அஸ்மத்குலகூடஸ்தர் திருவேங்கடமுடையான் ஸன்னிதியிலே "ஸக்ருத்ஸேவயா நித்யஸேவாபலம் த்வம் ப்ரயச்ச ப்ரயச்ச ப்ரபோ! வேங்கடேச!" என்று ப்ரார்த்தித்ததுபோலவே அடியேனும் ப்ரார்த்தித்து மீளலாயிற்று.

50. அஸாதாரணமான இந்த ஸாதாரண ஸந்தர்ப்பத்திலே ஸ்ரீ ஸ்ரீஸ்வாமியின் மடத்தின் வெளியீடாக அஷ்டாதசரஹஸ்ய முத்ரணம் நிகழ்கின்றதென்று இனிய சொல் செவியுற்று உள்ளம் பூரித்து விடைகொண்டேன்.

## வானமாமலையில் ரஹஸ்யரஹஸ்யார்த்தஸர்வாதம்

51. திருக்குறுங்குடியில் நின்றும் வானமாமலைக்கு விடைகொள்ள நேர்ந்தது. அவ்விடத்தில் வித்வத்பதவாச்யரான ஒரு மஹாஸ்வாமி ஸமீபகாலத்தில் வெளிவந்த ஸ்ரீராமாநுஜனை [முமுக்ஷுப்படி ஸாரார்த்த தீபிகைகொண்ட 258, 259 ஸஞ்சிகையை அபிநிவேசத்தோடு அநுபவித்துக் கொண்டிருந்தவர் அடியேனைக் கண்டவுடனே ஸாதித்தவார்த்தை; — தேவரீருடைய முமுக்ஷுப்படி ஸாரார்த்த

தீபிகையின் முன்னுரையில் *துன்பக்கடலுள் துவள்கின்ற ஸம்ஸாரிகள் நல்வீடு பெறுவதற்கு அர்த்தபஞ்சகஜ்ஞானம் முக்கிய மென்று கூறி அதை விவரித்துக் காட்டிவிட்டு 'இவ்வர்த்த பஞ்சகஜ்ஞானத்தைத் திருமந்த்ரம் த்வயம் சரமச்லோக மென்கிற மூன்று ரஹஸ்யங்களும் வெகு விசதமாகவுண்டாக்குகின்றபடியால் முமுக்ஷுக்களுக்கு இந்த ரஹஸ்யத்ரயமே முக்கியமாக அறியத்தக்கதாயிற்று' என்றெழுதியிருக்கிறீர்: அர்த்தபஞ்சக ப்ரதிபாதனம் திருமந்திரத்தில் மட்டுமே உள்ளதாகக் கேட்டிருக்கிறேன்; மணவாளமாமுனிகளும் அப்படித்தான் ஸாதித்திருக்கிறார்; மூன்று ரஹஸ்யங்களிலும் அர்த்தபஞ்சக ப்ரதிபாதன மிருப்பதாக தேவரீர் எப்படி யெழுதிற்று? த்வயத்தில் அர்த்தபஞ்சக ப்ரதிபாதனம் ஸர்வாத்மநா கிடையவே கிடையாதே, இப்படி அஸம்ப்ரதாயமாக எழுதலாமா? என்று. அங்கு ஸம்க்ஷேபமாக விஜ்ஞாபித்துத் தெளிவு பெறுத்தினேன். [இடையில் விண்ணப்பம்; இவ்விஷயம் ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்களான மஹான்களுக்கு அவச்யஜ்ஞாதவ்ய மென்று கருதி விளக்கமாக விஜ்ஞாபிக்கிறேனிங்கு.]

— முமுக்ஷுப்படி வியாக்கியான ஸ்ரீஸூக்தி ப்ரதர்சநம் —

52. "முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று" என்ற முதல் சூர்ணையின் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் அருளிச்செய்திருப்பதாவது, 'முமுக்ஷுவுக்கு அவச்யஜ்ஞாதவ்யமான ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களை இந்த ரஹஸ்யத்ரயம் உள்ளபடி ப்ரதிபாதிக்கையாலே" என்று. இத்தால், அறியவேண்டுமர்த்தங்களையறிவிப்பதில் மூன்று ரஹஸ்யங்களும் துல்யயோக க்ஷேமமென்பது காட்டப்பட்டது. நநு, ஸ்வரூபோபாய புருஷார்த்தங்கள் மூன்றை ப்ரதிபாதிப்பதாக இதில் சொல்லிற்றேயொழிய ஐந்தையும் ப்ரதிபாதிப்பதாகச் சொல்லிற்றில்லையே யென்னில்; *ஸ்வஜ்ஞாநம் ப்ராபகஜ்ஞாநம் ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபி:, ஜ்ஞாநத்ரயமுபாதேயம் ஏததந்யந் ந கிஞ்சந*. என்கிற ப்ரமாணத்தையெடுத்துக் காட்டி வியாக்கியானித்தருளினதாகையாலே மூன்றென்றது. "ஏததந்யந் ந கிஞ்சந" என்ற போதே மற்றுள்ளவர்த்தமும் இதில் அடங்கிற்றேயாகுமன்றோ? அடங்காதது எது? என்று கேட்டால் வாய்திறக்க வழியுண்டோ? "அதில் ப்ரதம ரஹஸ்யம் திருமந்த்ரம்" என்ற அடுத்த சூர்ணையின் வியாக்கியானத்திலும் "ப்ரணவத்துக்கு மந்த்ரசேஷம் விவரணமானாப்போலே. மந்த்ரசேஷத்துக்கு த்வயம் விவரணமாய் அதுக்கு சரமச்லோகம் விவரணமாயிறே யிருப்பது" என்றுள்ளது மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி. இந்த விவரண விவரணிபாவ ப்ரதிபாதநம் பொருந்த வேணுமாகில் அர்த்தபஞ்சக ப்ரதிபாதநம் த்வய சரமச்லோகங்களிலும் இருந்து தீரவேணுமே. இதை மேலும் மாமுனிகளின் ஸூக்திகொண்டே விளக்குவோம்.

— ஆசார்யஹ்ருதய திவ்ய ஸூக்தி ப்ரதர்சநம் —

53. ஆசார்ய ஹ்ருதயத்திலே "த்வயார்த்தம் தீர்க்க சரணாகதி யென்றது ஸார ஸங்க்ரஹத்திலே" என்பது ஒரு சூர்ணை. ஸாரஸங்க்ரஹ மென்பது பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்த அஷ்டாதசரஹஸ்யத்தில் ஒன்று. அதில் அருளிச் செய்

திருப்பதைத் திருத்தம் பியாரான அழகியமணவாளப் பெருமாள் நாயனுர் எடுத்துக் காட்டுகிருர்; தீர்க்க சரணுகதியான திருவாய்மொழியானது த்வயத்தின் விவரண மென்று ஸாரஸங்க்ரஹத்திலே நிருபிக்கப்பட்டதென்கை. திருவாய்மொழிக்குத் தனியனுக அமைந்த "மிக்கவிறை நிலையும் மெய்யாமுயிர் நிலையும்" என்னும் வெண் பாவினுல் அர்த்தபஞ்சகந்தான் திருவாய்மொழியாயிரத்திற்கும் ப்ரமேய மென்று பகரப்பட்டது. த்வயத்தில் அர்த்தபஞ்சகமில்லையாஞல் அதன் விவரணமெனப் படுகிற திருவாய்மொழிக்கு அர்த்தபஞ்சக ப்ரதிபாதகத்வம் சொல்லக்கூடுமோ வென்று ஆலோசிப்பது. இவ்விஷயம் ஸாமாந்யமானதன்று. இதுவே சிகரமானது.

— மூன்றில் சுருக்கிய ஐந்தையுமித்யாதி காட்டுதல் —

54. ஆசார்ய ஹ்ருதயத்திலேயே "மூன்றில் சுருக்கிய ஐந்தையும்" என்ற விடத்தில் நிதி காட்டுகின்றேன், காண்மின், இங்கு மூன்றில் என்பதற்கு—திரு விருத்தமும் திருவாசிரியமும் பெரிய திருவந்தாதியுமாகிற மூன்று திவ்யப்ரபந்தங் களில் என்பதே அர்த்தமாயிருக்கச் செய்தேயும், இது தந்த்ரேண ரஹஸ்யத்ரயத் தையும் விவக்ஷிப்பதாகக் கொள்வதில் குறையொன்றுமில்லையென்று திருவுள்ளம் பற்றின மணவாளமாமுனிகள் "மந்த்ர ச்லோகங்களில் ஸங்க்ரஹேண உக்தங் களான அர்த்த விசேஷங்களை த்வயத்திலே விவரிக்குமாபோலே பூர்வ ப்ரபந்த த்ரயத்திலும் ஸங்க்ரஹேண சொல்லப்பட்ட அர்த்த பஞ்சகமும்" என்றருளிச் செய்துள்ளார். இத்தால் அர்த்த பஞ்சகமானது திருமந்த்ர சரம ச்லோகங்களிற் காட்டிலும் த்வயத்தில்தான் நன்கு விவரிக்கப்பட்டதென்று ஸுஸ்பஷ்டமாயிற்று.

— முடிவாகச் சீரியநிதியொன்று காட்டுதல் —

55. ஆசார்யஹ்ருதயத்திலேயே "இவற்றுக்கு மந்த்ரவித்யநுஸந்தாந ரஹஸ்யங்களோடே சேர்த்தி" என்பது ஒரு சூர்ணை. நம்மாழ்வாருடைய நான்கு திவ்யப்ரபந்தங்களுக்கும் திருமந்த்ரம் சரம ச்லோகம் த்வயம் ஆகிய இந்த ரஹஸ் யங்களோடே சேர்த்தி—என்பது இதன் பொருள். மந்த்ர ரஹஸ்யம் விதி ரஹஸ் யம், அநுஸந்தான ரஹஸ்யம்என்று யோஜிப்பது.

மந்த்ர ரஹஸ்ய மென்றது (மந்த்ரராஜமான) திருமந்த்ரம்; விதிரஹ ஸ்யமென்றது ஸித்தோபாயத்தை ஸாங்கமாக விதிக்கிற சரமச்லோகம்; அநு ஸந்தான ரஹஸ்ய மென்றது 'மந்த்ரரத்நாநுஸந்தாந ஸந்தத ஸ்புரிதாதரம்' என்கிறபடியே ஸாரஜ்ஞர்களாலே ஸதா அநுஸந்திக்கப்படுகிற த்வயம். இந்த மூன்று ரஹஸ்யங்களிலும் அந்வயிக்கும்படியாக மாமுனிகள் ஒரு விசேஷண மிட்டருளுகிருர்—'ஸகல சாஸ்த்ர தாத்பர்யமான அர்த்த பஞ்சகத்தையும் ஸம்சய விபர்யயமற ப்ரதிபாதிக்குமவையாய்" என்று. இந்த விசேஷணம் திருமந்த்ரத் தில் மட்டும் அந்வயிப்பதன்று; "ப்ரதிபாதிக்குமவையாய்" என்று பன்மையாக ப்ரயோகித்தருளியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. ஒன்றில் மட்டும் அந்வ யிக்குமதாகத் திருவுள்ளம்பற்றிஞல் "ப்ரதிபாதிக்குமதாய்" என்றல்லது இங்ஙனே யிருக்கவிரகில்லை. நிறுத்து அளந்து எண்ணி ஸ்ரீ ஸூக்திகளையருளிச் செய்யும் பெருமை மணவாளமாமுனிகளொருவர்க்கே அஸாதாரண மென்பதை ஒருவரும் மறக்கலாகாது. ஆக, ரஹஸ்யத்ரயமும் அர்த்தபஞ்சக ப்ரதிபாதகமென்னு மிடத்தையும், அதுதன்னிலும் விசேஷித்து ப்ரதிபாதிப்பது த்வயமேயென்னு மிடத்தையும் மாமுனிகளின் திவ்ய ஸூக்திகளைக் கொண்டு மூதலித்தோமாஞேம்.

## *ஏதந் ராமாஸ்த்ரம் தல்யாது*

56. பட்டர் *ஏதத் ராமாஸ்த்ரம்* என்றாப்போலே ஈண்டு ஒரு ராமாஸ்த்ரம் காண்மின். மூமுக்ஷுப்படியில் "அறியவேண்டுமர்த்தமெல்லாம் இதுக்குள்ளே யுண்டு; அதாவது அஞ்சர்த்தம்" என்றவுடனே "பூர்வாசார்யர்கள் இதில் அர்த்த மறிவதற்குமுன்பு தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதில் அர்த்த ஜ்ஞானம் பிறந்தபின்பு * பிறந்தபின் மறந்திலேனென்கிறபடியே இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்" என்றருளிச்செய்தார். பெரியார் கள் போது போக்குக்குப் பல பல க்ரந்தங்களைவைத்துக்கொண்டிருக்க "இத்தை யொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்" என்றது எங்ஙனே பொருந்துமென்கிற சங்கை உண்டாகியேதீரும். இதற்கு அங்கு மணவாள மாமுனிகள் காட்டியுள்ள பரிஹாரம் என்னவென்றால் "வேதசாஸ்த்ரங்கள் ஆழ்வாரருளிச்செயல்கள் இவற்றால் போது போக்கும்போதும் இம்மந்த்ரார்த்தத் தையுட்கொண்டே அநுஸந்திக்கையாலே....தட்டில்லை" என்பதாம். அர்த்த பஞ் சகாநுஸந்தானத்திற்கு இலக்காகாத காலக்ஷேபக்ரந்தமே உலகில் கிடையா தென்று அறுதியிட்டிருக்க, த்வயசாமச்லோகங்களை இதற்குப் புறம்பாக்க நினைப் பது இவையென்ன விசித்திரமே! இவையென்னவிடமங்களே!. சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றியை அங்குள்ளாரனைவரும் நினைக்குமாறு செய்து வந்தோம். ப்ராமாணிகர்களானால் * நஷ்டோ மோஹ:* என்றும் *ஸ்திதோஸ்மி கதஸந் தேஹ: *என்றும் சொல்லித்தொழுவர் திசையுற்றுநோக்கியே. ... ... *

— திருக்குறுங்குடிக்கும் வானமாமலைக்குமிடையில் ஒரு தத்துவம் —

57. நம்மாழ்வார் திருவாய்மொழி அஞ்சாம்பத்தில் அஞ்சாம்பதிகத்தினால் திருக்குறுங்குடியை யநுபவித்தவர் உடனே வானமாமலையையும் அநுபவிக்க ப்ராப்தமாயிருக்க இடையில் "யானே யென்னும் யானே யென்னும்" என்று ஒரு பதிகம் அருளிச் செய்ததில் ஒரு மருமமுண்டு. (அதாவது) ஆழ்வாருடைய தாய் தந்தையரான உடையநங்கையாரும் பொற்காரியாரும் ஸந்தானமில்லாத குறை யினால் திருக்குறுங்குடிக்கு வந்து நம்பியை ஸேவித்து வழிபாடுகள் செய்து கொண்டிருக்க, நம்பி திருவுள்ளமுவந்து 'நாமே வந்து உங்களுக்குப் புதல்வ னாகப் பிறக்கக்கடவோம்' என்று பணித்ததாகப் பெரியார் கூறுவதுண்டே; அதனை ஆழ்வார் தாமே திருவிருத்தத்தில் தாய்ப் பேச்சாலே "அருவினையேன் நெடுங் காலமும் கண்ணன் நீண் மலர்ப்பாதம் பரவிப்பெற்ற தொடுங்காலொசியு மிடை" என்று வெளியிட்டதும் தவிர இங்கும் யானே யென்னும், யானே யென்னும் என்று மகள் பாசுரத்தைத் தாய் அநுவதிப்பதாக இட்டருளினதால் 'திருக்குறுங்குடி நம்பிதான் யான்' என்று ஆழ்வார் தாமே பன்முறையும் கூறின தைக் காட்டிற்றாகத் தேறி நிற்கும் அடுத்துள்ள வானமாமலைக்குச் சேரவும் இன்சுவைப்பொருள்கூறுவர்—யானேயானே யென்றிருக்குமாறுகாட்டி ... *

## — விலக்ஷணமான வைநதேய விருத்தாந்தம் —

58. மஹாபாரதத்தின் ஓர் இதிஹாஸம் கேண்மின்;—விச்வாமித்ரனிடத்தில் வித்யைகளையெல்லாம் அதிகரித்த காலவனென்னு மந்தணன் முடிவில் "குரு தக்ஷிணை கொடுத்தாலொழிய நமக்கு இந்த வித்யைகள் நிலைநில்லா' என்றெண்ணி "அடியேன் என்ன தக்ஷிணை ஸமர்ப்பிக்கவேணும்?" என்று கேட்டான்; அதற்கு அவர், நான் உன்னுடைய பக்தியினாலும் சுச்ரூஷையினாலும் ப்ரஸந்நனாயினேன்; எனக்கு நீ ஒன்றும் ஸமர்ப்பிக்கத் தேவையில்லை" என்றார். அப்படி அவர் பலகால் சொல்லியும் காலவன் கேளாமல் "ஏதாவதொரு தக்ஷிணை நியமித்தே யாகவேணும்" என்று நிர்ப்பந்திக்கவே, அவர் சீற்றங்கொண்டு "உடம்பெல்லாம் சந்திர மண்டலம் போலே வெளுத்து ஒரு காது பச்சையாயிருக்கப்பெற்ற எண்ணூறு குதிரைகள் கொண்டு தா" என்றார். காலவன் இதைக்கேட்டு வியாகுலனாய் என் செய்வதென்று சிந்தித்து, ஸர்வாபேக்ஷிதங்களையு மளிக்கவல்ல எம்பெருமானை உபாஸிக்க முயன்ற வளவிலே முன்பே யிவனுக்கு ஆப்தனாயிருந்த கருடன் வந்து முன்னின்றான்; அவனை இவன் ஸ்தோத்ரம் பண்ணி, தன் வியாகுலத்தைச் சொல்லி இதற்கென்ன செய்யலாமென்று கேட்க; "உன்னை நான் சுமந்துகொண்டு இப்பூமண்டலமெங்கும் திரிகிறேன், இருவருமாய்த் தேடிப் பார்க்கலாம் வா" என்றான் கருடன். அப்படியே இருவருமாய்த் திரியும்போது மேல் ஸமுத்ரத்தில் ரிஷபமென்னும் மலையின்மீது இளைப்பாற நின்றவளவிலே அங்கே வஸிப்பவளும் அறிவிற் சிறந்தவளுமான சாண்டில்யை என்கிற ஒரு வைஷ்ணவியைக் கண்டு சென்று வணங்கி அவளால் ஸத்காரமும் பெற்று இவர்கள் அங்கே படுக்கும்போது "இப்படி விலக்ஷணையா யிருக்கிற இவள் விலக்ஷணமான வொரு திவ்ய தேசத்திலே வஸிக்கலாகாதா?" என்று கருடன் நினைத்து "இவளை இங்குநின்றும் ஒரு திவ்ய தேசத்திலே கொண்டுபோய் வைக்கக்கடவோம்" என்றெண்ணி யிருக்கையில்— அந்த வைஷ்ணவி இருந்த இடத்தை இழிவாக நினைத்த இவ்வபசாரத்தாலே சிறகுகள் உதிர்ந்து ஒன்றும் செய்ய முடியாமற் போய்விட, இதைக் காலவன் கண்டு 'மாநஸமாக ஏதேனும் அபசாரப் பட்டதுண்டோ? என்று கேட்க, அவன் உண்மையைச் சொல்லி அவளிடத்திலும் பொறுமை வேண்ட, அவளது அநுக்ரஹத்தாலே அவ்வபசாரம் நீங்கி முன்புபோலே யானான். (இக்கதை மஹாபாரதத்தில் உத்யோக பர்வத்தில் 112-ஆம் அத்தியாயத்திலுள்ளது)

## — பிள்ளைப் பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தை —

59. பிள்ளைப் பிள்ளையாழ்வானென்கிற ஒரு சிஷ்யர்க்குக் கூரத்தாழ்வானருளிச் செய்ததொரு வார்த்தைகேண்மின்; பிள்ளைப் பிள்ளையாழ்வானென்பவர் ஆபிஜாத்யம் முதலியவற்றால் மேம்பட்டவராகையாலே பாகவத விஷயங்களில் விநயமில்லாமல் அபசாரப்பட்டுக்கொண்டே யிருந்தார்; ஆழ்வான் இதைக்கண்டு "ஐயோ! இவர்க்கு இந்த பாகவதாபசாரம் இவருடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களெல்லாவற்றையும் கீழ்ப்படுத்தித் தானே மேலாகி விநாசத்தை விளைத்திடுமே!, அதுக்கு வேலியிட்டு வைக்கவேணும்" என்று திருவுள்ளம்பற்றி ஒரு புண்யகாலத்திலே நீராட்டமானபின் இவரை நோக்கி "எல்லாரும் தானம் பண்ணுகிற இக்காலத்திலே நீரும்

நமக்கொரு தானம் பண்ணமாட்டீரோ?'' என்ன, ''அடியேன் எத்தை தானம் பண்ணுவது, எல்லாம் ஸ்வாமியினுடையதே யன்றோ'' என்ன; ''அஃது இருக் கட்டும், மநோ வாக்காயங்கள் மூன்றாலும் பாகவதாபசாரப் படாமல் வர்த்திக்கக் கடவேன் என்று நம் கையிலே உதககதானம் பண்ணவேணும்'' என்று ஆழ்வான் அருளிச்செய்ய, அப்படியே இவரும் உதக தானம் பண்ணித்தந்த பின்பு ஒரு நாள் பூர்வ வாஸனையாலே பாகவதாபசாரப்பட நேர்ந்தவாறே ''நாம் இனி முடிந்தோம்'' என்று பயப்பட்டு அன்று ஆழ்வான் ஸந்நிதிக்கு விடைகொள்ள வெள்கித் தம் திருமாளிகையிலேயே இருந்துவிட, இவர் வழக்கப்படி வருகிற காலத்தில் வரக் காணாமையாலே ஆழ்வான் இவர்திருமாளிகையிலே யெழுந்தருளி வினவியருள, அவர் தமக்கு மாநஸிகமாகப் பாகவதாபசாரம் நேர்ந்தமையை விண்ணப்பம் செய்து ''கரணத்ரயத்தாலும் அபசாரம் விளையாதபடி இத்தேஹத்தோடு வர்த்திக்கை அரிதாயிருக்கின்றது!, என் செய்வேன்?'' என்று திருவடிகளைக் கட்டிக்கொண்டு கிடந்து வருந்த ''இத்தனை அநுதாபம் இவர்க்கு உண்டாயிற்றே!'' என்று உகந்தருளி ''மாநஸிகமான அபசாரத்திற்கு அநுதாப முண்டாகவே ஈச்வரன் பொறுத்தருள்வன், ப்ரத்யக்ஷத்தில் ராஜ தண்டனை கிடைக்குமென்ற பயத்தாலே காயிகமாக ஒருவரையும் நலியமாட்டீர்; இனி வாக்கொன்றையும் நன்றாகக் குறிக் கொண்டு இரும்'' என்றருளிச் செய்தார். .... ... ... *

## — கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்தது —

60. குலசேகராழ்வார் பெருமாள்திருமொழியில் தம்முடைய அநந்யகதித்வத்தை விண்ணப்பஞ்செய்கிற *தருதுயரம் தடாயேலென்னும் பதிகத்தில் (2) *கண்டா ரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானையல்லா லறியாக்குலமகள் போல்* என்றொரு த்ருஷ்டாந்தங் காட்டியுள்ளார். கண்டாரெல்லாருமிகழும்படி காதலன் செய்ததைப்பற்றி ஒரு விநோதக் கதை கேளீர்.

ஒரு மாப்பிள்ளை மாமியாரகத்துக்குச் சென்றார். அப்போது ... ளைவி யைத் தன்னில்லத்திலேயே விட்டுவைத்துத் தான்மட்டும் சென்றிருந்த... ; அங்கே மாமியார் ஒருநாள் குழக்கட்டை சமைத்துச் சாதித்தாள் மாப்பிள்ளைக்கு, அது வரையில் அவர் ஒருநாளும் குழக்கட்டை சாப்பிட்டதேயில்லை; இப்படியொரு தின்பண்டமுள்ளதென்றுகூட அறிந்தவரல்லர். வாய்க்கு வெகுருசியாயிருந்தது. 'மாமியாரே! இது என்ன பக்ஷணம்? அபூர்வமாயிருக்கிறதே; பரம போக்யமாயிருக் கிறதே; இதன் பெயர் என்ன?' என்றார் மாப்பிள்ளை. அதற்கு மாமியார் 'இதற்குக் குழக்கட்டை யென்று பெயர்' என்றாள். 'உம்முடைய பெண்ணுக்கு இது சமைக்கத் தெரியாதோ? இதுவரை ஒரு நாளும் அவள் இதைச் சமைக்கவில்லையே' என்றார். தெரியாமலென்ன? என்னைவிட நன்றாக இது சமைக்கத் தெரியுமவளுக்கு; நீர் சொன்னால் சமைத்துச் சாதிப்பள், இதற்கென்ன பிரமாதம்?' என்றாள் மாமி. ஊருக்குப்போய் இதை நித்தியமும் சமைக்கச்செய்து சாப்பிடவேணும் என்று ஆசை கொண்டார் மாப்பிள்ளை. இரண்டுநாள் பொறுத்து ஊர் போய்ச் சேர்ந்தார். குழக்கட்டை யென்கிற பெயரை மறந்துவிட்டார். எவ்வளவு சிரமப்பட்டும் அப் பெயர் நினைவுக்கு வரவேயில்லையிவர்க்கு. 'உன் தாயார் ஒரு அற்புதமான பக்ஷணம்

சமைத்துச் சாதித்தாள்; அது வெகு ருசியாயிருந்தது; அதை நீயும் சமைத்துத் தா' என்றார் தேவியாரை நோக்கி; 'அதைச் சமை என்றால் நான் எதைச் சமைக்கிறது? அதன் பெயர் சொன்னால் சமைப்பேன்; அது இன்னதென்றே எனக்குத் தெரிய வில்லையே; தெரியாமல் நானெப்படி சமைப்பது?' என்றாளவள். அதற்கு இவன் சொன்னான் 'நீ தினந்தோறும் ஒவ்வொரு அபூர்வமான தின்பண்டம் சமைத்துச் சாதித்துவா; ஒரு நாளில் அதுவும் தைவாதீனமாக வந்துவிடும்; அப்போது நான் சொல்லுகிறேன்' என்று. இதை மனைவி கேட்டு அப்படியேயென்று ஒப்புக்கொண்டு நித்தியம் ஒவ்வொரு பணியாரம் சமைத்துச் சாதித்து வந்தாள். அவளுக்குக் குழக் கட்டை பணியாரம் தெரிந்திருந்தும் அது நினைவுக்கு வாராமையினால் அதைச் சமைத்து இடவேயில்லை. புருஷனுக்குப் பிரபலமான கோபம் உண்டாய்விட்டது; 'நான் சொன்னதைச் சமைக்காமல் எதையோ சமைக்கிறாய்; உனக்கு அது சமைக்க நன்றாகத் தெரியுமென்று உன் தாய்கூடச் சொன்னாள். வேணுமென்றே பிடிவாதங் கொண்டு அதை நீ சமைக்கவில்லை; உன்னை யென்ன பண்ணுகிறேன் பார்!' என்று சொல்லித் தாடையிலும் முதுகிலும் கையாலடித்தது போதாமல் ரூல்கட்டையாலும் புடைத்தான்! அவள் அடி தாங்கமாட்டாமல் வாசலில் ஓடிச்சென்று 'இப்படிகூட ஒரு அநியாயமுண்டா? அதைச் சமை, அதைச் சமை என்றால் நான் எதைச் சமைக் கிறது; ஏதோ எனக்குத் தெரிந்ததைச் சமைத்தேன்; இப்படி புடைக்கிறாரே கேட்பாரில்லையா?' என்று தெருவிலே நின்று அலறியழுதாள். ஊரெல்லாம் ஒன்று கூடிவிட்டது; மிகவும் பரிதாபகரமான அடி. ஒவ்வொருவரும் அவனிடம் வந்து 'அடா! இப்படி கூடவாடா சாதுவான பெண்ணை யடிப்பது? உடம்பெல்லாம் குழகட்டை குழகட்டையாக எழும்பிவிட்டதே! என்றார்கள். "ஆம் ஆம், அதுதான் அதுதான்; அதுதான் நான் சமைக்கச் சொன்னது" என்று கத்துகிறான் புருஷன். எல்லாரும் சிரிக்கிறார்கள்; அடிபட்ட பெண்ணுக்கும் சிரிப்பு வந்துவிட்டது. குழ கட்டை குழகட்டையாக எழும்பும்படி யடிக்கவே தானே குழக்கட்டை பணியாரம் வெளிப்பட்டதென்கிறான் புருஷன். குலசேகராழ்வார் இதைக் கண்டார்போலும்.

## — மருவித்தொழும் மனமே தந்தாய் —

61. நம்மாழ்வார் திருவாய்மொழியில் "மருவித் தொழும் மனமே தந்தாய்" என் றருளிச் செய்தார்; முன்னிருந்த மனமன்று இப்போதுள்ள மனம்; எம்பெருமான் அதைக் கவர்ந்துசென்று வேறொரு மனத்தைக் கொணர்ந்து வைத்திட்டான் என்றா ராயிற்று. இப்படியன்றோ ஆசாரியர்கள் வியாக்கியானம் செய்தருளியிருப்பது; ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்—"பழைய நெஞ்சைத் திருத்தினவளவன்றிக்கே கருவுகலத்திலே யொரு நெஞ்சைத் தந்தாய்; *திவ்யம் ததாமிபோலே. 'பழைய நெஞ்சு இது' என்று ப்ரத்யபிஜ்ஞை பண்ணவொண்ணாதபடி யிராநின்றது" என்று. கருவுகலமாவது, பெரிய தேவஸ்தானங்களில் திருவாபரணம் முதலிய சிறந்த வஸ்துக்கள் சேமித்து வைக்குமிடம். கருவூலமென்பர்கள். அதிலிருந்து ஒரு நல்ல நெஞ்சையெடுத்து ஆழ்வார்க்கு எம்பெருமான் நற்கொடையாகக் கொடுத்தானாம். இதன் பரம தாற்பரியத்தை அடுத்த பாட்டில் * என்னைத் தீமனங்கெடுத்தாய் * என்பதனால் விளக்கியருளினாராயிற்று. அதற்கேற்ற கதையொன்று கேளீர்,

62. மஹாநிபுணனானவொரு நாபிதன் வெங்கடகிரிசமஸ்தான ராஜாவிடம் இருந்துவந்தான். அவனுடைய நைபுண்யம் எப்படிப்பட்டதென்றால் பிரபு அயர்ந்து உறங்கும்போது அவனுக்குத் தெரியாதபடியே வபநம் செய்து விடுவன். காலை யெழுந்து கண்ணாடியில் பார்த்துக்கொள்ளும் போதுதான் வபனமாய் விட்டதாக அரசன் அறிந்துகொள்வன்; அதனால் அவனுக்குப் பரமஸந்தோஷம். அந்தஸந்தோஷத்தினால் அந்த நாபிதனை வெகுஆதரித்து வைத்துக்கொண் டிருந்தானரசன். இப்படியிருக்கையில் அவன் காலமாய்விட்டான். வேறு எந்த நாபிதனும் அவன் போல் செய்யத் திறமையுள்ளவனாகக் கிடைக்கவில்லை; பிரபு வெகு சிரமப்பட்டார். ஒரு விளம்பரம் அச்சடித்துத் தேசமெங்கும்பரவச்செய்தார்; (அதாவது)"நான் உறங்கிக்கொண்டேயிருக்கும்போது எனக்குத்தெரியாமலே வபனம்செய்யத்திறமைபெற்ற நாபிதனுக்கு மாதம் 200, 300 ரூ. சம்பளமளிக்கிறே"னென்று. அதையறிந்த நாபிதர்களெல்லாரும் அந்த ஸன்மானம் பெறுவதற்கு ஆசைப்பட்டு அவ்விதமான பழக்கம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். திருவாலங்காட்டில் ஒரு நாபிதன் இதில் தேர்ச்சிபெற்று ராஜாவிடம் சென்று பரீக்ஷைகொடுக்கப் புறப்பட்டுக் கால்நடையாகவே நடந்துசெல்லலுற்றான். வழியிடையில் ரேணிகுண்டா ஸமீபத்தில் 'வடமாலபேடா' என்பது ஓர் ஊர். அங்கே பெரிய குளம். குளத்தின் கரையிலே ஒருவர் திருவேங்கடமுடையானுக்கு முடிகொடுப்பதற்காக ஐந்தாறு வருஷமாய் தீக்ஷை வளர்த்துப்பெரிய மீசைதாடியோடு மூட்டையைத் தலையணையாகவைத்துக்கொண்டு அயர்ந்து தூங்குகிறார்; அங்கே வந்துசேர்ந்த திருவாலங்காட்டு நாபிதன் இந்த தீக்ஷிதரிடத்திலே தன்னுடைய நைபுண்யத்தை டெஸ்ட்பார்க்க நிச்சயித்துவிட்டான். உடனே செய்தும் முடித்துவிட்டான். தாடியுட்பட கேசங்களையெல்லாம் சுருட்டியெடுத்துப் பையிலடைத்துக்கொண்டு புறப்பட்டுவிட்டான். தீக்ஷிதர் ஒரு மணிநேரம் கழித்துத் தானாக விழித்தெழுந்தார். தாடிக்காரர்கள் எழுந்திருக்கும் போது தாடியை யுருவிக்கொண்டே யெழுந்திருப்பது வழக்கமாதலால் அவ்வழக்கத்தின்படி தாடியை யுருவிப்பார்த்தார். தாடி ஏது? உடனே மூட்டையை யவிழ்த்துக் கண்ணாடியை யெடுத்துக் காண்கிறார். கழுத்துவரையில் ஓரிடத்திலும் ஒருகேசமும் கிடையாது, அப்பய தீக்ஷிதர் சித்ரமீமாம்ஸையில் *"ஸத்யோமுண்டித மத்தஹூண சுபுக ப்ரஸ்பர்த்தி நாரங்ககம்" என்றொரு சுலோகம் உதாஹரிக்கிறார். அப்போதுதான் வபனம் பண்ணப்பெற்ற ஹூணனுடைய மோவாய்க்கட்டை போலுள்ளது கிச்சிலிக்காய்—என்பது இதன் பொருள். இவ்விதமாகவே கண்ணாடிப்புறத்தில் முகத்தைக் கண்டார் திருவேங்கடமுடையானுக்கு முடிகொடுக்கச் செல்லுமந்த தீக்ஷிதர்.

மிகமிக ஆலோசிக்கிறார்; நம்முகம் இங்ஙனமாக எப்படியாய் விட்டதென்று எண்ணுதனபலவு மெண்ணுகிறார். தனக்குத் தெரியாமல் வபனம் பண்ணியிருக்க முடியவே முடியாதென்றும், கூலிபெறாமல் எவனும் வபனம் செய்யமாட்டானே யென்றும் எண்ணுகிறார். கடைசியாக என்ன முடிவு செய்தாரென்றால், 'நம்முடைய தலையைத் துருவியெடுத்துக்கொண்டுபோய் வேறொரு தலையைக் கொணர்ந்து ஒட்டவைத்துப் போய்விட்டான் எவனோபாவி' என்று முடிவுசெய்தார், வபனம் பண்ணியிருக்க ஸம்பாவிதமில்லையென்றும், இதுதான் ஸம்பாவிதமென்றும் நினைக்கும் மேதாவி அவர்.

## — கூரத்தாழ்வான் தனியனின் தனிச் சிறப்பு —

63. நம்ஆசார்யர்களனைவர்க்கும் தனியன்கள் ஒவ்வொரு ரீதியில் அவதரித்துள்ளது. கூரத்தாழ்வானுடைய தனியன் அவதரித்திருக்கும் விதம் உண்மையில் அதிவிலக்ஷணமானது. இத்தனியன் பட்டரருளிச் செய்ததாதலால் அவருடைய தனிப்பட்ட திருநாவீறு இதில் பொலிகின்றது. ''யதுக்தயஸ் த்ராயீகண்டே யாந்தி மங்கலஸூத்ரதாம்'' என்பது இத்தனியனில் உத்தரார்த்தம். ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்திகளானவை வேதமாகிற மாதின் கழுத்திலே திருமங்கலியமாக விளங்குகின்றனவென்று வெகு சமத்காரமாக அருளிச் செய்யப்படுகிறது. இதன் கருத்தைச் சிறிது விவரிப்போம். பெண்களுக்குத் திருமங்கலிய மில்லாத நிலைமைகள் இரண்டு. கன்னிகையாயிருக்கும் நிலைமை ஒன்று. நூலிழந்து விதவையாய்ப் போன நிலைமை மற்றொன்று. இவற்றுள், கன்னிகைப் பருவத்தில் பெண்களுக்குப் பல நாயகர்கள் தேறக்கூடும். ஏனெனில் பெண்கழுத்தில் ஒரு கைப்பாடாகத் தாலி ஏறுமளவும் பெரும்பாலும் பிரமசாரிகளும் விதுரர்களும் அவளைத் தன் மனைவியாகப் பாவித்திருக்கக் கூடும். 'இப்பெண்ணுக்கு நானே கணவனாகலாம்' என்று ஸ்வரூப யோக்யதை யுடையாரெல்லாரும் நினைத்திருக்கக் கூடுமன்றோ. மற்றுமுள்ள விரக்தர்களும் க்ருஹஸ்தர்களும் அக் கன்னிகையைக் கண்டால் 'இவளுக்கு இன்னும் கணவன் நிச்சயிக்கப்படவில்லை' என்று ஸாதாரணமாக நினைத்துக் கொள்வார்கள் அப்பெண்ணின் கழுத்தில் தாலி ஏறிவிட்ட பின்பு முன்பு தங்களுக்கென்று அபிமானித்திருந்த பிரமசாரிகளும் விதுரர்களும் 'இனி இவள் அநந்யார்ஹை' என்று நிச்சயித்துத் தாங்கள் ஆசையற்றொழிவர்கள். ஸாதாரணமாக நினைத்துக்கொண்டிருந்த மற்ற க்ருஹஸ்தர்களும் விரக்தர்களும் 'இவளுக்கு ஒரு கணவன் அமைந்துவிட்டான்' என்று நினைத்துப் போருவர்கள். இனி இரண்டாவதான வைதவ்ய நிலைமையில் ஸ்த்ரீயைப் பார்க்குமவர்கள் 'இவளுக்கு ஏற்பட்டிருந்த கணவன் இறந்தொழிந்தான். இனி இவளுக்கு எப்போதும் கணவன் ஏற்படப் போகிறதில்லை' என்றெண்ணி நிற்பர்கள். ஆகவே, மாதர்கள் மங்கலநூல் இல்லாத நிலைமைகளில் பல பர்த்தாக்களை யுடையவர்களாயும் ஒரு பர்த்தாவையு முடையராகாதவர்களாயும் இருப்பர்களென்றதாயிற்று, அதுபோல, ஆழ்வான் ஸ்ரீஸூக்திகள் அவதரிப்பதற்கு முன்பு வேதங்கள் மங்கல நூல் இல்லாத மாதரின் இரண்டு வகையான நிலைமைகளையும் உடையனவாயிருந்தன. வேதத்துக்கு ருத்ரனைப் பதியாகச் சிலர் மயங்கி அபிமானிப்பர்கள்; பிரமனைப் பதியாகப் பேதையர் சிலர் பேணுவர்கள். இங்ஙனம் பாசுபதர் முதலிய மதாந்தரஸ்தர்களால் பலபல தெய்வங்கள் பதியாக அபிமானிக்கப்பட்டும்; நிரீச்வர மீமாம்ஸகாதிகளால் நாயகனே கிடையாதென்று மறுக்கப்பட்டும் கிடந்தது, ஆழ்வானுடைய பஞ்சஸ்தவம் முதலான திவ்ய ஸூக்திகள் திருவவதரித்தவுடனே 'தலையறுத்தவனும் தலையறுப்புண்டவனும் மற்றுமெவனும் வேதத்துக்கு நாயகரல்லர்; அடியோடு நாயகனே கிடையாதென்றதும் தவறு; நாயகனுண்டு, அவன் ஒருவனே; அவனாகிருன் ஸ்ரீமந் நாராயணனே என்று கல்வெட்டாக நிஷ்கர்ஷம் ஏற்பட்டபடியால் இவருடை ஸ்ரீஸூக்திகள் வேதமாதுக்கு மங்களநூல் போன்றன. இதனால் ஸகலதுர்மதங்களையும் நிரஸித்துப் பரதத்வ நிர்ணயம் பண்ணவல்ல

வாக்வைபவமுடையவர் கூரத்தாழ்வான் என்றதாகிறது. வஸ்துஸ்திதியில் ஸ்ரீபாஷ்யாதிகள் திருவவதரித்திருந்தாலுங் கூட ஆழ்வானுடைய பஞ்சஸ்தவங்கள் அவதரிக்கவில்லையாகில் நம் எம்பெருமானார் தரிசனத்திற்கு அபரிஹார்யமான குறையே யாகுமன்றோ. இத்தகைய தனியன் பணிப்பதற்கு பட்டர் தவிர மற்றொருவராலுமாகாது; இத்தனியன் ஆழ்வான் தவிர மற்றொருவர்க்கும் ஏற்காது. ●

## — எம்பெருமானை நோக்கி ஆழ்வார்களின் கேள்விகள் —

64. எம்பெருமானைத் துதிக்கின்ற பக்தமணிகள் தங்களுடைய பலவகையான அநுபவங்களில் விலக்ஷணமான ஓர் அநுபவத்தைக் காட்டுவதுண்டு; அதாவதென்னென்னில், எம்பெருமானை நோக்கிச் சில கேள்விகள் கேட்கிற முகத்தால் ஒருவகையான குணாநுபவம் பண்ணுவது. பொய்கையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலானோர் இவ்வநுபவத்திற்கு வழிகாட்டிகளாக அமைந்தனர். பொய்கையார் முதல்திருவந்தாதியில் (69) * பாலன் தனதுருவாயேழுலகுண்டு, ஆலிலையின் மேலன்று நீ வளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று வேலை நீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ? சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு * என்று கேட்கிறார். நம்மாழ்வாருடைய வினாக்கள் பலபல. ஒன்றே கேண்மின்; பெரிய திருவந்தாதியில் * சீரால் பிறந்து சிறப்பால் வளராது, பேர் வாமனாகாக்கால் பேராளா!—மார்பாரப், புல்கி நீயுண்டுமிழ்ந்த பூமி நீரேற்பரிதே? சொல்லு நீ யாமறியச் சூழ்ந்து * என்பது. திருமங்கையாழ்வாருடைய வினாக்களிலும் ஒன்று கேண்மின்; (பெரிய திருமொழி 7-9-7) * சேயோங்கு தண் திருமாலிருஞ்சோலை மலையுறையும் மாயா! எனக்குரையா யிது, மறை நான்கினுளாயோ? தீயோம்பு கைம்மறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்தாயோ? உனதடியார் மனத்தாயோ? * என்பது. இந்த வினாக்களை விவரித்து அநுபவித்தால் இன்சுவை பெருகும். ... *

## — கூரத்தாழ்வானுடைய பலகேள்விகளில் ஒன்று (மூன்று விருந்துகள்) —

65. ஆழ்வானுடைய ஸ்தவங்களில் அதிமாநுஷ, ஸுந்தரபாஹு, வரதராஜஸ்தவங்களிலே வெகு ரஸகனமான கேள்விகள் அமைந்துள்ளன. திருமாலிருஞ்சோலையழகரை நோக்கிக் கேட்கிற மூன்று கேள்விகள் அமைந்த ஒரு ச்லோகத்தை மாத்திரம் இங்குச் சுருக்கமாக அநுபவிப்போம்;

> "கூஹிதஸ்வமஹிமாபி ஸுந்தர! த்வம் வ்ரஜே கிமிதி சக்ரமாக்ரமீ:?
> ஸப்தராத்ரமததாச்ச கிம் கிரிம் ப்ருச்சதச்ச ஸுஹ்ருத: கிமக்ருதா:?"

என்பது ஸுந்தரபாஹுஸ்தவத்தில் 112 ஆம் ச்லோகம்.

இதிலுள்ள மூன்று கேள்விகளாவன :—ஸௌலப்ய ஸௌசீல்யங்களையே காட்டிப் பரத்வத்தை யொளித்து மாநுஷ்யகம் கொண்டாட வந்த விடத்திலே

பரத்வம் விளங்கும்படியான செய்கைகளையும் இடையிடையே வெளியிட்டது எதற்காக? என்பது முக்கியமான கேள்வி. அழகரே! தேவரீர் * ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாயொளித்து வளர்ந்தது ஸ்வகீய சக்தி விசேஷங்களையெல்லாம் மறைத்துக் கொண்டல்லவோ? அப்படியிருந்தும். நெடுநாளாகத் திருவாய்ப்பாடியில் நடந்துவந்த தேவேந்திர ஸமாராதனையைத் தடுத்தது ஏன்? என்பது முதற் கேள்வி. இதற்கு எம்பெருமான் (அல்லது அவனுடைய பிரதிநிதிகள்) சொல்லக்கூடிய ஸமாதானம் என்னவெனில்; பராத்பரனான தான் வளருகிறவூரிலே தேவதாந்தரத்திற்கு ஆராதனை யாவதென்? என்றிருந்தபடியாலே தடுத்ததாக.

66. அவ்விந்திரன் ஏழுநாள் கல்மழை பெய்வித்து ஆயர்களுக்கும் ஆநிரைகளுக்கும் பொறுக்கொணாத் தீங்கை விளைத்தபோது அவனைத் தலையறுத்துத் தொலைக்கவேண்டியிருக்க அதுசெய்யாதே கோவர்த்தன மலையைக் கொற்றக் குடையாக ஏந்தி நின்றதென்? என்பது இரண்டாவது கேள்வி. 'இந்திரனது உணவைக்கொண்ட நாம் உயிரையும் கொள்ளவேணுமோ? இந்த மலையே நமக்கு ரக்ஷகமென்று நாம் அடியிலே சொன்ன சொல்லை மெய்யாக்கி இம்மலையைக்கொண்டே மழைக் கஷ்டத்தைத் தடுத்து விடுவோமாகில் அவன் கைசலித்தவாறே ஓய்ந்து நிற்கிறானென்கிற விசாலமான திருவுள்ளத்தினால்—என்பது இதற்கு ஸமாதானம்.

67. ஏழுபிராயத்துச் சிறுவன் மலையெடுத்துநின்ற அதிமாநுஷ சேஷ்டிதங்கண்டு ஆச்சரியப்பட்ட ஆயர்கள் இவனுடைய பிறப்பிலே சங்கை கொண்டு "தேவோ வா தாநவோ வா த்வம் யக்ஷோ கந்தர்வ ஏவ வா?" என்று, நீ தேவனா? தானவனா? யக்ஷனா? கந்தர்வனா? என்று கேட்ட வளவிலே *க்ஷணம் பூத்வா த்வஸௌ தூஷ்ணீம் கிஞ்சித்ப்ரணயரோஷவாந் * என்கிறபடியே—அப்படி அவர்கள் கேட்டதற்குச் சீற்றங் கொண்டதாக வுள்ளது. சீற்றங்கொள்ளும்படியாக அவர்கள் ஒன்றும் கேட்கவில்லையே! அப்படியிருக்க சீற்றங்கொண்டது ஏன்? என்பது மூன்றாவது கேள்வி. இடையர்களிலே கடைகெட்ட இடையனாகத்தான் வந்து பிறந்திருக்கச் செய்தே ஸஜாதீயனை விஜாதீயனாக்கிக் கேள்வி கேட்பது தவறுதலால் சீற்றமுண்டாயிற்றென்று ஸமாதானம். இத்தால் கண்ணபிரானுக்கு தேவத்வத்திலுங்காட்டில் கோபாலத்வமே உகப்புக்கிடமானதென்று விளங்கும். "தேவத்வமும் நிந்தையானவனுக்கு" என்பது ஆசார்யஹ்ருதயம். அங்கு மாமுனிகளின் வியாக்கியானம் ஸேவிப்பது. இப்படிப்பட்ட அர்த்தங்களை விளங்கச்செய்யும் கேள்விகளாம் இவை.

## — கீதையில் இன்சுவைப் பொருளொன்று (இரண்டு விருந்துகள) —

68. பகவத்கீதை பத்தாவது அத்யாயத்தில் ஒன்பதாவது ச்லோகம்— "மச்சித்தா மத்கதப்ராணா போதயந்த: பரஸ்பரம், கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச" என்பது. இந்த ச்லோகம் பாகவத சிகாமணிகளின் அழகிய

போதுபோக்கைப் பற்றிப் பகவான் [கீதாசார்யன்] பரமஸந்தோஷம் பொலியச் சொன்னது பாகவதர்கள் இப்படி வர்த்திக்க வேணுமென்று சிக்ஷிக்கின்றதாகவும் அமைந்துள்ளது இந்த ச்லோகம். இதை நெஞ்சில் ஆவ்ருத்தி பண்ணப் பண்ண விலக்ஷணமான வோர் ஆனந்தம் பக்தர்களுக்கு உண்டாகியே தீரும். திருமழிசைப் பிரான் நான்முகன் திருவந்தாதியில் "தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்றருளிச் செய்த பாசுரம் இந்த் கீதா ச்லோகத்தை யடியொற்றியதே யென்று சொல்லலாம். ... .... *

## — நமது பாஷ்யகாரரின் திருநாவீறு —

69. கீதைக்குப் பலபாஷ்யங்கள் அவதரித்திருந்தாலும் நம்ஸ்வாமி எம்பெருமானருளிச்செய்திருக்கும் பாஷ்யத்தின் மாதுர்யமும் காம்பீர்யமும் ஒப்புயர்வற்றது. அதிகமான விரிவு இன்றிக்கே ஸம்க்ஷிப்தமாகவே யிருந்தாலும் அர்த்தபுஷ்டி அந்யாத்ருச மானதென்பதை அநுபவ ரஸிகர்களே அறியமுடியும். வியாக்கியான சைலியை ஆழ்ந்து நோக்குமிடத்து எம்பெருமானாரும் மணவாள மாமுனிகளும் அபிந்நவ்யக்திகளேயென்று திண்ணமாக அறுதியிடத் தட்டில்லை. அதுநிற்க. ப்ரக்ருத ச்லோகத்தின் முடிவில் "துஷ்யந்தி ச ரமந்தி ச" என்றுள்ளது க்ரியாபதங்களிரண்டுக்கும் 'ஸந்தோஷிக்கிறார்கள்' என்பதொன்றே பொருளாகத் தேறுகின்றது. இந்த புநருக்தி எதற்காகவென்று ஆராயும்போது பாஷ்யங்களை யெடுத்துப்பார்க்க ஆவல் கிளர்கின்றது. சங்கராசார்ய ஸ்வாமிகளின் பாஷ்யத்தைப் பார்த்தாலோ அதில், [துஷ்யந்தி—பரிதோஷமுபயாந்தி; ரமந்தி ச—ரதிஞ்ச ப்ராப்நுவந்தி.] என்றுள்ளது. பரிதோஷமாவது என்ன? ரதியாவது என்ன? என்பதை நுண்ணுணர்வினர் நுட்பமாக அறிவர் போலும். இனி மத்வ பாஷ்யத்தைப் பார்த்தாலோ, இங்கு 8, 9, 10, 11 ஆகிய நான்கு ச்லோகங்களுக்கு பாஷ்யமே கிடையாது. எட்டாவது ச்லோகத்திற்கு ஒரு அவதாரிகையிட்டு, மேல் பதினோராவது ச்லோகம் வரையில் ஸ்பஷ்டார்த்தகமென்று முடித்திட்டார். அந்த பாஷ்யத்தின் ப்ரக்ரியை பெரும்பாலும் இத்தகையதே. இனி நம் ஸ்வாமியின் பாஷ்ய ஸூக்திகள் காண்மின்; "[துஷ்யந்தி ச ரமந்திச=வக்தாரஸ் தத்வசநேந அநந்ய ப்ரயோஜநேந துஷ்யந்தி; ச்ரோதாரச் ச தச்ச்ரவணேந அநவதிகாதிசய ப்ரியேண ரமந்தே] என்றுள்ளது. பகவத் கதைகளைச் சொல்லி மகிழ்வார் சிலர்; அவற்றைக் காதாரக் கேட்டு மகிழ்வார் சிலர். இவ்வகையான பேதத்தையிட்டு க்ரியாபத பேதம் செய்ததாக ஸ்வாமி திருவுள்ளம் பற்றுகிறார். மூலத்தில் "போதயந்த: பரஸ்பரம்" என்றிருப்பதனாலே வக்தாக்களும் ச்ரோதாக்களுமாக இரண்டு வகுப்பினர் அவசியம் தேறுகிறார்கள். அவ்விரு வகுப்பினரிடத்தும் அந்வயிக்குமாறு இரண்டு க்ரியா பதங்களை கீதாசார்யன் ப்ரயோகித்திருப்பதாக மருமம் கண்டறிந்து உரை செய்திருப்பது ஸ்வாமி ராமாநுஜர்க்குத் தன்னேற்றம். .... ... *

போதுபோக்கைப் பற்றிப் பகவான் [கீதாசார்யன்] பரமஸந்தோஷம் பொலியச் சொன்னது பாகவதர்கள் இப்படி வர்த்திக்க வேணுமென்று சிக்ஷிக்கின்றதாகவும் அமைந்துள்ளது இந்த ச்லோகம். இதை நெஞ்சில் ஆவ்ருத்தி பண்ணப் பண்ண விலக்ஷணமான வோர் ஆனந்தம் பக்தர்களுக்கு உண்டாகியே தீரும். திருமழிசைப் பிரான் நான்முகன் திருவந்தாதியில் "தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்றருளிச் செய்த பாசுரம் இந்த கீதா ச்லோகத்தை யடியொற்றியதே யென்று சொல்லலாம். ... .... *

## — நமது பாஷ்யகாரரின் திருநாவீறு —

69. கீதைக்குப் பலபாஷ்யங்கள் அவதரித்திருந்தாலும் நம்ஸ்வாமி எம்பெருமானருளிச்செய்திருக்கும் பாஷ்யத்தின் மாதுர்யமும் காம்பீர்யமும் ஒப்புயர்வற்றது. அதிகமான விரிவு இன்றிக்கே ஸம்க்ஷிப்தமாகவே யிருந்தாலும் அர்த்தபுஷ்டி அந்யாத்ருச மானதென்பதை அநுபவ ரஸிகர்களே அறியமுடியும். வியாக்கியான சைலியை ஆழ்ந்து நோக்குமிடத்து எம்பெருமானாரும் மணவாள மாமுனிகளும் அபிந்நவ்யக்திகளேயென்று திண்ணமாக அறுதியிடத் தட்டில்லை. அதுநிற்க. ப்ரக்ருத ச்லோகத்தின் முடிவில் "துஷ்யந்தி ச ரமந்தி ச" என்றுள்ளது க்ரியாபதங்களிரண்டுக்கும் 'ஸந்தோஷிக்கிறார்கள்' என்பதொன்றே பொருளாகத் தேறுகின்றது. இந்த புநருக்தி எதற்காகவென்று ஆராயும்போது பாஷ்யங்களை யெடுத்துப்பார்க்க ஆவல் கிளர்கின்றது. சங்கராசார்ய ஸ்வாமிகளின் பாஷ்யத்தைப் பார்த்தாலோ அதில், [துஷ்யந்தி—பரிதோஷமுபயாந்தி; ரமந்தி ச—ரதிஞ்ச ப்ராப்நுவந்தி.] என்றுள்ளது. பரிதோஷமாவது என்ன? ரதியாவது என்ன? என்பதை நுண்ணுணர்வினர் நுட்பமாக அறிவர் போலும். இனி மத்வ பாஷ்யத்தைப் பார்த்தாலோ, இங்கு 8, 9, 10, 11 ஆகிய நான்கு ச்லோகங்களுக்கு பாஷ்யமே கிடையாது. எட்டாவது ச்லோகத்திற்கு ஒரு அவதாரிகையிட்டு, மேல் பதினோராவது ச்லோகம் வரையில் ஸ்பஷ்டார்த்தகமென்று முடித்திட்டார். அந்த பாஷ்யத்தின் ப்ரக்ரியை பெரும்பாலும் இத்தகையதே. இனி நம் ஸ்வாமியின் பாஷ்ய ஸூக்திகள் காண்மின்; "[துஷ்யந்தி ச ரமந்திச=வக்தாரஸ் தத்வசநேந அநந்ய ப்ரயோஜநேந துஷ்யந்தி; ச்ரோதாரச் ச தச்ச்ரவணேந அநவதிகாதிசய ப்ரியேண ரமந்தே] என்றுள்ளது. பகவத் கதைகளைச் சொல்லி மகிழ்வார் சிலர்; அவற்றைக் காதாரக் கேட்டு மகிழ்வார் சிலர். இவ்வகையான பேதத்தையிட்டு க்ரியாபத பேதம் செய்ததாக ஸ்வாமி திருவுள்ளம் பற்றுகிறார். மூலத்தில் "போதயந்த: பரஸ்பரம்" என்றிருப்பதனாலே வக்தாக்களும் ச்ரோதாக்களுமாக இரண்டு வகுப்பினர் அவசியம் தேறுகிறார்கள். அவ்விரு வகுப்பினரிடத்தும் அந்வயிக்குமாறு இரண்டு க்ரியா பதங்களை கீதாசார்யன் ப்ரயோகித்திருப்பதாக மருமம் கண்டறிந்து உரை செய்திருப்பது ஸ்வாமி ராமாநுஜர்க்குத் தன்னேற்றம். .... ... *

## — ஏழை கண்ட கனவின் பயன் —

70. காஞ்சிபுரியில் ஓர் ஏழையிருந்தான். அவன் பலவிசாரங்களால் பீடிக்கப்பட்டு எவ்விதமான வேலையும் செய்ய வல்லமையின்றிப் பிழைக்கவழியற்று வருந்திக்கிடக்கையில் அவ்வூரிலுள்ளவொரு தருமநிதி (Charity Fund) யிலிருந்து மாதந்தோறும் அவனுக்குப் பத்துரூபாய் உதவிப்பணமாகக் கிடைக்குமாறு சில பெரியோர் செய்துவைத்தனர். அதைக்கொண்டு அவன் ஒருவாறு ஜீவித்துவந்தான்.

ஒருநாள் பின்னிரவில் அவன் ஓர் கனுக்கண்டான்—ஒரு லக்ஷம் ரூபாய் தனக்குக் கிடைத்ததாக. உடனே அக் கனவிலேயே அவன் தனது நிலைமை மாறிவிட்டதாக [ஏழைமை நீங்கிச் செல்வம் விஞ்சியவனாக] நினைத்துக்கொண்டான். இனிநாம் தருமநிதியிலிருந்து உதவிப்பணம் பெறுவது தகுதியல்லவென்றும் நிச்சயித்தான். இந்த லக்ஷம் ரூபாய்களைக்கொண்டு எவ்வளவோ பெருமையாக வாழலாமென்று பாரித்தான். அதன்பின் பங்களா எங்கே அமைத்துக் கொள்ளலாமென்றும் வேலைக்காரர்கள் எத்தனைபேர் வைத்துக்கொள்ள வேணுமென்றும் மற்றுமிவ்வாருகவே வண்டிகள் குதிரைகள் மோட்டார்கள் முதலானவை வாங்கும்விஷயமாகவும் இன்னும் பலபல விஷயமாகவும் பாரிக்கலானான். இதுவெல்லாம் ஒரு பக்கமிருக்க கிடைத்த ஒரு லக்ஷம் ரூபாய்களைச் சேமித்துவைக்க ஆரம்பித்து, நோட்டுகளை எண்ணிக் கட்டுக் கட்டாக ஒருபக்கம் வைத்தான். ஸவரங்களின் பைகளைக் கொட்டி எண்ணத் தொடங்கினான். இப்படி இவன் கனுக்கண்டு களித்திருக்கும்பொழுது இவன் வீட்டின் கதவு திறக்கப்பட்டது. இவனுக்கு மாதந்தோறும் உதவிப்பணம் கொணர்ந்து கொடுக்கிற தருமநிதிச் சேவகன் உள்ளேவந்து 'இதோ இந்த மாதத்தின் உதவிப்பணம் பத்துரூபாய்' என்றுசொல்லி ரூபாயைக் கொடுக்கவந்தான். இத்தருணம் அவ்வேழை மனிதன் பாதிகனவும் பாதி நனவுமாயிருக்கும் நிலைமையாதலால் 'அப்பா! இனி எனக்கு உங்கள் தருமநிதிப் பணம் தேவையில்லை; என்னிடம் நிரம்ப ரூபாய்கள் இருக்கின்றன; என்பெயரை லிஸ்டில் அடித்துவிடலாம்; நான் பெரிய பணக்காரனாய் விட்டேன்; இதோ பார்! பணப்பைகளை' என்றான். அதுகேட்டுச் சேவகன் போய்விட்டான். தருமநிதியின் தலைவரிடம் போய் நடந்ததைச் சொல்லவே அவர் இவ்வேழையின் பெயரை லிஸ்டில் அடித்துவிட்டு அப்பணத்தை மற்றோர் ஏழைக்குக் கொடுத்துவரக் கட்டளையிட்டுவிட்டார்.

கனுக்கண்ட அவ்வேழை மனிதன் விழித்துக்கொண்டான். கண்டகனவை மறந்து நித்தியக் கடன்களைச் செய்யத் தொடங்கினான். அன்று அம்மாதத்தின் முதல் தேதி. மாதந்தோறும் முதல்தேதி யன்றுதான் தருமநிதியிலிருந்து அவனுக்குப் பணம் கிடைப்பது வழக்கம். பொழுதுவிடிந்து சிறிது நேரமாயிற்று; அவ்வேழை யோசிக்கலானான்—இன்று முதல்தேதியாய்த்தே; காலை ஆறுமணிக்கே தருமநிதிச் சேவகன் பணம் கொணரவேணுமே; இவ்வளவு நேரமாகியும் சேவகன் ஏனோ வரவில்லை! சாப்பாட்டு விடுதிக்காரனுக்கு இன்று நாம் பணம் கொடுக்க வேணுமே; வீட்டுக் குடையவன் வாடகைப்பணம் கேட்பனே; இதுகாறும் பணம் வரவில்லையே. ஒருகால் இன்று அச்சேவகனுக்கு வேறு வேலை ஏதாவது ஏற்பட்டிருக்கும்; நாளை வரக்கூடும்—என்றிவ்வாறு முடிவு செய்துகொண்டு சேவகனையெதிர்பார்த்தவனாய் அன்றைப்பொழுதைப் போக்கினான்; மறுநாளும் இப்படியே

போயிற்று. மூன்றுவது நாளும் அப்படியே போயிற்று. அவ்வேழை மனிதன் பல தொல்லைகளினுல் மிகவும் பீடிக்கப்பட்டு வருந்தினுன்; நான்காந்தேதி தருமநிதிக்கே நேரிற் சென்று நிதியின் தலைவரைக் கண்டான். 'தங்கள் பணத்தையே நம்பி ஜீவிப்பவனுன என்னை இப்படியும் கஷ்டப்படுத்தலாமா? இன்று தேதி நான்காகியும் எனக்கு உதவிப்பணம் கிடைக்கவில்லையே; முதல்தேதி தோறும் தவருது கிடைத்துவந்த பணம் நாலுநாளாகியும் கிடைக்கா தொழிந்தமைக்குக் காரணமென்னவோ? இப்படிச் செய்யலாமா?' என்று முணுமுணுத்தான்.

அதுகேட்ட நிதித் தலைவர் "அப்பா! முதல் தேதி காலை ஆறுமணிக்கு வழக்கம்போல் நிதியின் சேவகன் பணத்தோடு உன் வீடு வந்திருந்தான்; அன்று நீ பணம் வாங்க மறுத்தாயாம். 'என்னிடத்தில் நிரம்ப ரூபாய்கள் இருக்கின்றன; இனி உதவிப்பணம் எனக்குத் தேவையில்லை, என் பெயரை இனி நீக்கிவிடலாம்' என்று சொன்னுயாம்; நான் உன் பெயரை லிஸ்டில் அடித்துவிட்டேன். உனக்குக் கொடுக்கப்பட்டு வந்த அந்த பத்து ரூபாயை வேறொரு ஏழைக்குக் கொடுத்து வருமாறு ஏற்பாடாகி விட்டதே" என்றுர் அந்த நிதித் தலைவர். இது கேட்ட அவ் வேழைக்குத் தான் கண்ட கனவு நினைவுக்கு வந்தது. அதை நிதித்தலைவரிடம் சொல்லியழுதான். அப்பா! நான் என்னசெய்வேன்? போய்வா என்று சொல்லி யனுப்பிவிட்டார் நிதித்தலைவர். பிறகு அவ்வேழை ஒரு ஆசார்யரையடுத்து அவரிடம் உபதேசங்கள் கேட்டுக்கொண்டு வாழ்ந்து வந்தான். .... ... *

## — நமக்கு உண்மையாக ஸ்ரீவைஷ்ணவத்வமுண்டா? —

71. நாம் ஸ்ரீ வைஷ்ணவர்கள். நம்முடைய லக்ஷணத்தை விளக்கவந்த சாஸ்த்ரங்கள் பலமுகமாகப் பேசியுள்ளன. "யே கண்டலக்நதுளஸீநளிநாக்ஷ மாலா: யே பாஹுமூல பரிசிஹ்நிதசங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ரா: தே வைஷ்ணவா புவநம் ஆசு பவித்ரயந்தி." என்கிற சுலோகம் பெரும்பாலும் பலருமறிந்ததேயாகும். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இருக்கவேண்டிய வெளிவேஷங்களை மாத்திரம் இந்த ச்லோகம் தெரிவிக்கின்றதேயன்றி அந்த:கரணத்தில் இருக்க வேண்டிய அம்சங்களில் ஏகதேசத்தையும் தெரிவிக்கவில்லை. அவற்றைத் தெரிவிக்கின்ற ச்லோகங்களும் இதிஹாஸ புராணங்களில் மலிந்துகிடக்கின்றன. பகவத்கீதையில் பத்தாவது அத்யாயத்தில் (ச்லோ. 5) "அஹிம்ஸா ஸமதா" என்றவிடத்தில் ஸமதா என்பதை விவரித்தருளாநின்ற நமது பாஷ்யகாரர் "ஸமதா-ஆத்மநி ஸுஹ்ருத்ஸு விபக்ஷேஷு ச ஸமமதித்வம்" என்றுரைத்தருளினுர். அங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் *ஸமமதிராத்ம ஸுஹ்ருத்விபக்ஷபக்ஷே—இதி பகவத்பராசரவசந மிஹ தத்தத் பதை: ஸ்மாரிதம்* என்றுள்ளது. ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் 3—7—20) *ந சலதி நிஜவர்ணதர்மதோ ய: ஸமமதி ராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே, நஹரதி நச ஹந்தி கிஞ்சிதுச்சை: ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணு பக்தம்* என்றுள்ள சுலோக ரத்நமே இங்கு எடுத்துக் காட்டப்பட்டதாயிற்று. இதில் *ஸமமதிராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே* என்கிற இரண்டாவது பாதம் முக்கியமாகக் கணிசிக்கத் தக்கது. தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன் பக்கலில் பகை பாராட்டுமவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியை யுடையவனுயிருப்பவன் எவனே அவனே ஸ்ரீவைஷ்ணவன் என்று இதனுல் தெரிவிக்கப்படுகின்றது. இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவத்வம் ப்ரஹ்லா

தாழ்வான் போல்வாரிடத்தில் இருந்ததாகக் கதைகளில் கேட்டுவருகின்றோமத்தனையல்லது இக்காலத்தில் சிலரிடத்திலாவது இதைக் காணமுடியுமோ? ... ✻

## — பட்டரைப்பற்றின ஓர் இதிஹாஸம் —

72. முற்காலத்தில் பட்டர் நம்பிள்ளைபோல்வாருடைய சில இதிஹாஸங்களை நாம் கேட்கும்போதும் புத்தகங்களில் வாசிக்கும்போதும் 'உண்மையாக இங்ஙனே நடந்திருக்குமோ! என்று அதிசங்கிக்குமவர்களாக நாம் இருக்கின்றோமே தவிர, 'நாமும் அந்த நடையைச் சிறிதாகிலும் அநுசரிக்கமுயலவேண்டும்' என்று பாரிக்கிற அதிகாரிகள் இலரென்றே சொல்லவேண்டும். ஸ்ரீவசநபூஷணத்தில் "குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" என்றவிடத்து ஜநந்யாசார்யருடைய வியாக்கியானமான ஆய்ப் படியில்—"பட்டர் ஒரு நாள் பெருமாள் ஸந்நிதியிலே அநுஸந்தானம் பண்ணாநிற்க, சிலர் செவி பொறுக்கவொண்ணாத பருஷோக்திகள் பண்ணக்கேட்டு, சாத்தின திருவாழிமோதிரத்தையும் திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப் பார்த்து, இவர்கள் பருஷித்ததுக்கு நான் அஞ்சிக் கொடுத்தேனன்று; நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப் பற்றக் கொடுத்தேனத்தனை .......என்றருளிச்செய்தார்" என்று காண்கிறது. பட்டர் தம்மை தூஷித்தவர்களுக்கு பூஷண தானமும் பீதாம்பர தானமும் செய்தருளின தாக இங்ஙனே இதிஹாஸம் காண்கிறோம். இதையெல்லாம் நாம் பிறர்க்கு எடுத்துரைக்கும்போது கல்லும் கரையும்படி உரைக்கின்றோம்; கேட்பவர்களும் கண்ணுங் கண்ணீருமாயிருந்து புளகாஞ்சிதராய்க் கேட்கிறார்கள். ஆனால் அவரவர்களுடைய அநுஷ்டாநம் எங்ஙனே யிராநின்றதென்று பார்த்தால் வாய்திறக்க வழியேயில்லை.

## — நம்முடைய நைச்சியாநுஸந்தானத்தின் அழகு —

73. நமக்கு நைச்யாநுஸந்தானம் ஸ்வரூபம் என்றறிந்து நாம் "நீசனேன் நிறையொன்றுமிலேன்" என்றும் "சீலமில்லாச் சிறியன்" என்றும் பலவாறு பாசுரங்களையும் ச்லோகங்களையும் முன்னிட்டுத் தாழ்வு சொல்லிக்கொள்ளுகிறோம். நம் வாயினால் வெளிவந்த அந்தத் தாழ்வுதன்னையே பிறரொருவர் நம்மை நோக்கி எடுத்துரைக்கத் தொடங்கினால் 'என்னையா நீச னென்கிறாய்? என்னையா நிறை யொன்றுமில்லாதவனென்கிறாய்? என்னையா சீலமில்லாச் சிறியனென்கிறாய்? பாவீ! நீயன்றோ இப்படிப்பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரம் வகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி 'ஸ்வாமிந்! ஸ்ரீபாததீர்த்தம் ஸாதிக்கவேணும்' என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் 'ஐயோ! அடியேனுக்கென்ன யோக்யதையுண்டு? ஸகலவிதத்திலும் அயோக்யனன்றோ அடியேன்' என்று பல படியாக நிகர்ஷாநுஸந்தானம் பண்ணுகிறார்கள். இந்த அநுஸந்தானம் உள்ளவாறு செய்கிறபடியா? அல்லது இங்ஙனே சொல்லிக்கொள்ள வேண்டுவது ஒரு உபசார வழக்கு என்றுகொண்டு செய்கிறபடியா? என்று நாம் ஆலோசித்தால், அவர்களு

டைய ஹ்ருதயத்தை நம்மால் தெரிந்துகொள்ள முடியாதாயினும், அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத்தன்மையை நம் வாயினால் சொல்லிக்காட்டினாலும் அவர்கள் உகந்தேயிருப்பர்களாயின் அப்போதுதான் அவர்களுடைய நைச்யாநுஸந்தானத்தை நாம் ஸஹ்ருதயமென்று நினைக்கலாகும். 'அஹம் அமர்யாதஃ, அஹம் க்ஷுத்ரஃ' என்று நைச்யாநுஸந்தானம் பண்ணுமவர்கள் "த்வம் அமர்யாதஃ த்வம் க்ஷுத்ரஃ என்கிற பரோக்திகளை உகந்திருக்கின்றார்களா? என்றே நாம் பார்க்கவேண்டும். கூரத்தாழ்வான் போல்வாரான சிலரே அங்ஙனமிருந்தார்கள் என்று சொல்லவேண்டியதாகின்றது. தம்மைப் பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷோக்திகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக ப்ரதிஸத்காரம் செய்யப் புறப்படுமவர்கள் தாங்கள் செய்துகொள்ளும் நிகர்ஷாநுஸந்தானம் அர்த்தமற்றதேயாம்.

## — அநுஷ்டானத்திற்கு உதவாத உபதேசம் —

74. "ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு" என்று பிரசங்க மேடைகளில் பேசுவோரை மிக மிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை யொருவர் அடிப்பதாகக் கை யோங்கும்போதே என்ன நடக்கிறதென்பதையும் காணாநின்றோம். ஸபைகளில் சிலர் உபந்யாஸம் பண்ணி முடிக்கும்போது "ஒன்றுமறியாத நான் ஏதோ தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்; இதில் ஒன்றும் நலமிராது; சிறியேனை க்ஷமிக்கவேணும்" என்று கால்மணி காலம் சொல்லி முடிப்பர்கள். இதே வார்த்தையை அவர் (தம்மைப்பற்றி) அயலார் வாயில் கேட்பாராகில், கோபாவேசங்கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று "எனக்கா ஒன்றும் தெரியாது, நானா தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்" என்று ஆரம்பித்து (அவரே) பிரபலமாக அட்டஹாஸங்களைச் செய்யக் காண்கிறோம். ஆசார்யபீடம் வஹிக்கின்ற எந்த வ்யக்தியும் தம் நிகர்ஷத்தைத் தாம் அநுஸந்திக்கிறவர்களாக இருக்கின்றார்களே யல்லது, தம்மைப்பற்றிப் பிறர்கூறும் நிகர்ஷத்தை ஆமோதிப்பவர்களாக இல்லையே? அப்படியிருப்பவர்களன்றோ ஸ்ரீவைஷ்ணவத்வ பூர்த்தியுடையவராவார். இக்காலத்தில் இப்படிப்பட்ட வ்யக்தி தேறுவது கஷ்டமாதலால் ஒருவரும் ஸ்ரீவைஷ்ணவரல்லர் என்று நாம் சொல்லவும் நினைக்கவும் தகாது. *ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாத் ஜாதத்வம் ப்ராஹ்மண்யம்* [ப்ராஹ்மண யோநியில் பிறப்பதே ப்ராஹ்மண்யம்] என்று சொல்லுவதுபோல, *வைஷ்ணவ்யாம் வைஷ்ணவாத் ஜாதத்வம் வைஷ்ணவத்வம்* [வைஷ்ணவயோனியில் பிறப்பதே ஸ்ரீவைஷ்ணவத்வம்] என்றுசொல்ல ப்ராப்தமாகிறது. அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களுடையவும் திருவுள்ளம் புண்படாதபடி வர்த்திக்க வேண்டியது நமது கடமையேயாகும். ஒரு வைஷ்ணவருடைய திருவுள்ளம் கன்றினால் அதிற்காட்டிலும் அநர்த்தபீஜம் நமக்கு வேறில்லை என்கிற துணிவு பிறக்கவேணும். ... ... ...

## — கல்விகளின் ஸாதாரண வகைகளும் அந்தரங்க வகைகளும் —

75. சில மஹான்களை சதுர்தச வித்யாபாரங்கதர்களென்று கொண்டாடுவதுண்டு. பதினான்கு வித்யைகளில் கைதேர்ந்தவர்கள் என்பது இதன் கருத்து.

பதினுன்கு வித்யைகள் எவையென்னில், நான்கு வேதங்களுக்கும் அங்கமாக அமைந்த ஆறும் உபாங்கமாக அமைந்த எட்டுங்கூடிப் பதினுன்கு என்கிறது. சீக்ஷாவ்யாகரணுதிகளான ஆறங்கங்களும், மீமாம்ஸாந்யாய புராண தர்மசாஸ்த்ராதிகளான எட்டு உபாங்கங்களும் ப்ரஸித்தமானவை. இப்பதினுன்கு வித்யைகளில் வல்லவர்களை சதுர்தச வித்யாபாரங்கதர்களென்று சொல்லுகிருேம். இங்ஙனே அர்த்தங் கொள்வது தவிர மற்றெருவிதம் நைஷதகாவியம் முதல் ஸர்க்கத்தில் ஸ்ரீ ஹர்ஷ மஹாகவியினுல் காட்டப்பட்டிருக்கின்றது. * அதீதிபோதாசரண ப்ரசாரணை: * என்கிற சுலோகம் காண்க. அதைச் சிறிது விவரிக்கிருேம். (சதுர்தச) என்பதற்கு நான்கோடே கூடிய பத்து என்று பொருள் கொள்ளுமளவில் பதினுன்கென்று தேறுகிறது. அப்படியன்றிக்கே "சதஸ்ரோ தசா: யாஸாம் தா: (வித்யா:) சதுர்தசவித்யா:" என்று கொள்ளுமளவில், 'நான்கு அவஸ்தைகளையுடைய வித்யைகள்' என்று பொருள் தேறும். வித்யைகளுக்கு நான்கு அவஸ்தைகள் யாவையென்னில்; வாசிக்கப்படுதல், அறியப்படுதல், அறிந்தபடியே அநுஷ்டிக்கப்படுதல், தாம் அநுஷ்டிப்பதோடு நில்லாமல் பிறரையும் அநுஷ்டிக்கச் செய்யப்பெறுதல் ஆகிய இவையாம்.

வித்யைகளை ஏடுபார்த்து உணருகையன்றிக்கே குருமுகமாகக் கேட்கை அத்யயனம் செய்வது. இது முதல் அவஸ்தை. வாசிப்பவர்களெல்லோரும் விஷயம் தெரிந்துகொள்ளுகிருர்க ளென்பதில்லாமையாலே சிரமப்பட்டுப் படித்து விஷயங்களும் தெரிந்துகொள்ளப்பெறுதல் இரண்டாமவஸ்தை தெரிந்துகொள்வதற்கு ப்ரயோஜநம் அநுஷ்டானமே யாதலால் தெரிந்துகொள்வதோடு நில்லாமல் அநுஷ்டானமும் செய்யப்பெறுகை மூன்ரும் அவஸ்தை. தான் அநுஷ்டிப்பதோடு நில்லாமல் பிறரையும் அனுஷ்டிப்பிக்கப் பெறுவது நான்காமவஸ்தை. ஆக இப்படிப்பட்ட சதுர்வித தசைகளையுடைய வித்யைகள்—சதுர்தச வித்யைகள். இப்படி சமத்காரமானவொரு நிர்வாஹத்தைக்காட்டினுர் ஸ்ரீஹர்ஷமஹாகவி. .... *

## — நம்மாழ்வாருடைய அநுபவ விசேஷங் காட்டுதல் —

76. மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்கள் தமது திவ்வியப் பிரபந்தங்களினுல் எம்பெருமானைத் தோத்திரஞ் செய்வதாகப் பலர் கருதுவர், கூறுவர் எம்பெருமானது திருக்குணங்களை யனுபவிக்கிருர்களென்பதே பொருத்தமுடைத்தாகும். நம்மாழ்வார் **சீர்த்தொடையாயிர** மென்றே திருவாய்மொழிக்குத் திருநாமஞ் சாற்றினர். மலர்களையிட்டு மாலை தொடுப்பதுபோல் பகவத்குணங்களையிட்டுச் செந்தமிழ் மாலையாகிய திருவாய்மொழியைத் தொடுத்தனரென்க. **சீர்** என்று குணங்கட்குப் பொதுப்பெயர். "சீர் கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையினும் துயரை, என்னினைந்து போக்குவர் இப்போது" என்ருர் நம்மாழ்வார் தாமே பெரியதிருவந்தாதியில். இதன் கருத்து மிகவழகியது. எம்பெருமானது திருக்குணங்களை யனுபவித்தால் பாவங்கள் தொலையுமென்று சிலர் நினைப்பர். பாவங்கள் தொலையட்டும் தொலையாதொழியட்டும், இன்னமும் கூடு பூரித்தாலும் பூரிக்கட்டும்; இப்போதை என்னினைந்து போக்குவர்? நாம் இவ்வுலகிலிருக்குமளவும் போதைப் போக்கியாக வேணுமே; பகவத் குணுநுபவத்தினுலொழிய வேறு எதனுலும் போதைப் போக்கமுடியாதேயென்று கருதுகின்ருராழ்வார். நம்போன்ற ஸம்ஸாரிகள் சூது சதுரங்கம் பொருது போதைப் போக்குகிருேம். இங்ஙனேயொரு போதுபோக்கிருப்பதாக ஆழ்வாரறியார். ... ... ... *

# ஸ்ரீமஹாவிஷ்ணு பரத்வ விருந்துகள் பன்னிரண்டு

## — திருமழிசைப்பிரானது போதுபோக்கு —

77. நம்மாழ்வார்க்கு முந்திய திருமழிசைப்பிரான் "உன்னைத் தெரிந்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்று தாம் போது போக்கின படியைப் பிரசுரப்படுத்தி வைத்தார். இப்பாசுரத்தில் ஏழு விதமான போது போக்குகள் காட்டப்பட்டிருந்தாலும் அவையெல்லாம் குணானுபவ ரூபமாகவும் குணானுபவம் பொங்கி வழிந்த செயல்களாகவுமே கொள்ளப்படும். எம்பெருமானுடைய திருக்குணங்கள் எண்ணிறந்தவை. அவை பொதுவாக பரத்துவம் ஸௌலப்யம் என்ற இருவகுப்பில் அடங்கியிருக்கும், பரத்வமாவது மேன்மை; ஸௌலப்யமாவது எளிமை. உலகில் மேன்மை தங்கிய பொருள் எளிதாயிராது; எளிதான பொருள் மேன்மை யுற்றதாயிராது; மேருமலை, கைலாயமலை, பாற்கடல், கற்பவிருக்ஷம் என்கிறோம். இவற்றின் மேன்மை தெரிந்ததே. ஆனால் இவை ஒருவர்க்கும் கோசரமல்லவாதலால் இவற்றில் எளிமையென்பது சிறிதுமில்லை யென்றறிகிறோம். எளிதாகக் கிடைக்கக்கூடிய தெருப்புழுதி போன்ற பொருள்களில் மேன்மையில்லை யென்பதையுங் காண்கிறோம். ஆக மேன்மையும் எளிமையும் ஓரிடத்தில் சேர்ந்திரா தென்றறிந்தோம். இவை யிரண்டும் சேர்ந்திருப்பது எம்பெருமா னொருவனிடமேயாகும். அவனது எளிமையை நாம் அர்ச்சாவதாரத்தில் அனுபவிக்கின்றோம். மேன்மையை வேதங்கள் இதிஹாஸ புராணங்கள் முதலிய சாஸ்த்ரங்களினால் அறிகிறோம் சாஸ்த்ரங்களில் ஆழ்ந்த ஞானமில்லாதவர்கள் தம்தம் மனம்போனபடி பிற தெய்வங்களைப் பரதேவதையாகக் கூறுவார்கள். நாராயணன் வாஸுதேவன் விஷ்ணு முதலான திருநாமங்களினால் வழங்கப்பெறுகிற தெய்வமே பரதெய்வமென்பதைப் பரம வைதிகர்கள் அறுதியிட்டிருக்கிறபடியே ஈண்டு நாம் விவரிக்க விரும்புகின்றோம். *

## — ஆளவந்தாருடைய அரியபெரிய திருவாக்கு —

78. (2) ஆளவந்தார்ஸ்தோத்ரம் என்று ப்ரஸித்தமான ஸ்தோத்ர ரத்னமானது "ஸ்வாதயந்நிஹ ஸர்வேஷாம் த்ரய்யந்தார்த்தம் ஸுதுர்க்ரஹம், ஸ்தோத்ரயாமாஸ" என்கிற தனியனிற் கூறியபடியே அரியபெரிய வேதாந்தப் பொருள்களை எளிதாகவுணர்த்த அவதரித்ததாம். அதில் பதினைந்தாவது சுலோகம் "த்வாம் சீலரூப சரிதை: பரமப்ரக்ருஷ்ட ஸத்வேந ஸாத்விகதயா ப்ரபலைச்ச சாஸ்த்ரை:, ப்ரக்க்யாத தைவபரமார்த்த விதாம் மதைச் ச நைவாஸுர ப்ரக்ருதய: ப்ரபவந்தி போத்தும்" என்பது. எம்பெருமானுடைய பரத்வத்தைத் தெரிந்துகொள்வதற்கு உரிய வழிகளைக் காட்டுவது இந்த சுலோகம். சீலம், ரூபம், சரித்திரம், பரமஸாத்விகத்தன்மை, ஸாத்விக சாஸ்த்ரங்கள், தத்வவித்துக்களின் ஸித்தாந்தம்—ஆகிய இந்த ஆறுவகைகளாலே எம்பெருமானுடைய பெருமை அறுதியிடப்படுமென்று அருளிச்செய்துள்ளார். இதற்கு அடியேனுடைய விரிவுரை காண்க. திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்தில் "காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தருமிடுக்கிலாத தேவரை, ஆணமென் றடைந்துவாழுமாதர்காள்!" என்றருளிய பாசுரத்தின் உரையுங் காண்க. இவ்விரண்டு திவ்ய ஸூக்திகளுக்கு விவரணமாகவே விருந்துகளை யளிக்கின்றேன். *

## — பார்வதீபரமேச்வர ஸம்வாதமெடுத்துக்காட்டுதல் —

79. (3) முதன்முதலாக, சிவபெருமானுக்கு ஸ்ரீமஹாவிஷ்ணுவினிடத்தில் எவ்விதமான ப்ரதிபத்தி யென்பதை உலகமெல்லா மறிந்தவகையில் நிரூபிப்போம். ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் உபோத்காத மென்னும் முன்னுரை யதிகாரத்தில் 'பார்வதீ உவாச" என்று பார்வதியின் வினவாக ஒரு சுலோகமும், "ஈச்வர உவாச" என்று பரமசிவனுடைய விடையாகவொரு சுலோகமும் உலகமெல்லாம் ஓதிவருவது மறைக்கவோ மறுக்கவோ முடியாதது. பார்வதீ தேவி வினவிய தென்னவென்றால் "கேநோபாயேந லகுநா விஷ்ணோர் நாமஸஹஸ்ரகம், பட்யதே பண்டிதைர் நித்யம் ச்ரோதுமிச்சாம் யஹம் ப்ரபோ!" என்பது. இதன் பொருளாவது சிறியதோர் உபாயத்தினால் விஷ்ணுவின் ஆயிரந் திருநாமங்களையும் சொன்னதாக ஆவதற்கு வழியுண்டோ? என்பதாம் இதற்குப் பரமசிவன் தந்த விடையாவது 'ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மநோரமே, ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வராநநே" என்பதாம். ராமநாமத்தைச் சொன்னால் விஷ்ணுவின் ஆயிர நாமங்களுஞ் சொன்னதாக ஆய்விடுமென்றும், நானும் அந்த ராமநாமஸங்கீர்த்தனத்தில்தான் ரமித்திருக்கிறேனென்றும் சிவபெருமான் விடையிறுத்ததாகத் தேற்றறு "பார்வதீ! என் பெயரைச் சொன்னால் ஆயிர நாமமுஞ் சொன்னதாக ஆய்விடும்" என்று பரமசிவன் விடையிறுத்ததாக இல்லை அப்படிச் சொன்னால் பரதேவதைக்கு த்ரோஹம் செய்ததாக ஆகுமென்றஞ்சியே அப்படிச் சொல்லவில்லை. உலகில் அவரவர்கள் தம்தம் மனைவிமாரிடத்தில் தங்கள் பெருமைகளைப் பேசிக்கொள்வதுண்டு; அப்படி இவரும் பேசுவரோ வென்று பரீக்ஷிப்பதற்காகவே பார்வதி தன் பர்த்தாவை நோக்கி இக்கேள்விகேட்டிருக்கலாம். அந்தப் பரீக்ஷையில் பரமசிவன் ஏமாந்து போகாமல்— தனக்கில்லாத பெருமையைத் தான் பேசிக்கொள்ள முன்வர மாட்டாமல் உண்மையான விடையைவிடுத்தது உலகமெல்லாம் உண்மையுணர. •

## — ஸ்ரீராமபிரானுடைய உண்மை ஸ்வரூபமுணர்த்துதல் —

80. (4) இதற்குமேல் அந்த இராமன் யாவனென்று கண்டுணரவேணும். இதை உள்ளபடி யுணர்த்துவதில் வான்மீகி ராமாயணமே வல்லமை பெற்றதாம். அதிற் பலபல சுலோகங்களிருந்தாலும் இங்கு நாம் சிற்சில சுலோகங்களையே காட்டுதும். அதில் அயோத்யா காண்டத்தின் தொடக்கத்தில் "ஸஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:" என்று ஸ்ரீமஹாவிஷ்ணுவே ஸ்ரீராமபிரானாய் அவதரித்ததாக அறுதியிடப்பட்டுள்ளது. இராமாயணத்தின் ஆரம்பத்தில் "ஏதஸ்மிந் அந்தரே விஷ்ணுருபயாதோ மஹாத்யுதி:" என்றதும், இராவண வதத்திற்குப் பிறகு தேவர்களனைவரும் திரண்டு வந்து "பவாந் நாராயணோ தேவ:" என்றதும் குறிக்கொள்ளத் தக்கது. அத் தேவர்களின் திரளில் முக்கண்ணப்பனும் சேர்ந்திருந்ததை வான்மீகி முனிவர் "ஷடர்த்த நயந: ஸ்ரீமாந்" என்று கண்ணையிட்டுக் காட்டி வைத்தார். •

### — உத்தர ஸ்ரீராமாயணம் காட்டிய தத்துவமொன்று —

81. (5) இவை தவிர முக்கியமாக நோக்கத்தக்கதொன்றுண்டு; இலங்கையில் இராவணன் முதலியோர்க்கு முன்பு குடிவாழ்ந்த மாலி சுமாலி மாலியவான் களை வதைக்க வழிதேடின தேவர்கள் முதலில் சிவபெருமானைச் சரணமடைந்து வேண்டிக்கொண்டதாகவும், அப்பெருமான் "இது என்னாலாவதன்று, சங்க சக்ர கதாபாணியான ஸ்ரீமந் நாராயணனே இவர்களை வதைக்க வல்லவன் என்று சொன்னதாகவும், பிறகு அவர்கள் ஸ்ரீமந் நாராயணனை அடைந்து வேண்டி அபயம் பெற்றதாகவும் உத்தர ஸ்ரீராமாயணத்தில் ஆறுவது ஸர்க்கத்தில் கூறப்பட்டுள்ளது. இத்தகைய பல இதிஹாஸங்களினால் சிவபெருமான் ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் பர தெய்வமாகப் பிரதிபத்தி பண்ணியிருந்தமை விளங்குகிறது. ஆகவே தான் அந்த விஷ்ணுவின் அவதாரமான இராமபிரானிடத்திலேயே தான் உளங்கனிந்திருப்பதாகத் தன் தேவிக்கு உரைத்தனனென்பது விளங்கிற்று. அன்றியும் முக்கியமான விஷயமொன்று கேண்மின். புராணங்களை ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்று மூன்று வகுப்பாக்கி, அக்நி, சிவன் இவர்களுடைய பெருமை தாமஸ புராணங்களில் சொல்லப்படுவதாகவும், பிரமனுடைய பெருமை ராஜஸ புராணங்களில் பேசப்படுவதாகவும், ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் பெருமை ஸாத்விக புராணங்களில் கூறப்படுவதாகவும் மத்யஸ்தர்களான மஹர்ஷிகளே எழுதி வைத்துள்ளார்கள். .... ... ... .... .... *

### — வேதத்திலிருந்து விஷ்ணுவைபவ முணர்த்துதல் —

82. (6) இதிகாச புராணங்களைப்பற்றி மேலேயெடுத்துக் கொள்வோம். வேதத்தில் விஷ்ணுவைப்பற்றின மதிப்பு எத்தகைத்தென்பதை முன்னம் உள்ளபடி உணரவேண்டும். இவ் விஷயத்தை இங்கு நாம் அபூர்வமானதோர் ஆராய்ச்சியாக வெளியிடுகிறோம். வேதத்தில் ஆழ்ந்த ஞானமுள்ளவர்களும், அதில் உண்மையான பிரதிபத்தி யுள்ளவர்களும் இவ்வாராய்ச்சியை ஆழ்ந்து அனுபவிக்க வேணும். வேதத்தில் பிரஸ்தாவிக்கப்படாத தேவதை கிடையாது. எல்லாத் தெய்வங்களும் பிரஸ்தாபிக்கப்பட்டு ஒவ்வொரு தெய்வத்தைப் பற்றியும் பலபல கதைகள் ஓதப்பட்டிருக்கின்றன வென்பதை வேதமோதினவர்களே அறிவார்கள். அக்னி இந்திரன் ப்ருஹஸ்பதி மித்ராவருணர் ருத்திரபகவான் என்றினைய தேவர்களைப்பற்றிக் கதைகள் சொல்லப்பட்டிருப்பது போலவே விஷ்ணுவைப்பற்றியும் சொல்லப்பட்டுள்ளது. அக்னி முதல் ருத்ரன் வரையிலுமுள்ள தேவர்களைப்பற்றிச் சொல்லப்படும் கதைகளையும் விஷ்ணுவைப்பற்றிச் சொல்லப்படும் கதையையும் ஊன்றிப் பார்க்கவேணும். (விஷ்ணு தவிர மற்ற) தேவர்களிடத்திலே யாரேனும் வந்து "எங்களுக்கு இன்ன காரியம் செய்து தரவேணும்" என்று வேண்டினால், உடனே அந்த தேவதைகள் என்ன பதில் சொல்லுவது வழக்கமென்றால், "வரம் வ்ருணை" என்றோ, "வரம் வ்ருணுமஹை" என்றோ சொல்லி "நான் இன்ன வரம் விரும்புகிறேன், இதை எனக்குக் கிடைக்கச் செய்தால் உங்களுக்கு நான் காரியஞ் செய்கிறேன்" என்றுசொல்லி வரம் பெற்றுக்கொண்டே காரியஞ் செய்வது வழக்கம்,

விஷ்ணுவிடம் வந்து ஏதேனும் காரியம் வேண்டும்போது அவர் இங்ஙனே பல்லைக் காட்டி வரம் வேண்டினதாக ஓரிடத்திலும் கிடையாது. இது நாம் வஞ்சனையாக வரைவதன்று. "வரம் வ்ருணை—வரம் வ்ருணுவஹை—வரம் வ்ருணுமஹை" என்று நமது யஜுர் வேதத்தில் எத்தனை யிடங்களில் ஓதப்பட்டிருக்கின்றதோ அத்தனை யிடங்களையும் வைதிகர் திரளில் காட்டவல்லோம், காட்டியுமிருக்கிறோம். குறைவாளர்களே வரம் வேண்டுவர்களென்பதையும், வரம் வேண்டாதவர்கள் அவாப்த ஸமஸ்த காமர்களென்பதையும் நாம் சொல்லவேணுமோ? எங்கேனும் ஓரிடத்திலாவது விஷ்ணுவின் வாக்கிலும் "வரம் வ்ருணை" என்கிற வாக்கியம் வெளிவந்திருப்பதாகக் காண முடியுமானால் "மற்ற தெய்வங்களைப்போலே அவரும் குறைவாளரே யொழிய அவாப்த ஸமஸ்த காமரல்லர்" என்று கொள்ளலாம். ... *

## — பரமசிவனுக்குப் பசுபதி யென்னும் பெயர் வந்தவிதம் —

83. (7) ஒன்றே பார்க்கலாம். பரமசிவனுக்குப் பசுபதி யென்னும் பெயருள்ளது; இப்பெயர் அவருக்கு எப்படி கிடைத்ததென்பதை நமது வேதம் நன்கு காட்டியுள்ளது. யஜுர் வேதத்தில் ஆறுவது காண்டத்தில் இரண்டாம் ப்ரச்னத்தில் த்ரிபுரஸம்ஹார கதை சொல்லு மநுவாகத்தில்—தேவர்கள் ருத்ரனை நோக்கித் திரிபுரங்களின் மீது அம்பு எய்யச் சொன்னபோது "ஸோப்ரவீத் வரம் வ்ருணை, அஹமேவ பசூநாம் அதிபதி ரஸாநீதி" என்று, தான் பசுபதியென்று பெயர் பெற வேணுமென்று வரம் வேண்டினதாக ஓதிற்று; விஷ்ணுவினிடத்தில் வந்து காரியம்செய்ய வேண்டினதையும், அவர் யாதொரு வரமும் வேண்டாமல் உடனே காரியம் செய்ததையும் வேதந்தானே சொல்லியுள்ளது. அதை "விஷ்ணவேஹீ இதமாஹரிஷ்யாவ: .....ஸ விஷ்ணுஸ் த்ரேதாத்மாநம் விந்யதத்த" என்பது முதலான விடங்களில் காண்க. வேதமோதின வைதிகர்களைக் கேட்க. .... ... *

## — இதிஹாஸ புராணங்களிற் புகுந்து ஆராய்ச்சி —

84. (8) வைதிகர்களுக்கு முக்கியமாகச் சொல்லுகிறோம். வைதிகர்களால் இதிகாச புராணங்கள் வேதம் போலவே கொண்டாடப்பட்டு வருகின்றன. ஏதோ கதைகள் சொல்லுவதற்காகவே இதிகாச புராணங்கள் தோன்றியதாகச் சிலர் நினைப்பர்கள். உண்மை அதுவல்ல. "இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத், பிபேதி அல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி" என்று மஹர்ஷிகள் தாமே சொல்லிவைத்தார்கள். இதிகாச புராணங்களைக் கொண்டே வேதவியாக்கியானம் செய்யவேண்டு மென்றவாறு. வான்மீகி முனிவர் ஸ்ரீராமாயணத்தை யியற்றிக் குசலவர்களுக்குக் கற்பித்ததைச் சொல்லுமிடத்து "வேதோபப்ரும்ஹணார்த்தாய தௌ அக்ராஹயத ப்ரபு:" என்று சொல்லிற்று. வேதப் பொருள்களை விளக்குவதற்காகவே குசலவர்கள் மூலமாக இராமாயணத்தைப் பரவச்செய்தாரென்றபடி. இவற்றால் நாம் என்ன தெரிந்து கொள்ளுகிறோம்? வேதத்தினுட்பொருள்களை விரித்துரைப்பதற்காகவே இதிகாச புராணங்கள் தோன்றினவென்று தெரிந்துகொள்ளுகிறோம். இதிகாச புராணங்களில் வரும்

கதைகள் வெறுங் கதைகளல்லவென்றும் வேதவிழுப் பொருள்களை விளக்குவன வென்றும் தெரிந்துகொள்வதே வைதிகர்களின் கடமையாகும். இராமபிரானுடைய கதைகளை விளக்கும் இராமாயணதிகளும், கண்ணபிரானுடைய கதைகளை விளக்கும் மஹாபாரத ஸ்ரீ பாகவதாதிகளும் தெரிவிக்கின்ற கதைகளானவை வேதத்திற்கு வியாக்கியான ரூபங்கள் என்றதாகத் தேறிற்று. ஸ்ரீராமனும் ஸ்ரீக்ருஷ்ணனுமாகிற திவ்ய மூர்த்திகள் ஸாக்ஷாத் நாராயண மூர்த்திகளே யன்றி வேறு தேவதைகளின் மூர்த்திகளல்லவென்பது குன்றிலிட்ட விளக்காகும். இதர தேவதைகளின் வேண்டுகோளுக்கிணங்கியே நாராயணன் ராமக்ருஷ்ணதி ரூபேண அவதரித்தமை இதிகாச புராணங்களில் நன்கு விளங்குவதனுல் தேவதைகளுள் பேதமே கிடையாதென்கிற சிலருடைய பேச்சு பொருத்தமற்றதாகும். அப்படி வெவ்வேறு பட்டிருக்கின்ற தேவதைகளுக்குப் பலபல ஆபத்துக்கள் நேர்ந்ததும், அதனுல் அவர்கள் ஸ்ரீமஹாவிஷ்ணுவிடம் வந்து முறையிட்டு அவருடைய திருவருளால் பரிஹாரம் பெற்றதும் இதிகாச புராணங்களிற் பலபல விடங்களிற் பிரசுரமாகியுள்ளது. ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு இப்படியொரு விபத்து நேர்ந்து அதை அவர் இதரதேவதையிடம் முறையிட்டுப் பரிஹாரம்பெற்றதாக ஓரிடத்திலும் ஒரு கதையுங்கிடையாது; இதனை ஆளவந்தார் "வேதாபஹார குருபாதக தைத்யபீடாதி ஆபத்விமோசன மஹிஷ்டபல ப்ரதாநை:" என்பது முதலான சுலோகங்களினுலும், பிள்ளைப்பெருமாளையங்கார் "மங்கை பாகன் சடையில் வைத்த கங்கை யார்பதத்து நீர்" என்பது முதலான செய்யுள்களினுலும் துணிந்து வெளியிட்டுள்ளார்கள். *

## — கீதைக்கு ஆதிசங்கராசாரியர் உரையிடும் விதம் —

85. (9) இனி கீதையைக் கொள்வோம். வேதம் இதிகாச புராணங்கள் முதலிய ஸகல ப்ரமாணங்களைக் காட்டிலும் பகவத்கீதை மிகச்சிறந்ததென்று ஸகல மதஸ்தர்களாலும் குலாவப்பட்டு வருகின்றது. இது பகவான் தானே அருளிச் செய்ததென்னும் ஏற்றமுடையது. இப்பெருமை வாய்ந்த கீதா சாஸ்திரத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் மேன்மையும் பிற தெய்வங்களின் தாழ்வும் அடுத்தடுத்துத் தெரிவிக்கப்படுகின்றது (10—8) "அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே" என்னுமிடத்தில் சங்கரபகவத்பாதாளுடைய பாஷ்யம் காண வேணும். மூலத்தில் நாராயண பதமும் விஷ்ணு பதமும் ஸ்பஷ்டமாக இல்லாத விடங்களில் சங்கரபகவத் பாதாள் விஷ்ணு நாராயண வாஸுதேவ பதங்களை யிட்டு பாஷ்யம் செய்து போகிருர். மேலே யெடுத்தவிடத்தில் (அஹம்—நான்) என்றிவ்வளவே யுள்ளது; இங்கு "அஹம்—பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்யம்" என்பது சங்கரபாஷ்யம். இங்ஙனே பலவிடங்கள். ... ... *

## — ஆதிசங்கரர் தேவதாந்தர பஜனம் செய்வாரைப் பற்றிக் கூறியது —

86. (10.) கீதையிலேயே (9—22) "அநந்யாச் சிந்தயந்தோ மாம்" என்ற விடத்தில் "பரம் தேவம் நாராயணம்........பர்யுபாஸதே, தேஷாம் பரமார்த்த தர்சிநாம்" என்று பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்களே மெய்ப்

பொருள் கண்டறிந்தவர்களென்கிறார் ஆதிசங்கரர். கீதையில் ஸ்ரீமந் நாராயணன் தவிர மற்றுள்ள தேவதைகளை பஜனஞ் செய்பவர்களைப் பற்றிச் சொல்லாமலில்லை. (7—20) "காமைஸ் தைஸ் தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்ய தேவதா:" என்று தொடங்கிச் சொல்லுகையில் (ச்லோ. 23). "அந்தவத் து பலம் தேஷாம் தத் பவதி அல்ப மேதஸாம்" என்று தலைக்கட்டப்பட்டது. தேவதாந்தரங்களைப் பணியும் அறிவிலிகளுக்கு அற்பமான பலனே கிடைக்குமென்றபடி. இந்த சுலோகத்தின் சங்கர பாஷ்யத்தில்—"நாராயணனாகிய தன்னை பஜிப்பவர்களுக்குத் தான் அழிவில்லாத பயன் பெறலாகுமென்று தெரிந்திருந்தும் அந்தோ! சிலர் அற்ப பலனுக்காக அற்ப தேவதைகளைப் பற்றுகிறார்களே! என்று வாஸுதேவன் வருந்திக் கூறுகின்றான்" என்று உரைகாண்கிறது. பகவத் பாதாளும் கண்ணீர் விடுகிறார்.

## — கீதையில் விச்வரூபங் காட்டிய விசித்திரம் —

87. (11) கீதையைப்பற்றி முடிவாக ஒரே விஷயம் தெரிவிக்கிறோம். அதில் பதினோராமத்யாயத்தில் வாஸுதேவன் விச்வரூபம் காட்டுவது பிறதெய்வங்களின் தன்மையைக் கையிலங்கு நெல்லிக் கனியாகக் காட்டுதற் கென்றே அமைந்தது. (11—3) அர்ஜுனன் "நீயே பரமேசுவரனென்பது உண்மையே; ஆனாலும் அதை நான் கண்கூடாகக் காண விரும்புவதால் உனது வைஷ்ணவ ரூபத்தைக் காட்டலாகுமோ?" என்று விரும்ப, தன் திருமேனியின் ஏகதேசத்திலே ஒடுங்கிக் கிடக்கிற ஸகல தெய்வங்களையுங் காணுமென்று காட்டிக் கொடுத்தான் நாராயணமூர்த்தியான கண்ணபிரான்; திவ்யமான கண்ணைப்பெற்று அதுகண்ட அர்ஜுனன் "பச்யாமி தேவாந் தவ தேவ! தேஹே" என்று தொடங்கி பிரமன் சிவனிந்திரன் முதலிய ஸகல தெய்வங்களையும் அவனது திருமேனியில் தான் கண்டமை கூறினன்; "என்னப்பா! இந்திரஜாலம் காட்டுகிறாயே!" என்று கூறிற்றிலன். வேறொரு தெய்வம் இப்படி விசுவ ரூபங்காட்டித் தன்னிடத்து நாராயணன் ஒடுங்கியிருப்பதாகக் காட்டவல்லதோ? காட்டினதாகக் கதையுண்டோ? ... *

## — நேத்ரார்ப்பணீச்வரக் கதையின் கற்பனை —

88. (12) ஸ்ரீ மஹாவிஷ்ணு நாடோறும் பரமசிவனை ஆயிரம் தாமரை மலர்களினால் அர்ச்சித்து வந்ததாகவும், ஒரு நாள் தாமரைப் பூ குறைந்துபோகத் தன் திருக்கண்களைப் பிடுங்கி அவை கொண்டு அர்ச்சித்ததாகவும் அதனாலேயே அப்பெருமானுக்குப் புண்டரீகாக்ஷனென்று திருநாம மாயிற்றென்பதாகவும் சிலர் கூறுவது நகைத்தற்கிடமான கட்டுக்கதை. ஸ்ரீமஹாவிஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் "புண்டரீகாக்ஷ:— பத்மீ பத்மநிபேக்ஷண:— பத்மநாபோரவிந்தாக்ஷ:" என வருமிடங்களிலெல்லாம் சங்கரபகவத் பாதாள் "செந்தாமரை போன்ற இரு திருக்கண்களையுடையவர்" என்றே பாஷ்யமியற்றியுள்ளார். அப்படியொரு கதையிருக்குமானால் அதை சங்கரபகவத்பாதாள் உரிய இடத்தில் காட்டாது விட்டிருக்கமாட்டார். ஆக, வேதங்களாலும் இதிகாச புராணங்களினாலும் விசேடித்து பகவத்கீதையினாலும் அதன் சங்கரபாஷ்யத்தினாலும் தெரியவரும் திருமாற் சிறப்புகளைப் பிரமாண வழிவழுவாது தெரிவித்துத் தலைக்கட்டினோமானோம். .... .... *

## — தூத்துக்குடியுபந்யாஸ விருந்துகள் —

[கீழே பதினேழு முதலான சில பக்கங்களில் ஆழ்வார்திருநகரிப் பயணம் பற்றிப் பேசியிருந்தோம். அவ்விடத்தில் நமது ஆப்தர்கள் பலரைச் சந்திக்க நேர்ந்தது. தூத்துக்குடியில் நமக்குப்பரமாப்தர்களான உயர்திரு. V S. அழகிரி ஸாமி செட்டியார் பிரதர்ஸ் அவ்விடம் வந்திருந்தபடியால் அவர்களது கோரிக்கைக்கிணங்கி, (காஞ்சிக்குத் திரும்பும்போது) தூத்துக்குடி செல்லநேர்ந்தது. அவ்விடத்தில் நம்மாழ்வாருடைய பெருமையைப்பற்றிப் பேசவேணுமென்று அவர்கள் விரும்பியபடி சொற்பொழிவு விருந்துகள் அளித்தோம்; அவற்றின் சுருக்கம் வருமாறு.]

### — தஸ்மை நமோ வகுலபூஷணபாஸ்கராய —

89. ஸ்ரீமந்நாதமுனிகள் தமது காலத்தில் மறைந்திருந்த தமிழ் மறையைப் பெறுதற்காக ஆழ்வார் திருநகரிக் கெழுந்தருளி, அவ்விடத்தில் மதுரகவியாழ்வா ரருளிச்செய்திருந்த [நம்மாழ்வார் துதியான] * கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் திவ்யப்ரபந்தத்தைத் திருப்புளியாழ்வாரடியிலே பன்னீராயிர முறை நியமத்தோடு இருந்து உருச்சொன்ன தன் பயனாக யோகதசையில் ஆழ்வாரை ஸாக்ஷாத்கரிக்கப் பெற்றாரென்பது ப்ரஸித்தமான இதிஹாஸம். அப்போது ஆழ்வாருடைய தோற்றம்



ஒரு விலக்ஷண ஸூர்யப்ராதுர்ப்பாவம் போன்றிருந்தபடியாலே * யத்கோஸஹஸ்ர மென்று தொடங்கி "தஸ்மை நமோ வகுலபூஷணபாஸ்கராய" என்றளவாக ஒரு ச்லோக மருளிச்செய்தார்; நம்மாழ்வாராகிற பூலோக ஸூர்யனை நமஸ்கரிக்கிறேனென்றபடி. நம்மாழ்வாருக்கு மகிழமாலையானது நிருபகமென்று நம்மாழ்வாருடைய

திருவாக்கினுல் விளங்காநின்றது. *ஒன்றுந் தேவுமென்கிற திருக்குருகூர்ப் பதிகத்தின் இறுதிப்பாசுரத்தில் "வண்குருகூர் நகரான் நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்" என்றருளிச்செய்திருக்கையாலே. இஃதடியாகவே ஆழ்வார்க்கு வகுளாபரண:, வகுளபூஷண:, இத்யாதி வடமொழி நாமங்கள் வழங்கி வருகின்றன. ஆழ்வார் நாதமுனிகளுக்கு ஸேவை ஸாதித்தருளினபோது மகிழமாலையை யணிந்துகொண்டே ஸேவைஸாதித்தபடியாலும் *கதிராயிரமிரவி கலந்தெரித்தாற்போல் காட்சி தந்தருளினபடியாலும் வகுளபூஷணபாஸ்கராய நம: என்று பணித்தபடி. ஆழ்வாரை ஸூர்யனுகச் சொல்லும் போதைக்கு நிரூபிக்கவேண்டிய உபபத்திகளை முன்னம் மூன்று பாதங்கள் நிரூபிப்பன. அதன்விவரணம் வருமாறு.

### — யத்கோ ஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம் —

90. ஸூர்யனுக்கு (ஸஹஸ்ராம்சு:) என்றும் (ஸஹஸ்ரகிரண:) என்றும் (ஸஹஸ்ரபாநு:) என்றும் வடமொழிப் பெயர்கள் ப்ரஸித்தமானவை. ஆயிரங் கிரணங்களையுடையவனென்றபடி. வடமொழியில் கோ சப்தம் பல பொருள்களையுடையது. ப்ரக்ருதத்தில் கிரணம், வாக்கு என்கிற இருபொருள்கள் விவக்ஷிதங்கள். ஸூர்யனவன் தன்னுடைய ஆயிரங் கிரணங்களினுலும் இருளைப் போக்குவனென்பது கட்டூடு. "கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தான்" என்றவாறே "கனவிருளகன்றது" என்பது உள்ளதன்றே. ஸூர்ய கிரணங்களாலே தமஸ்ஸுக்கள் அகன்றெழிவதுபோல் ஆழ்வாருடைய ஆயிரம் திருவாக்குக்களினுலும் [திருவாய்மொழியாயிரத்தினுல்] தமஸ்ஸு அகன்றெழிந்தது. தமஸ்ஸாவது இருள்; இது அகவிருளென்றும் புறவிருளென்றும் இருவகைப்படும். ஸூர்ய கிரணங்களினுல் வெளியிருள் நீங்குமேயன்றி உள்ளிருள் நீங்காது. வகுளபூஷணபாஸ்கர கோஸஹஸ்ரத்தாலே இருவகையிருளும் நீங்கப் பெற்றன,



### — நாராயணோ வஸதி யத்ர ஸ்சங்கசக்ர : —

இதுவும் ஆழ்வார்க்கு ஸூர்யனோடு ஸாம்யத்தை உபபாதிக்குமதாம். ஸூர்யோபாஸனமும் ஸூர்ய நமஸ்காரமும் செய்பவர்கள் ஸூர்யனை யுத்தே சித்துச் செய்பவர்களல்ல; "த்யேயஸ் ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்டஃ, கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீட ஹாரீ ஹிரண்மயவபுர் த்ருத சங்கசக்ரஃ" என்று அந்தணர்கள் முச்சந்தியும் அநுஸந்திக்கிற சுலோகத்தின்படி ஸூர்ய மண்டலத்தினுள்ளே வர்த்திக்கின்ற நாராயணனையேயாயிற்று. ஆக, ஸூர்யன் தன்னுள்ளே சங்க சக்ர கதா பாணியான நாராயணனைக் கொண்டிருப்பது போல, ஆழ்வாரும் "கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ் சிவந்து கனிந்து, உள்ளேவெண்பலிலகு



மகரகுண்டலத்தன், கொண்டல்வண்ணன் சுடர்முடியன் நான்குதோளன் குனிசார்ங்கன், ஒண்சங்கதை வாளாழியா னொருவனடியேனுள்ளானே" என்று தாமே யருளிச் செய்தபடி ஸர்வாபரண பூஷிதனாய் ஸர்வாயுதோ பேதனான நாராயணனைத் தம்முன்னே கொண்டிருப்பர்' (ஆனால் சிறுவாசியுண்டு.) சூர்ய மண்டல வர்த்தியான நாராயணன் (ஹிரண்மயவபுஃ) எனப்பட்டான். ஆழ்வார் திருவுள்ளத்திலே வர்த்திக்கிற நாராயணன் கொண்டல்வண்ண னாயிற்று. ... *

### — யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ரா: —

இதனாலும் ஆழ்வார்க்கு ஸூர்யனோடு ஸாம்யம் உபபாதிக்கப்படுகிறது. இங்குள்ள ச்ருதிசப்தத்திலும் மண்டல சப்தத்திலும் சிலேடையுள்ளது. ஸூர்ய பக்ஷத்தில் ச்ருதியென்பதற்கு வேதமென்று பொருள். மண்டலமென்பதற்கு வட்டமென்று பொருள். ஆழ்வார் பக்ஷத்தில் ச்ருதியென்பதற்குக் காது என்று பொருள்; மண்டலமென்பதற்கு தேசமென்று பொருள். ச்ருதி கதமான ஸூர்ய மண்ட

லத்தை விப்ரர்கள் நமஸ்கரிக்கிருர்கள்; "சித்ரம் தேவாநா முகாதநீகம்" இத்யாதி ச்ருதிவாக்ய ப்ரதிபன்னமான ஸூர்ய மண்டலத்தை அந்தணர்கள் வணங்குவது



தெரிந்ததே. (ஆழ்வார் பக்ஷத்தில்) [ச்ருதீ கதம் மண்டலம்] திருவழுதி நாடென்றும் தென்குரு கூரென்றும் செவிப் பட்டவாறே அனைவரும் கையெடுத்துக் கும்பிடு கிருர்களன்ருே. திரு வாய்மொழி ஸேவிக்கை யில் "குருகூர்ச்சட கோபன் சொன்ன" என்னும்போது பரவச மாகவே அஞ்ஜலிபந்தம் நேருவதுண்டிறே. விப்ரா: என்றவிடத்து ஜாதி விப்ரர்கள் மட்டுமன் றிக்கே * ந சூத்ரா பகவந் பக்தா விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:* என்று விப்ரர்களாகப் புகழப்பட்ட பாகவதோத்தமர்களும் விவக்ஷிதர்கள். இதனுல் ஸூர்யனிற்காட்டிலும் ஆழ்வார்க்கு ஏற்றம் சொன்னபடி. ஆக மூன்று பாதங்களி னுல் வகுளபூஷணர்க்கு பாஸ்கர ஸாம்யத்தை யுபபாதித்து "தஸ்மை நமோ வகுலபூஷண பாஸ்கராய" என்று தலைக்கட்டிற்று. ... .... •

## — ஆழ்வார் ஸாக்ஷாந் நாராயணமூர்த்தியே —

ஆசார்யஹ்ருதயத்தில் "அத்ரி ஜமதக்நி பங்க்திரதவஸுநந்தஸூநுவானவ னுடைய யுகவர்ண க்ரமாவதாரமோ!... ...என்று சங்கிப்பர்கள்" என்றிருக்கச் செய்தேயும் ஸாக்ஷாத் பகவதவதாரபூதர் ஆழ்வார் என்கிற ஒரு நிர்ணயமும் உலவி வருகின்றது. அதற்குச் சேர "சேமங் குருகையோ செய்ய திருப்பாற் கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ?—தாமம், துளவோ வகுளமோ தோளி ரண்டோ நான்குமுளவோ பெருமானுனக்கு." என்கிற புராதனமான வெண்பா வொன்று ப்ரஸித்தமாகவுள்ளது. பாட்டினடியில் சேம மென்றது இருப்பிட மென்ற படி. உமக்குத் திருக்குருகூர் இருப்பிடமா? திருப்பாற்கடல் இருப்பிடமா? உமக்குப் பராங்குசரென்று திருநாமமா? நாராயணனென்று திருநாமமா? உமக்குத் திருத் துழாய் மாலையா? மகிழமாலையா? உமக்குத் தோள்கள் இரண்டோ நான்கோ? [நீர் த்விபுஜரா? சதுர்புஜரா?] என்று இதில் கேட்டிருக்கிற கேள்விகள் வெகு சமத்காரம் பொருந்தியவை; இக்கேள்விகளுக்கு ஆழ்வார் விடை கூறியே யிருப்பர். என்ன கூறியிருப்பர்? எனக்குத் திருக்குருகூரும் சேமம், க்ஷீராப்தியும் சேமம்; எனக்குப் பராங்குசனென்றும் பெயருண்டு, நாராயணனென்றும் பெயருண்டு. எனக்குத் துளவமாலையுமுண்டு, வகுளமாலையுமுண்டு. நான் த்விபுஜனுமாவேன், சதுர்ப்புஜனுமாவேன்—என்று கூறியிருப்பர். .... • •

ஆழ்வார் திருநகரி ஸ்ரீஸூக்திரத்நாகர ஸ்ரீமதுபயவே

# இளையவில்லி சடகோபாசார்ய ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவ மங்களாசாஸனத் திருவோலக்கம்.

23-6-70



— மங்களாசாஸன ச்லோகங்கள் —

ஸ்ரீஸூக்திரத்நாகர பாலதந்வி ஸ்ரீமச்சடாராதிகுருத்தமோயம்,
சதாபிஷேகாதி மஹோத்ஸவாநாம் க்ரமேண போக்தா பவதாத் ப்ரஹ்ருஷ்ட:

ஸ்ரீபாலதந்விகுலஸாகர கௌஸ்துபாப!
ஸ்ரீஸூக்திரத்நஜலதே! சடகோபஸூரே!
பூர்வார்யவர்யபணிதிருபதிச்ய சிஷ்யாந்
ஸஞ்ஜீவயந் ஜய சதம் சரதோ ஜகத்யாம்.

காஞ்சீவாதிபயங்கர வம்சீயாண்ணங்கரார்யநாமைவம்,
ஸ்ரீபாலதந்விகுரவே ஸமர்ப்பிபத் ப்ரேமபுஷ்பமணிமாலாம். (23—6—70)

## — திருக்கச்சி நம்பிகளுக்குப் பெருமை எதனால்? —

90. விஷ்ணு ஆலயங்களில் நாதமுனிகள் ஆளவந்தார் போல்வாரான ஆசாரியர்களின் திருக்கோலம் திகழாத இடங்களிலும் திருக்கச்சிநம்பிகளின் திருக்கோலம் திகழக் காணுகின்றோம். அவர் விசேஷமாக நூல்களை இயற்றி உலகுக்கு உதவிபுரிந்தவரல்லர். தேவப்பெருமாள் விஷயமாகத் தேவராஜாஷ்டகமென்னும் எட்டு சுலோகங்கள் கொண்ட சிறிய துதிநூல்ஒன்றை மட்டுமே இவர் பணித்துள்ளார். ஆகவே 'தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்' என்னும்படியான பெருமையடியாக இவர்க்குத் தேவாலயங்களில் திருக்கோலம் அமைந்ததென்ன இயலாது; ''திருவாலவட்டம் திருக்கச்சிநம்பி'' என்று உலகம் பரவிய வியபதேசம் பெற்ற இவ்வாசிரியர் கைங்கரியச் செல்வம் ஒன்றினாலேயே மிக்க பெருமை பெற்று விளங்கி ஆலயங்களிலும் சிறப்புப் பெற்றாரென்பர் பெரியோர். *

## — திருக்கச்சிநம்பிகளின் ஒருசுலோகத்தில் பரத்வாதிபஞ்சகம் —

91. *நமஸ்தே ஹஸ்திசைலேச ஸ்ரீமந் அம்புஜலோசந!, சரணம் த்வாம் ப்ரபந்நோஸ்மி ப்ரணதார்த்திஹராச்யுத.* என்பது முதல்ச்லோகம். இது தேவப் பெருமாளைச் சரணம் புகுவதாகத் தெரிந்துகொள்வதில் அருமை இல்லை. உட்புகுந்து அருமையாகத் தெரிந்துகொள்ளவேண்டிய நுண்பொருள் கேண்மின். இதில் ஐந்து [ஸம்போதனங்கள்] விளிச்சொற்கள் உள்ளன. எம்பெருமானுடைய பஞ்சப்ரகாரங்களும் இந்த ஐந்து விளிகளாலும் தெரிவிக்கப்படுகின்றன. திருவாய்மொழியில் *விண்மீதிருப்பாய்! மலைமேல் நிற்பாய்! கடல் சேர்ப்பாய்! மண்மீதுழல்வாய்! இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்!* [6-9-5] என்கிற பாசுரத்தில் எம்பெருமானுடைய பர வ்யூஹ விபவ அந்தர்யாமியர்ச்சாவதாரங்களாகிற ஐந்து ப்ரகாரங்களும் ஸுஸ்பஷ்டமாக ஓதப்பட்டுள்ளன. விண்மீதிருப்பாய்!—பரத்வம். கடல் சேர்ப்பாய்—வ்யூஹம். மண்மீதுழல்வாய்!—விபவம். இவற்றுளெங்கும்மறைந்துறைவாய்!—அந்தர்யாமித்வம். மலைமேல் நிற்பாய்—அர்ச்சை, மேலெடுத்த நம்பிகளின் சுலோகத்திலும் பஞ்சஸம்புத்திகளால் இங்ஙனே பரத்வாதி பஞ்சகம் சிறிது ஊன்றித் தெரிந்துகொள்ளவேண்டும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன வென்பதை விளக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். ஹஸ்திசைலேச! என்பதனால் அர்ச்சாவதார நிர்த்தேசமென்பது ஸ்பஷ்டம் [ஸ்ரீமந்!] எம்பெருமானுடைய பரத்வநிலையைச் சொல்லுகிற பகவச் சாஸ்த்ரம் *வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதிঃ, ஆஸ்தே விஷ்ணு ரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ* என்று பிராட்டியோடுகூட வெழுந்தருளியிருப்பதாகச் சொல்லுகையாலும், நம்மாழ்வார்தாமும் *ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்ட சதிர் கண்டொழிந்தேன்* என்று திருமகளும் தானுமாக அங்கெழுந்தருளியிருக்கிறபடியை யருளிச்செய்கையாலும் ஸ்ரீமந்! என்றதனால் அந்த பரத்வநிலை தெரிவிக்கப்பட்டதாகும். [அம்புஜலோசந!] செந்தாமரைக்கண் முதலான அவயவஸௌந்தரியத்தைக் காட்டி ஆவர்ஜனம் செய்தது ராமகிருஷ்ணாதி

விபவாவதாரங்களிலே யாயிற்று. * சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந! *கிமர்த்தம் புண்டரீகாக்ஷ!* இத்யாதிகள் விபவாவதாரங்களிலன்றோ அவதரித்தன. அவயவ ஸௌந்தர்ய வர்ணனம் அர்ச்சையிலும் விசேஷமாக வுண்டே யென்னில்; "பெருக்காறு போலே விபவங்கள்; அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்" என்ற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தி வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள்—

"அவதாரகுணங்களெல்லாம் அர்ச்சாஸ்தலங்களிலே பரிபூர்ணமாயிருக்கையாலும், அவதார விக்ரஹங்களை அர்ச்சாரூபேண பலவிடங்களிலும் பரிக்ரஹித்துக் கொண்டிருக்கையாலும் * அதிலே தேங்கின மடுக்கள்போலே யென்கிறது"

என்றருளிச் செய்திருக்கையாலே அர்ச்சாவதாரத்துக்கும் மூலம் விபவாவதாரமாகையாலே அதனுடைய முதன்மை உணரத்தக்கது. [ப்ரணதார்த்திஹர.] ஆர்த்தர்களினுடைய கூக்குரல் கேட்டு அவர்களின் ஆர்த்தியைப் போக்குவதற்காகச் சடக்கென வெழுந்து அவதாரம் செய்வதற்கென்றே க்ஷீராப்தியில் வ்யூஹீபவித்து நிற்கையாலே 'ப்ரணதார்த்திஹர' என்றவிளி வ்யூஹத்தில் நோக்காகத் தோன்றியதென்னக் குறையில்லை. இனி அச்யுத! என்கிற ஸம்போதனம் சேஷித்து நிற்கிறது. எம்பெருமானுடைய அச்யுத நாமத்திற்குப் பலவகையான பொருள்கள் சொல்லுவதுண்டு; அவற்றுள் ஒருபொருள்—'ஓரிடத்தையும் விட்டு நழுவாதவர்' என்பது. இத்தால் *எஞ்ஞான்றும் மெங்குமொழிவற நிறைந்து நிற்கும் அந்தர்யாமித்வம் சொன்னபடியாகும். "ந வித்யதே (குத்ராபி) ச்யுதம் யஸ்ய ஸ:—அச்யுத:." என்று வ்யுத்பத்தி காண்க. ஆக, ஐந்து விளிகளாலும் எம்பெருமானுடைய பஞ்ச ப்ரகாரங்களும் பேசப்பட்டனவாயின. ... ... *

## — கைங்கர்ய ஸாம்ராஜ்யம் —

92. நாம் பெறவேண்டிய பெரும் பேறு பரமனடியிணையில் பணிவிடை செய்வதேயாம். பணிவிடை யென்பதும் கைங்கரியம் என்பதும் பரியாயமேயாகும். பணிவிடை யென்பது தென்மொழி; கைங்கர்யம் என்பது வடமொழி என்னுமித்தனையே வாசி. கிங்கர: என்னும் சொல்லின்மேல் ப்ரத்யய விசேஷம் ஏறியதனால் கைங்கர்யமென்கிற சொல் தேறுகிறது. "நியோஜ்ய கிங்கர ப்ரைஷ்ய புஜிஷ்ய பரிசாரகா:" என்னும் அமரகோசத்தின்படி பணிவிடை செய்பவன் என்னும் பொருளைக்கொண்டது கிங்கர பதம்; 'கிஞ்சித் கரோதீதி கிங்கர:'—ஏதேனும் ஒன்றைச் செய்துகொண்டிருப்பவனென்பது சொல்லின் மேல் தேறும் பொருள். அன்னவனுடைய செயல் கைங்கரியமெனப்படும். பகவான் திறத்திலும், அவனடியார்களான பாகவதர் திறத்திலும் செய்யும் பணிவிடையைக் கைங்கர்யமென வழங்குவர் பெரியோர். கிங்கர: என்பதற்கு மற்றொரு வகையான வ்யுத்பத்தியையும் பெரியார் கூறுவதுண்டு. கிம் கரவாணி? கிம் கரவாணி இதி ஆசம்ஸமாந: கிங்கர:. அதாவது—என்ன தொண்டு செய்வேன்! என்ன தொண்டு செய்வேன்! என்று ஆசைப்படுமவன் கிங்கரனென்றபடி. இது நூல்களிற் காண்பதில்லை. ... *

## — ஸேவா ச்வவ்ருத்தி: என்பதுபற்றி —

93. அமரகோசத்தில் "ஸேவா ச்வவ்ருத்தி:" என்று கூறப்பட்டது. 'பிறர்க்கு உழைப்பது நாய்வேலை' என்பது இதன்பொருள். மநுதர்ம சாஸ்த்ரத்திலும் நான்கா மத்யாயத்தில் 'நாய் வேலையாகிய அடிமைத் தொழில் கொள்ளத் தகாதது' என்று மறுக்கப்பட்டுள்ளது. அதைக் கண்ட ஒரு ரஸிகர் "ஸேவா ச்வவ்ருத்திரிதி யத் அபத்தம் தத்உதீரிதம், ஸ்வைரசாரீ க்வ சுநக: விக்ரீதாஸு: க்வ ஸேவக:" என்றார். இதன் கருத்தாவது "அடிமைப்படுவது நாய்வேலையென்று மனுமஹர்ஷி கூறியது தவறு; ஒருவர்க்கும் அடிமைப்படாமல் யதேஷ்டமாகத் திரிகிற நாய் எங்கே? நாலுகாசுக்கு உயிரை அறவிலை செய்திருக்கும் சேவகன் எங்கே?" என்பதாம். இதனால் சேவகன் நாயினும் மிக இழிந்தவன் என்றதாம். இதைக்கொண்டு கைங்கரியத்தை இழிதொழிலாக நினைக்கலாகாது. வயிற்றை வளர்ப்பதற்காகச் செய்யும் சேவகத் தொழிலே அங்குப் பழிக்கப்பட்டது என்பது மூலத்திலேயே ஸ்பஷ்டமாக வுள்ளது. ஸ்வரூப ப்ரயுக்தமாகவும், குணங்கண்டும் உரிய விஷயங்களில் தொண்டு செய்வது பழிப்புக்கு இலக்காமதன்று. "கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானை யல்லாலறியாக் குலமகள்" என்று ஸ்ரீ குலசேகராழ்வாரால் புகழப்பட்ட ஒரு பதிவிரதை தன் கணவனுக்குச் செய்யும் பல்வகைத் தொண்டுகளை இதிஹாஸ புராணங்களிற் கேட்பது தவிர, கட்கூடாகவும் காண்கிறோம்; அங்ஙனமே சிஷ்யன் ஆசாரியனுக்குச் செய்யும் பணிவிடைகளும் பிரசித்தம். உபதேசரத்தின மாலையில் "பின்பழகராம் பெருமாள் சீயர் பெருந்திவத்தில், அன்பதுவுமற்று மிக்கவாசையினால்—நம்பிள்ளைக்கான வடிமைகள் செய் அந்நிலையை நன்னெஞ்சே. ஊனமற வெப்பொழுதுமோர்" என்று மணவாள மாமுனிகள் அருளிய பாசுரம் அறியாதாரில்லை. ஆசார்ய ஹ்ருதயம் மூன்றும் பிரகரணத்தில் "ச்வவ்ருத்தியைமாற்றி ஸ்வவ்ருத்தியிலே மூட்டுகிறார் மூன்றும் பத்தில்" என்றவிடத்து மாமுனிகளின் வியாக்கியானம் ஸேவிப்பது.

## — வேதார்த்தஸங்க்ரஹ முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்திகள் —

94. பகவத் ராமாநுஜர் அருளிச்செய்த வேதார்த்த ஸங்க்ரஹத்தின் முடிவில் "நநு ச, அத்யந்த சேஷதைவ ஆத்மந: அநவதிகாதிசயம் ஸுகமிதி உக்தம் பவதி; ததேதத் ஸர்வலோக விருத்தம்" என்று தொடங்கிப் பூர்வபக்ஷ ஸித்தாந்தங்கள் விசதமாக வரையப்பட்டுள்ளன. அங்கு "ஸர்வம் பரவசம் துக்கம்" "ஸேவா ச்வவ்ருத்தி:" இத்யாதிகளை உத்க்ஷேபித்து ஒருங்க விட்டிருப்பதைக் காணவேணும், அதுவே முமுக்ஷுப்படி ரஹஸ்யத்தில் "சேஷத்வம் துக்கருபமாகவன்றோ நாட்டில் காண்கிறதென்னில்; அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்குமிருப்பு ஸுகமாகக் காண்கையாலே" என்கிற ஸ்ரீஸூக்திகளால் நிரூபிக்கப்பட்டது. அவ்விடத்து மாமுனிகளின் வியாக்கியானம் காண்க.

## — துஷ்யந்தனுடைய பாரிப்பும் ப்ரஹ்லாதனுடைய ப்ரார்த்தனையும் —

95. துஷ்யந்த சக்ரவர்த்தியின் ஒரு செய்தியைக் கேளீர். இவன் வேட்டையாடச் சென்றபோது கண்வரென்னும் மஹரிஷியின் ஆச்ரமத்திற் புகுந்து, அங்கு சகுந்தலையினிடத்தில் காதல் கொண்டான்! அவள் வெய்யிலில் படுகிற தாபத்தைக் கண்டு மனமிளகிச் சொல்லுகிறான்—"ஸம்வீஜயாமி நலிநீதள தால வ்ருந்தை:, ஸம்வாஹயாமி சரணாவுத பத்மதாம்ரௌ" என்று. அம்மா சகுந்தலே! தாமரையிலையை விசிறியாக்கி வீசட்டுமா? உன் கால்களை என் மடியிலிட்டுக்கொண்டு வருடட்டுமா? என்கிறான். இவனோ சக்ரவர்த்தி, அவளோ ஒரு காட்டுப்பெண். இவன் இந்த வார்த்தை சொல்லுவதற்கு உரியவனா? என்று பார்க்கவேணும். அவள்பாலுண்டான உகப்பு சொல்லுவித்த தத்தனை. ஒரு காமுகனுடைய செய்கையையா உவமை கூறுவது? என்ன வேண்டா. அடுத்த விருந்து காண்மின். ✱

ப்ரஹ்லாதனுக்கு அருள்செய்யத் தோன்றிய ஸ்ரீந்ருஸிம்ஹபகவன் மூர்த்தி அந்தர்த்தானமடையப் போகிற ஸமயத்தில் வரம்வேண்டுகின்ற அந்த பாலபக்தன் "யா ப்ரீதிரவிவேகாநாம் விஷயேஷு அநபாயிநீ, த்வாம் அநுஸ்மரதஸ் ஸா மே ஹ்ருதயாந் மாபஸர்ப்பது" என்றான். அவிவேகிகளான பாமரர்களுக்குச் சிற்றின்பங்களிலே எவ்வகையான காதல் குன்றாமல் மேன்மேலும் பெருகிச் செல்லுமோ அத்தகைய காதல் உன் விஷயமாக என் சிந்தனையில் கொழுந்துவிட்டு வளர வேணுமென்பது மேலே காட்டின சுலோகத்தின் பொருள். ப்ரஹ்லாதனோ நாலைந்து பிராயச்சிறுக்கன். சிற்றின்பத்தைச் சிறிதும் அறியாதவன். சிற்றின்பங்களிலே பாமரர்களுக்கு எத்தகையகாதல் விளைகின்றதென்பதையும் அவன் அறியகில்லான். இப்படியிருக்க, இவன் 'விஷயேஷு அவிவேகிநாம் யா ப்ரீதி:' என்று சொன்னது எங்ஙனம்? என்று விவேகிகள் விமர்சிக்கவேண்டும்; துஷ்யந்த மஹாராஜன் போல்வாரான காமுகர்களினுடைய கதைகளைக் கேட்டிருந்து அதனால் சொல்லுகிறானென்ன வேணும். ஆகவே, பகவானுடைய கைங்கரியத்தில் பக்தர்களுக்கு உண்டாகும் அபிநிவேசத்திற்கு விஷயாந்தரங்களில் பாமரர்களுக்குண்டாகும் ருசியை நிதர்சனமாகக் காட்டுதல் ஏற்குமென்க. 'உகந்த விஷயத்துக்கு சேஷமா யிருக்கு மிருப்பு ஸுகமாகக் காண்கையாலே" என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியை வியாக்கியானித்தருளா நின்ற மணவாள மாமுனிகள் பாமரர்களின் பணிவிடையையே நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியைக் கொண்டு மூதலித்தருளுகிறார். (திருவாய்மொழி 4-1-5) "பணிமின் திருவருளென்னும் அஞ்சீதப்பைம்பூம்பள்ளி, அணிமென் குழலா ரின்பக் கலவி யமுதுண்டார்" என்ற பாசுரத்தின் ஈடு ஸேவிக்க.

## — கைங்கரிய வகைகளை நிரூபித்தல் —

96. மாநஸிகம் வாசிகம் காயிகம் என்று கைங்கரியம் மூவகைப்படும். இவற்றுள், 'அது செய்யவேணும் இது செய்யவேணும்' என்று நெஞ்சால் பாரிப்பதான மாநஸிகம் இருக்கட்டும். வாசிகமான கைங்கரியம் சில அதிகாரிகளுக்கே ஊற்றதாகும். வேதம் வல்லவர்கள் திவ்யப் பிரபந்தமோதினவர்கள், ஸ்தோத்ர

நூல்களை யதிகரித்தவர்கள் வாசிக கைங்கரியம் பண்ணவுரியார். இக்கைங்கரியம் எம்பெருமானுக்கு ப்ரீதி கரமேயாகும். இதைவிட மேம்பட்டது காயிக கைங்கரியம். திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை, ஸ்ரீபாதம் தாங்குதல், சாமரை வீசுதல், குடைபிடித்தல் முதலியவை காயிக கைங்கரிய மெனப்படும். இவற்றுள் ஒன்றான திருவாலவட்டம் பணிமாறுதலாகிய தொண்டைக் கடைப்பிடித்தவர் திருக்கச்சி நம்பி. ஆழ்வார்களில் தொண்டரடிப் பொடிகள் "தொடையொத்த துளபமுங் கூடையும் பொலிந்து தோன்றியதோள் தொண்டரடிப்பொடி யென்னும் அடியன்" என்றும் "துளபத் தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடி" என்றும் தாமே பணித்தபடி அர்ச்சைத் திருமேனியில் துளபமும் கூடையும் பொலிந்து தோன்றுவது போலத் திருக்கச்சிநம்பிகளும் ஆலவட்டமும் கையுமாகவே எங்கும் காட்சி தருவர். ஆசார்ய ஹ்ருதயத்தில் (1-85) "புஷ்பத்யாக போக மண்டபங்களில் பணிப் பூவு மாலவட்டமும் வீணையுங் கையுமான அந்தரங்கரை" என்ற விடத்தில் ஆலவட்டமும் கையுமான அந்தரங்கராக வ்யபதேசிக்கப் பெற்றவர் திருக்கச்சி நம்பிகள். ... *

## — பொருளினால் செய்யும் கைங்கரியத்தைப்பற்றி —

97. காயிக கைங்கரியத்திற் காட்டிலும் தனத்தால் செய்யுமது சிறந்த தென்று சிலர் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு. அது எம்பெருமான் திருவுள்ளத்தால் சிறப்புற்றதாகாது ஏனெனில், நாம் சரீரத்திலே அதிகமான அன்பு செலுத்துகிறோமா? தனத்திலே அதிகமான அன்பு செலுத்துகிறோமா? என்று ஆராய்ந்து பார்ப்போமாயின், தனத்திற் காட்டிலும், சரீரத்திலேதான் மிக்க பிரேமம் காட்டுகிறோமென்பது கட்கூடு; இதைப் பல முகமாக நிரூபிப்போம். பெருங்குற்றஞ்செய்த வொருவனுக்கு அரசன் 'ஆயிரம் ரூபா அபராதம், அது கட்டத் தவறினால் ஒரு வாரம் காவல்' என்று சிக்ஷை விதித்தால் தரித்ரனும் சரீரத் துன்பத்தை ஸஹிக்க மாட்டாமல் பணத்தைச் செலுத்துகிறானே யொழிய 'ஆயிரம் ரூபா எதற்காகச் செலுத்துவது! ஒருவாரம் சிறையிருந்து வந்து விடலாமே' என்று நினைத்துச் சிறையிருக்க இசைவதில்லை. பெருமாள் திருத்தேரிலெழுந்தருள, வடம் பிடிக்க வாருங்கள் என்றழைத்தால் 'வேணுமானால் பத்தெட்டுரூபா தருகிறேன் கொண்டு போங்கள்; இந்த வேலைக்கு நாம் வாரோம்' என்பர்களேயன்றிப் பெறுப் பேறான இக்கைங்கர்யம் செய்ய இதோ வருகிறேன் என்று சொல்லி வடம் பிடிக்க வருவாரில்லையே பெரும்பாலும். இங்ஙனே எவ்வளவு காட்டவேணும்? ஆகவே பொருளினால் செய்யும் கைங்கரியத்தைவிட உடலினால் செய்யும் கைங்கரியமே மேம்பட்டது. *

## — பணத்தைப்பற்றிச் சில விநோதக் கதைகள் —

98. சிலர் பணத்தைக் கனக்க மதித்து சரீரத்தை அலக்ஷியம் செய்வாருமுளர். திருவாய்மொழியில் (4-9 2.) 'சாமாறும் கெடுமாறும்' என்றவிடத்து ஈட்டில் ஒரு அற்புதமான கதை யருளிச்செய்கிறார் காண்மின்; ஒரு ராஜத்ரோஹியைத் தண்டிக்கும் அரசன் கையையும் காலையும் தெறித்துவிடக் கட்டளையிட, ராஜபடர்கள் அப்படியே செய்தாயிற்று. உதிரமொழுக வொழுக வீடுவந்து சேர்ந்திருக்கிறான். சில நாழிகையில் உயிர் துறக்கப்போகிறான். உற்றாரும்

உறவினரும் வந்து 'ஐயோ! இப்படியாயிற்றே!' என்று கண்ணீர் பெருக்கி வருந்தி நிற்க, தண்டனையுண்ட இவன் (சொல்லுகிறான்—) 'ஐந்நூறு தா, ஆயிரம் தா' என்று சொல்லிக் காசு பறித்துக்கொள்ளாதே இவ்வளவோடே போனது உங்கள் ஆசீர்வாத பலமல்லவா? என்றானும். இவனோ மஹாதனிகன்.

இன்னமும் கேளீர். முற்காலத்துத் தண்டனைகள் பலவிதமாயிருக்கும். தோசைக் கல்லைப் பழுக்கக்காய்ச்சி அதன்மேல் உட்காரச் சொல்லுவர்களாம். அந்தக் கல்லில் அரைத்துணியோடு உட்கார்ந்தாலும் கேள்வியில்லை. தண்டனையுண்ட ஒருவன் துணி எரிந்துபோனால் காசு நஷ்டமாகுமே யென்று அரைத்துணியை அவிழ்த்து வைத்துவிட்டு தோசைக் கல்லில் உட்கார்ந்தானும்.

மற்றொரு கதையுங் கேண்மின். ஒரு குற்றவாளிக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. "முப்பது ரூபா அபராதம் செலுத்த வேண்டியது; தவறினால் முப்பது சாட்டையடி படவேண்டியது; அதுவும் தவறினால் மூன்று விரல்களை யெடுக்க இசையவேண்டியது" என்று. எளிதாக முப்பது ரூபாயைச் செலுத்தி விட்டுப் போகலாமிவன்; பணம் கொடுக்கப் பின்வாங்கி முப்பது சாட்டையடிக்கு இசைந்து நின்றான். பத்தடிக்குமேல் தாங்கமுடியாமற் போகவே சிறிதுநேரம் கழித்து மூன்று விரல்களை யெடுக்க ஸம்மதித்து நின்றான்; இரண்டு விரல்களை எடுத்தபின் சகிக்கமுடியாமற் போக, முப்பது ரூபாயை வைத்திட்டுக் கும்பிட்டுப் போனான். 10 சாட்டையடிகளும் பட்டு இருவிரல்களையுமிழந்து முடிவாக வேண்டாவெறுப்புடனே பணத்தைச் செலுத்தினான். இத்தகைய பணப் பிசாசுகளிடத்தில் பகவான் பணத்தாற் செய்யும் கைங்கரியத்தையே பேணுவன். பணத்தைப் பொருள் படுத்தாது சரீரத்தைக் கனக்கப் பேணுமவர்களிடத்தில் சரீரத்தைச் சிரமப்படுத்திச் செய்யும் கைங்கரியத்தையே பேணுவன். பொதுவாகச் சரீரத்தைச் சிரமப்படுத்திச் செய்யும் கைங்கர்யமே உத்தமமாகக் கருதப்படும். ஆகவேதான் பெரியாழ்வார் திருப்பல்லாண்டில் (3) "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து மண்ணும் மணமும் கொண்மின்" என்று சொல்லி யழைத்தார். இதில் மண் கொள்ளுகை மணங் கொள்ளுகை என்று இரண்டு கூறப்பட்டது. எம்பெருமானுடைய உத்ஸவங்களில் உடலால் சிரமப்பட்டுச் செய்யும் கைங்கரியம் மண் கொள்ளுகை. இஃது இடையூறின்றி நடைபெற வேணுமென்று அபிமானிக்கை மணங்கொள்ளுகை. .... ... .... ... ... *

## — நிச்சலும் சிந்தைசெய்யவேண்டிய சுலோகமொன்று —

99. *ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே,
தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம்.*

என்பது. இதன் பொருளாவது, ஒருக்ஷணகாலம் வீணாகக் கழிந்தாலும் கள்ளர்கள் நம் வீட்டினுள் புகுந்து ஸர்வஸ்வத்தையும் கொள்ளைகொண்டுபோனால் எப்படி கதறியழநேருமோ அப்படி கதறியழவேணுமென்பதாம். (இதில் த்யானவர்ஜிதே) என்றது 'எம்பெருமானுடைய சிந்தனையில்லாமல்' என்றபடியாலும் த்யானசப்தம்

மாநஸிகமான சிந்தனையைமட்டும் சொல்லி நிற்பதன்று. *தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும்* என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தில் சொன்னதற்கெல்லாம் இது உபலக்ஷணமாகும். *யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே, ஸா ஹாநிஸ் தந்மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா * என்கிற சுலோகமுமொன்று இருந்தாலும் * தஸ்யுபிர் மூஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம் * என்றவிதற்கு அது ஈடாகாது, இதை என் திருத்தகப்பனர் பலகாலெடுத்துரைக்கக் கேட்டிருக்கிறேன். தாம் பிறர்க்குச் செய்தருளும் உபதேசங்களில் இதுதான் தலைமைபெற்றிருக்கும். இந்த சுலோகம் இளமை தொடங்கியே அடியேனுள்ளத்தில் ஊறிக்கிடப்பதாம். அனேகமாகப் பலரும் தினசரி வரவுசெலவுகணக்கு எழுதுவதென்று வைத்துக்கொண்டிருக்கிறார்கள். காய்கறிவாங்கினதையும் காப்பிப்பொடி வாங்கினதையும் கட்டைமிட்டைகள் வாங்கினதையும் எழுதிவரக் காண்கிறோம். இதை நாம் மறுக்கவில்லை. 'இன்று காலையெழுந்தது முதல் பள்ளிகொள்ளும்வரையில் நாம் நம் ஆத்மாவுக்காக என்ன நன்மை செய்தோம்' என்பதை நாடோறும் எழுதிவரவேணுமென்று திருத்தகப்பனர் ஸாதித்துக்கொண்டிருப்பர், அதை அடியேன் அந்நாளே தொடங்கிக் குறிக்கோளில் வைத்திருப்பதுண்டு. அதனாலேயே நிச்சலும் ஏதேனும் தொண்டுசெய்து வருகிறேன். என்னுடைய ஆயுச்சேஷமும் இப்படியே கழியவேணும். .... *

## — தத்வஹித புருஷார்த்த நிர்ணயச்சுருக்கம் —

100. மாஞானிகளால் இருள் தருமாஞாலமென வழங்கப்பட்ட இந்நிலவுலகில் அகவிருளையொழிக்க அருட் கடலான எம்பெருமான் சாஸ்திரங்களாகிய பெரு விளக்கை ஏற்றி வைத்தருளினன். "கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற் பொருள் தானும், மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினலருள் செய்து" என்ற திருமங்கை யாழ்வார் பாசுரம் இங்கு உணரத்தக்கது. பிரமாணங்களுள் முதன்மை பெற்ற வேதங்களும், அவற்றுக்கு வியாக்கியானமாகத் தோன்றிய இதிஹாஸ புராணங்களும் மற்றும் ஆழ்வாராசாரியர்களின் திவ்ய க்ரந்தங்களுமான நூல்களெல்லாம் கடல்போல் விளங்குவன. அவற்றுள் அறிவிக்கப்படும் அர்த்தங்கள் கடலலைகள் போலவும், கடலில் நுண் மணல்கள் போலவும் எண்ணிறந்துள்ளன வெனினும், அவை மூன்றே வகுப்பில் அடைக்கப்பட்டுள்ளன; தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் என்பனவாம் அவை. எது பரம் பொருளோ அதுவே தத்வமெனப்படும். பரம்பொருளின் பதவிணை சேர்தற்கு எது உபாயமோ அதுவே ஹிதமெனப்படும். பதவிணை சேர்ந்தபின் அனுபவிக்கப் படுமது எதுவோ அதுவே புருஷார்த்த மெனப்படும். சிறிது விரித்துரைப்பின், திருமகள் கொழுநனே தத்வமென்றும், அவனடியிணை சேர்தற்குச் சரணாகதியே உபாயமென்றும், அடி சேர்ந்து அத்தாணிச் சேவகம் புரிதலே புருஷார்த்தம் என்றும் நூற்கொள்கை தேறிநிற்கும். இவற்றின் விளக்கம் பலவாறு வெளிவரும். *

## அரியபெரிய அறுநூறு விருந்தில்

# முதல்நூறு முற்றிற்று.

### — முதல் சதகத்தின் முடிவுரை —



இந்த அறுநூறுவிருந்தில் அவரவர்கள் முக்கியமாக அறிந்து கொள்ளவேண்டிய விஷயங்களெல்லாம் விடுபடாமல் நிரம்பியிருக்க வேணுமென்பது அடியேனுடைய ஆசை; அல்பஜ்ஞனை அடியேன் அறிந்துகொண்ட விஷயங்கள் அற்பமேயானாலும் இங்கே ஸேவைஸாதித்தருளாநின்ற ஜீயர்ஸ்வாமியின் திருவருளால் நெஞ்சில் தோன்றும் விஷயங்களையே எழுதுகின்றேனாதலால் இந்நூலில் காணும் விமர்ச விஷயங்களெல்லாம் அரியபெரிய விருந்துகளேயாகும். இந்த முதல்சதகத்தில் மிகமுக்கியமானவிருந்து "வானமாமலையில் ரஹஸ்யார்த்த ஸம்வாதம்" என மகுடம்புனைந்த பகுதியேயாம். அந்த ஸம்வாதம் எம்பெருமான் ஸங்கல்பத்தினால் மேலும் தொடர்கின்றது. ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்கள் உற்று நோக்கி உள்ளம் பூரிக்க. இங்கே ஸேவை ஸாதிக்கின்ற ஜீயர்ஸ்வாமி அடியேனுக்குப் பூர்வாச்ரம மாதாமஹராய் ஞானத்தந்தையா யெழுந்தருளியிருந்த ஸ்ரீகாஞ்சீ. வாதிகேஸரி. அழகியமணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி. அவருடைய திருவடிகளே சரணம். இவ்வறுநூறு விருந்துகளும் அடியேனுடைய ஸம்ஸ்க்ருத பத்ரிகையிலும் தெலுங்கு பத்ரிகையிலும் அந்தந்த பாஷைகளில் வெளிவரக்காணு மூலகம்.

15—7—1970. இங்ஙனம்: P. B. அண்ணங்கராரியதாசன்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## த்வய ரஹஸ்ய தத்வநிரூபண விருந்துகள்—12

101. கீழே (பக்கம் 23ல்) "வானமாமலையில் த்வய ரஹஸ்யார்த்தஸம்வாதம்" என மகுடமிட்டு ஆறு விருந்துகள் அளித்திருக்கின்றோம். அவற்றை ஸஹ்ருதயர்கள் மீண்டுமொருமுறை ஊன்றி வாசிப்பது. அந்தபகுதியை நாம் வானமாமலைக்கு அனுப்பியிருந்தோம். அதைக் கடாக்ஷித்த வித்வத்பரிருடன்வயமி விடையிறுத்து ஸ்ரீ முகமருளியுள்ளார். அதன் ஸாராம்சமென்னவென்றால் "அது அஸம்பத்தம், இது அஸம்பத்தம், இருவும் அத்யந்தம் அஸம்பத்தம்" என்பதேயாம். ஒருவர் ஸ்ரீ பாஷ்ய கண்டன மெழுதுவதாகத் தொடங்கி "அகில புவந ஜன்ம ஸ்தேம பங்காதிலீலே" என்கிற முதல் பாதமே அஸம்பத்தம். ஸ்ருஷ்டி ரக்ஷண ஸம்ஹாரமென்னவேண்டியிருக்க "ஜந்ம ஸ்தேம பங்க" என்றது பிசகு; ஜன்மபதம் ஸ்ருஷ்டிவாசகமாகாது; ஸ்திரத்வத்தைச் சொல்லுமதான ஸ்தேம சப்தம் ரக்ஷண வாசகமாகாது; பங்க சப்தம் ஸம்ஹாரவாசகமாகாது. இதற்குமேல் ஆதிசப்த ப்ரயோகம் நிஷ்பலம். லீலா சப்தம் ஸ்த்ரீ லிங்கமாயிருக்க (லீலே) என்று [பும்லிங்கமாக இட்டது தப்பு. இரண்டாவது பாதத்தில் விவித சப்தமோ வ்ராத சப்தமோ ஒன்று போதுமாயிருக்க இரண்டுமிட்டது அஸாது; "வேதைச் ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" என்று பகவான் தானே தன்னை ஸர்வ வேத வேத்யனாகச் சொல்லியிருக்க 'ச்ருதிசிரஸி விதீப்தே'' என்று சொன்னது அஸம்பத்தம். ஸ்ரீ நிவாஸே என்பதற்கு ஸூத்ரத்தில் ஆதாரமேயில்லாமலிருக்க இதையிட்டது அஸமஞ்ஜஸம் ... என்று இங்ஙனே எழுதிக்கொண்டு போனாராம். இந்த (வானமாமலை) ஸ்ரீ முகஸந்நிவேசமும் அதே ரீதியில்தான் அமைந்துள்ளது. எல்லாம் அஸம்பத்தமேயென்று முழுமனமாக இசைந்து கொள்வோம். ஸத்யமாக இசைகிறோம்.



102. (2) நாம் எழுதியிருக்கதில் 55ஆம் வாக்யச்ரேணி (முடிவைகச் சீரிய பிரமொன்று காட்டுதல்) என மகுடம் புனைந்தது. அதனை மீண்டுமிங்கு அநுவதிக்கிறேன்;—

"55. ஆசார்யஹ்ருதயத்திலேயே "இவற்றுக்குமந்த்ரவித்யநுஸந்தான ரஹஸ்யங்களோடே 'சேர்த்தி' என்பது ஒரு சூர்ணை. நம்மாழ்வாருடைய

நான்கு திவ்யப்ரபந்தங்களுக்கும் திருமந்த்ரம் சரமச்லோகம் த்வயம் ஆகிய இந்த ரஹஸ்யங்களோடே சேர்த்தி—என்பது இதன் பொருள். மந்த்ர ரஹஸ்யம் விதி ரஹஸ்யம், அநுஸந்தான ரஹஸ்யம் என்று யோஜிப்பது. மந்த்ர ரஹஸ்யமென்றது (மந்த்ரராஜமான) திருமந்த்ரம்; விதிரஹஸ்ய மென்றது ஸித்தோபாயத்தை ஸாங்கமாக விதிக்கிற சரம ச்லோகம்; அநுஸந்தான ரஹஸ்ய மென்றது 'மந்த்ரரத்நாநுஸந்தாந ஸந்தத ஸ்புரிதாதரம்" என்கிற படியே ஸர்வஜ்ஞர்களாலே ஸதா அநுஸந்திக்கப்படுகிற த்வயம். இந்த மூன்று ரஹஸ்யங்களிலும் அந்வயிக்கும்படியாக மாமுனிகள் ஒரு விசேஷணமிட்டருளுகிறார்—"ஸகல சாஸ்த்ர தாத்பர்யமான அர்த்த பஞ்சகத்தையும் ஸம்சய விபர்யயமற ப்ரதிபாதிக்குமவையாய்" என்று. இந்த விசேஷணம் திருமந்த்ரத்தில் மட்டும் அந்வயிப்பதன்று; "ப்ரதிபாதிக்குமவையாய்" என்று பன்மையாக ப்ரயோகித்தருளியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. ஒன்றில் மட்டும் அந்வயிக்குமதாகத் திருவுள்ளம் பற்றினால் "ப்ரதிபாதிக்குமதாய்" என்றல்லது இங்ஙனேயிருக்க விரகில்லை. நிறுத்து அளந்து எண்ணி ஸ்ரீஸூக்திகளையருளிச் செய்யும் பெருமை மணவாளமாமுனிகளொருவர்க்கே அஸாதாரண மென்பதை ஒருவரும் மறக்கலாகாது. ஆக ரஹஸ்யத்ரயமும் அர்த்தபஞ்சக ப்ரதிபாதக மென்னுமிடத்தையும், அதுதன்னிலும் விசேஷித்து ப்ரதிபாதிப்பது த்வயமேயென்னுமிடத்தையும் மாமுனிகளின் திவ்ய ஸூக்திகளைக்கொண்டு ஸ்தாபித்தோமாகேனும்" என்பது. (இது முன்பு நாமெழுதினது.)

103. (3) இதற்கடுத்த வாக்யச்ரேணி "ஏதத் ராமாஸ்த்ரம் தஸ்யது" என்ற மகுடம் புனைந்தது. அதற்கு முந்தியதான (மேலே அநுவதித்த) வாக்யச்ரேணி ப்ரஹ்மாஸ்த்ர மென்று கொள்ளக்கடவது. அதில் உதாஹரிக்கப்பட்ட மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியானது மூன்று ரஹஸ்யங்களும் அர்த்த பஞ்சக ப்ரதிபாதக மென்னுமிடத்தை அநாயாஸமாக நாம் அறிந்துகொள்ளும்படி செய்திருக்கின்றது என்பதை விளக்கிக் காட்டியிருக்கிறோம். இதற்கு வானமாமலை வித்வான்ஸ்வாமி எழுதியிருக்கிற பதில் ஸ்ரீஸூக்தியாவது —

"ஸகல சாஸ்த்ரதாத்பர்யமான அர்த்த பஞ்சகத்தை ப்ரதிபாதிக்குமவையாய்" என்பது வியாக்கியானம். (ப்ரதிபாதிக்குமவையாய்) என்பது மந்த்ரத்துக்கு மட்டுமே விசேஷணம். விதியநுஸந்தான ரஹஸ்யங்களுக்கு வேறு விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. (அவையாய்) என்பது ஏகவசனமேயொழிய பஹுவசனமல்ல; (அதாய்) என்றாலும் (அவையாய்) என்றாலும் ஒரே அர்த்தந்தான். பஹுவசனமானால் (அவைகளாய்) என்றிருக்க வேண்டும். அப்படியில்லாததால் அதை பஹுவசனமாகச் சொல்லுவது தப்பு. இப்படியெல்லாம் தேவரீர் சொல்லுவதும் எழுதுவதும் எனக்கு ஒன்றும் சரியாகத் தோன்றவில்லை"—என்று.

104. (4) அந்தோ! இத்தகைய அற்புத ஞானவைபவத்தைப்பற்றி என் சொல்லுவோம்! விவேகத்தோடும் ஸாமர்த்தியத்தோடும் விடை யிறுத்திருக்க

வேணுமாகில் "ப்ரதிபாதிக்குமவையாய் என்று நீர் அநுவாதம் செய்திருப்பது தவறு; மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி (ப்ரதிபாதிக்குமதாய்) என்பதே யொழிய (ப்ரதிபாதிக்குமவையாய்) என்றல்ல. இவ்விடத்து எட்டுப்ரதிகளில் (ப்ரதிபாதிக்குமதாய்) என்று ஏகவசநாந்தமான பாடந்தானுள்ளது; உமக்கு ஸாதகமாக நீர் அநுவதிக்கும் பாடம் தவறு; என்றெழுதியிருக்கவேணும். துணிந்து இப்படியெழுதிவிட்டால் ஒரு ஆபத்து தொலைந்தது என்று தேறியிருக்கலாம். (ப்ரதிபாதிக்குமவையாய்) என்கிற ஸ்ரீஸூக்தியை இசைந்துவிட்டு, இது ஏகவசநமேயொழிய பஹுவசநமன்று என்றும், பஹுவசநமானால் (அவைகள்) என்றிருக்க வேண்டுமென்றும் எழுதுவதானது "இவ்விடத்தில் காலக்ஷேபம் நடாத்துக்கொண்டிருக்காது" என்றெழுதுமவர்களையே நினைவூட்டுகின்றது. (கள்) என்பது எங்கே ப்ரயோகிக்கப்படுமென்பதைக்கூட அறியப்பெறாமலிருப்பது அற்புதமே. இதற்காக இலக்கணம் வாசிக்கவேண்டா. அதிகரித்திருக்கிற திவ்யப்ரபந்தத்தில் ஏதேனுமொரு பதிகத்தைச் சிந்தனை செய்து பார்த்தாலும் போதுமே. திருவாய்மொழியின் தொடக்கப்பதிகத்தில் "நாமவனிவனுவன்" என்கிற பாசுரத்தின் பின்னடிகளைச் சொல்லிப்பார்க்கலாமே. ஓரிடமா? ஒன்பதினாயிரமிடமல்லவா? "இவையுமவையுமுவையும்" இத்யாதிகளெல்லாம் ஏகவசநமேயென்று இவர் பாடங்கேட்டிருக்கிறார் போலும். வானவாரீஸப்பதிகத்தில் "அகற்ற நினைத்த மாயவல்லைம் புலன்களாமவை" என்கிற விடத்தில் (அவைகள்) என்றில்லாமையாலே அதுவும் ஏகவசநந்தானென்று இவர் ப்ரவசநம் செய்து வருகிறார் போலும். "மணவாள மாமுனிகள் நிறுத்து அளந்து எல்லாம் ஸ்ரீஸூக்திகளருளிச் செய்பவர்" என்று அவர்க்கே உரித்தான பெருமையை நாம் எடுத்துக் காட்டியிருந்தும் அந்தோ! பகல் கண்ட குழியிலே இராவிழுகையன்றிக்கே பகலிலேயே விழுங்கதையாயிருக்கின்றதே! "எங்கேபுக்கு எத்தவஞ்செய்து இங்ஙனே ஞானவிளக்கம் பெற்றபடியோ!

105. (5) "கேஸரீ ஹஸ்திநம் ஹந்தி" என்கிற ப்ரயோகத்தைக்கண்டவொருவர் 'ஹந்தி என்கிற பஹுவசநம் கேஸரீ என்ற ஏகவசநத்தோடு சேராதாகையாலே (ஹதி) என்று திருத்தவேணும்; (பவதி, பவத:, பவந்தி) என்று பஹுவசநத்தில் தானே (ந்தி) வரும் என்றாராம். "கனையவாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கு மவையல்ல நல்லமரங்கள்" என்று இளமையில் வாசித்திருக்கவில்லை போலும். இவற்றுக்கு என்றுள்ள விடங்களில் (இவைகளுக்கு) என்றிருந்தால் தான் பஹுவசநார்த்தம் கொள்ளலாம்; இல்லையேல் ஏகவசநார்த்தந்தான் என்கிற வாதம் அடுத்தபடியாக விளையும் போலும்.

ஸ்ரீமத் சின்னகலியன்ஸ்வாமியின் ஸ்மரணம்—

106. (6) நமது ஸம்ப்ரதாயக்ரந்தங்களில் "வலந்தரும் மற்றுந் தந்திடும்" இத்யாதி ஸ்தலங்களில் "ய ஆத்மதா பலதா" என்று உதாஹரிக்கப்பட்டுள்ளது. இங்கு ப்ரமாண சரீரம் (பலதா:) என்று விஸர்க்காந்தமேயொழிய ஆகாராந்தமன்று. விஸர்க்கமிருந்தால் பஹுவசநமாகுமே யென்றும், அது இவ்விடத்திற்குப் பொருந்தாதே யென்றும் சங்கித்து விஸர்க்கத்தைத் தவிர்த்து ஆகாராந்தமாக

அச்சிடுகிருர்கள்; ப்ரபலவித்வான்களும் அப்படியே ப்ரவசனஞ்செய்து போருகிருர்கள்; விஸர்க்கமின்றிக்கேயிருந்தால் ஸ்த்ரீலிங்கமாகுமே, அது இங்கு எப்படிப் பொருந்தும்? என்று சிந்திப்பாரில்லை. உண்மை கேண்மின்; "யா ஆத்மதா பலதா:" என்கிறப்ரமாணம் தைத்திரீய யஜுஸ்ஸம்ஹிதையில் ஓதப்பட்டு வருவது. நாலாவது காண்டம் முதல் ப்ரச்நத்திலும் ஏழாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்திலுமாக இருமுறை ஓதப்பட்டு வருவது. ஆத்மதா இத்யாத்ம-தா:; பலதா இதி பல-தா: என்று வேஷ்டனமோதப்படுகிறது. இது ஏகவசநாந்தமேயொழிய பஹுவசநாந்தமன்று; விச்வபா:; மேதஸா: இத்யாதிகளைப்போலே. த்விபத்தமான பதமிது. ஒரு ஸமயம் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி சின்ன கலியன் ஸ்வாமி ஸந்நிதியிலே இதை அடியேன் ப்ரஸங்காத் விரிவாக விஜ்ஞாபிக்க, பரமப்ரீதியோடு திருச்செவிசாத்தியருளித் திருவுள்ள முகந்தருளினதோடு, அங்கிருந்த வித்வான்களுக்கும் இந்த ப்ரமாதத்தை (அல்லது ப்ரமோதத்தை)த் தமது திருவாக்காலே யுணர்த்தியருளினர். (இது 1917ல் பாட்ளூரில் தீக காட்டில்.)

107. (7) இங்ஙனே நாம் தெரிவிக்க வேண்டியனவை எண்ணிறந்தனவையுண்டு. ஆனால் (ப்ரதிபாதிக்குமவையாய்) என்பது ஏகவசனமேயொழிய பஹுவசனமன்று என்றும், (கள்) இருந்தால்தான் பஹுவசனமாகு மென்றும் ஒரு மஹானுக்கு ஏற்பட்டிருக்கிற மருள் லோகவிலக்ஷணமானது. இத்தகைய மருள் அல்பஜ்ஞர்களுக்குமுண்டாமதன்று. திருவாய்மொழியில் "என்கொலம்மான் திருவருளே என்றும் "என்கொலம்மான் திருவருள்கள்" என்றும் வருமிடங்களில் நம்பிள்ளை பணித்தருளின பொருள் மிகவற்புதம்! மிக மிகவற்புதம்!! நிர்விஷயகப்ரமமென்றும் நிரதிஷ்டான ப்ரமமென்றும் திருவருளுக்கு அர்த்தம் செய்தருளினர். மஹான்கள் ப்ரமித்தால் அதை ப்ரமமென்னக்கூடாது; திருவருள் என்னவேணும். என்ன இப்படி ப்ரமிக்கிறதே என்னாமல் 'என்ன திருவருள் இது!' என்னவேணுமாம். அப்படியே இங்கும் விண்ணப்பஞ்செய்து திருவருளைக்கொண்டாடுவோம்.

108. (8) "மந்த்ரவித்வனுஸந்தான ரஹஸ்யங்களோடே" என்றவிடத்தில் மந்த்ர ரஹஸ்யத்திற்கும் விதி ரஹஸ்யத்திற்கும் அநுஸந்தான ரஹஸ்யத்திற்கும் தனித்தனியே ஒவ்வொரு விசேஷணமிட்டிருப்பது ஸுஸ்தவம். விவாதாஸ்பதமான விசேஷணம் மூன்றுக்கும் சேருமதாகையாலே ஸாமான்ய விசேஷணமெனப்படும். "வித்வான்களாய் ஸ்ரீரங்கவாஸியான ரங்காசாரியரும், ஸ்ரீசைலவாஸியான ராகவாசாரியரும், யதுகிரிவாஸியான நாராயணாசாரியருமான மநுஷ்யர்மூவரும்" என்றால் ஸ்ரீரங்கவாஸித்வாதிகள் ப்ரத்யேக விசேஷணமென்றும் (வித்வான்களாய்) என்கிற விசேஷணம் மூவரிலும் அந்வயிக்குமதென்றும் தெரிந்து கொள்வதில் அருமையுண்டோ? வைதுஷ்யம் ஒருவ்யக்திக்கே விவக்ஷிதமாயிருந்தால் (வித்வான்களாய்) என்னாமல் (வித்வானாய்) என்றுதான் கூறப்படும். (ப்ரதிபாதிக்குமவையாய்) என்பது ஏகவசநாந்தமென்று லோகவிலக்ஷணமாய்த் தோன்றியிருக்கிற மருள் தொலையும்வரையில் அடியேனெழுதுமவையெல்லாம் "அரண்யருதிதம் க்ருதம், ஸசிரஷ்டே வர்ஷிதம்" ஊமையரோடு செவிடர் வார்த்தையே.

— யாவஜ்ஜீவம் பரிதபிக்கவேண்டுமே. —

109 (9) இந்த சர்ச்சையில் அடியேன் மாமுனிகளின் மற்ற ஸ்ரீஸூக்திகள் பலவற்றையுமெடுத்துக் காட்டி நிரூபித்திருப்பவை ஸர்வாத்மநா அஸம்பத்தமாகவே கிடக்கட்டும்; ப்ராக்ருத விவாதாஸ்பத ஸ்ரீஸூக்தியுண்டே, அதொன்று போதும்; ஏதத்ரூப ரஹஸ்யத்ரயமும் அர்த்த பஞ்சக ப்ரதிபாதகமென்றே மாமுனிகளின் திருவுள்ளமென்பதை நிலைநாட்டுதற்கு. ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானாரை நோக்கி "த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதா ஏவம்வக்தா யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்று நியமித்ததும், மணவாள மாமுனிகள் "மந்த்ரார்த்தாநுஸந்தாந ஸந்தத ஸ்புரிதாதரா"யெழுந்தருளியிருந்ததும் த்வயத்தில் அர்த்த பூர்த்தியில்லையாகில் எங்ஙனே ஸம்பவிக்குமென்று ஆலோசிக்க மாட்டிற்றில்லையே யந்தோ! அந்த ஆலோசனை வேண்டா; ஏந்த ஆலோசனையும் வேண்டா; (ப்ரதிபாதிக்குமவையாய்) என்பது பஹுவசனாந்தமன்று, ஏகவசனாந்தமேயென்று ஸஹஸா எழுதுகிறீரே! இது என்னையிளையும்! என்கிற ஆலோசனையில்லாமைக்கு யாவஜ்ஜீவம் பரிதபிக்க வேண்டியன்றோ இருக்கிறது.

— வித்வத்ஸார்வபௌம ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமியின் திருவாக்கு —

110 (10) ஜகத்விக்யாத வித்வத் பரிப்ருடராய் ஸ்ரீகாஞ்சியில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே குன்றபாக்கம் சீராச்சார்ஸ்வாமி வித்வான்களுக்கே நிலமான சில விநோத கதைகள் ஸாதிக்கக் கேட்டதுண்டு; ஸ்ரீவாதர்சநசதகத் தனியனில் "சகார சக்ரேசநுதிம் நிவ்ருத்தயே" என்ற விடத்தில் [சக்ரேசநுதிம் சகார] என்று அந்வயம், ஒரு ஸ்வாமி வந்து "சகார சக்ரே" என்றிருக்கிறதே; இரண்டுக்கும் பொருள் ஒன்றுதானே, எதற்காக இந்த புநருக்தி? என்று கேட்டாராம். அதற்கு ஸ்வாமி ஸாதித்தாராம். 'ஸம்தாபயதி ஸ்வம் தேஜஸா ஆபாத தலை மஸ்தகம்' என்ற வேதவாக்கு உமக்குத் தெரியுமோ; தலையென்றாலும் மஸ்தகமென்றாலும் ஒன்றுதானே. அதை யநுஸரித்த ப்ரயோகமிது—என்று. அதற்கு மேல் அவர் சொன்னாராம்—அங்கு பாஷாபேதமிருக்கிறது; தலையென்று சொல்லப்படுகிற மஸ்தகம்—என்று எளிதாகப்பொருள் கொள்ளலாம், இங்கு அப்படிபாஷா பேதமில்லையே—என்று. அதற்கு ஸ்வாமி ஸாதித்தாராம். (சகார) என்பது பரஸ்மைபதி ரூபம், (சக்ரே) என்பது ஆத்மநேபதி ரூபம். இந்த ஸ்தோத்ரத்தைப் பிறர்க்காகவும் செய்தார், தமக்காகவும் செய்தார் என்று பொருள்காணும்—என்று. தந்யோஸ்மி, க்ருதார்த்தோஸ்மி என்று சொல்லிப் புகழ்ந்து போனாராம்.

— இரண்டாவது விநோத கதை —

111. (11) சாகுந்தலம் முதலான நாடகங்களில் (ஆரம்பத்தில்) "நாந்த்யந்தே ஸூத்ரதார:" என்றிருக்கும்; நாந்தியினுடைய அந்தத்திலே ஸூத்ரதாரன் (வருகிறான்) என்று பொருள். நாந்த்யதே, நாந்த்யேதே, நாந்த்யந்தே என்று இந்த பஹுவசனமான திஙந்தபதமாகக் கொண்டவொரு பண்டிதர் (ஸூத்ரதார:) என்று ஏகவசனமாக இருக்கிறதே. இதெப்படி அந்வயிக்கும்? என்று கேட்டாராம்; ஸூத்ரதாரா: என்பதும் பஹுவசனந்தான், ஸூத்ரதார:, ஸூத்ரதாரௌ, ஸூத்ரதாரா: இதி தாத்ருசாந்தவத் என்றாராம். ... ... ...

— மோஹமும் ஸந்தேஹமும் அப்ரஸக்தமே —

112 (12) இப்படிப் பல பல கதைகள் நினைவுக்கு வருகின்றன. சாந்தம் பாபம்! சாந்தம் பாபம்!! முந்தின வியாஸத்தின் முடிவில் ஒன்று எழுதியிருந்தேன் (அதாவது–) "ப்ராமாணிகர்களானால் *நஷ்டோ மோஹ:* என்றும் *ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ:* என்றும் சொல்லித் தொழுவர் திசையுற்று நோக்கியே" என்றெழுதியிருந்தேன். அதற்கு வந்திருக்கும் விடையென்னவென்றால் "நமக்கு மோஹமுமில்லை, அது நஷ்டமாகவுமில்லை; நமக்கு ஸந்தேஹமுமில்லை, அது தீரவுமில்லை" என்று. உண்மையில் திடமான விபரீத நிச்சயமுள்ளவர்களுக்கு மோஹமும் ஸந்தேஹமும் அப்ரஸக்தமே. தமக்குத் திடமாகவுள்ள விபரீத நிச்சயம் யாவதாத்மபாவி ஸுப்ரதிஷ்டிதமாய் விளங்குக. த்வயத்தில் அர்த்தபஞ்சக ப்ரதிபாதனமுண்டா? இல்லையா? என்னும் விஷயத்தில் உட்புகுந்து விமர்சிக்கவல்லவர்கள் மிகச் சிலரே தேறுவர்; (ப்ரதிபாதிக்குமவையாய்) என்பது ஏகவசனமேயொழிய பஹுவசனமன்று என்கிற அபூர்வவாதத்தை யறிந்து அபஹஸிக்கக் கூடியவர்கள் நாட்டிலுள்ள நான்கு சாதியாரும் ஆண்பாலர் பெண்பாலரென்னும் வாசியற அனைவரும் முன்னிற்பர்கள், இந்த கஷ்டவிசாரம் மேன்மேலும் தொடர்ந்து செல்லாமல் இவ்வளவோடு முற்றுப்புள்ளியிடுகிறேன். கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமதுபயவே. காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் சோதிடத் திருவாக்கைப் பலகால் வெளியிட்டிருக்கிறேன். ஸமீபத்தில் வெளிவந்த ஸ்ரீராமாநுஜன் 256, 57ல் பக்கம் 49லும் காணலாம். "வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்கிற வாசியில்லாமல் பெரும்பாலும் எல்லாருமே வந்து உம்மிடம் சிக்கிக்கொள்வார்கள்; சிக்கிக்கொள்வதோடு நில்லாமே திக்குமுக்கலாடி நிற்பர்கள்" என்று அந்த மஹாஸ்வாமி 55 ஆண்டுகட்கு முன் ஸாதித்தருளின திருவாக்கு இப்படியா பலிக்கவேணும்! அந்தோ! *விதிரேவ விசேஷகர்ஹணீய:.*

— *மதுரேண ஸமாபயேத்* —

*வாணமாமலையை விசேஷித்தருளா நின்ற நம்மாழ்வார் "தெருள் கொள் நான்மறை வல்லவர் பலர்வாழ்" என்றார். இவ்விடத்திற்கு நம் பிள்ளையீடு — "ஜ்ஞாநநிசயத்தை யுடையராய்க் கொண்டு......* **தாங்கள் நினைத்தபடி** *நிர்வஹிக்க வல்லவர்கள்" என்று. தாங்கள் நினைத்தபடி நிர்வஹிக்கும் வல்லமை எப்படி யிருக்குமென்று தெரியாததாக ஜிஜ்ஞாஸை யிருந்தது; இப்போது தெளிந்தோம். ஸஹஸ்ரநாமத்தில்* **அவிஜ்ஞாதா** *என்கிற திருநாமத்தின் பாஷ்யத்தில் பட்டர் பிறருடைய அர்த்த நிர்வாஹத்தை யநுவதித்து "ந தே நிரஸநீயா: அபி து சோசநீயா:" என்கிறார். மனம்போனபடி அர்த்தம் சொல்லுகிறவர்களைக் கண்டிக்கலாகாது, அன்னவர்களைப்பற்றி ஒரு சூரல் அழுது தீர்க்க வேண்டியதத்தனை என்றபடி. அதுவே நமக்குங் கர்த்தவ்யமென்று நிலையிட்டோம்.*

*ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:*

### — அமுதமுண்பவர்கள் நாமேயன்றோ —

113. அம்ருதமென்பது தேவலோகத்திலுள்ளதென்றும் அது மானிடர்க்குக் கிடைக்க மாட்டாததென்றும் பலர் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு. ஆனால் நிச்சலும் அமுதமுண்டு களிக்கின்ற நாம் அப்படி நினைப்பதற்கு ப்ரஸக்தியில்லை. உலகில் நூல்களைப் பாடினவர்கள் பல்லாயிரவ ரிருந்தாலும் "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்று துணிந்து சொன்னவர் ப்ரபன்ன ஜநகூடஸ்தரான நம்மாழ்வார் ஒருவரே யன்றி மற்றருமிலர். ஸ்ரீமந்நாதமுனிகளும் "பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்" என்று மருமமறிந்து பேசும்படியான தன்றோ அவ்வமுதம். பிள்ளைப்பெருமாளையங்காரும் திருவரங்கக் கலம்பகத்தின் காப்புச் செய்யுள்களுள்:

"மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து
துறைப்பாற்படுத்தித் தமிழாகிரத்தின் சுவையமிழ்தம்
கறைப்பாம்பணைப்பள்ளியா னன்பரிட்டங் களித்தருந்த
நிறைப்பான் கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே"

என்ற செய்யுளினால் நம்மாழ்வாரை அமுதமளித்த பெருவள்ளலாகவே பேசிப் போந்தார். எம்பெருமான் உப்புக் கடலைக் கடைந்து ப்ரயோஜநாந்தரபரர்களான அமரர்கட்கு அமுதமளித்தான். ஆழ்வாரோ வென்னில், வேதமாகிற பாற்கடலைக் கடைந்து அநந்ய ப்ரயோஜநர்களான அத்புத பக்தியுக்தர்கள் அநவரதம் அருந்திக் களிக்கும்படியான திவ்யாம்ருதத்தை யநுக்ரஹித்தருளினர். .... •

### — திருமங்கையாழ்வார் மோக்ஷத்தை இல்லைசெய்கிறாரே! —

114. மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங் கூற வவதரித்த திருநாவீறுடைய பிரானான திருமங்கையாழ்வார் சிறிய திருமடலென்றும் பெரிய திருமடலென்றும் இரண்டு திவ்ய ப்ரபந்தங்களை யருளிச் செய்திருப்பது உலகறிய நின்றது. இவற்றுள் முக்கியமான விஷயம் என்னவென்றால்; மோக்ஷமென்கிறவொரு புருஷார்த்தம் கிடையவே கிடையாது; அஃதொன்றிருப்பதாகச் சொல்லுவார் அவிவேகிகளேயொழிய விவேகிகளல்லர்; அஃது உண்டு என்று கொண்டாலும் அது அநுபவ ரஸிகர்களுக்கு உத்தமமான புருஷார்த்தமென்று கொள்ளத் தகாததே' என்று அறுதியிடுவதுதான் இதில் தலையான விஷயமாகக் காண்கிறது. ஆஸ்திகர்களில் தலைவரான திருமங்கையாழ்வாரா இப்படியருளிச் செய்கிறாரென்று பலரும் அதிசயிக்கக் கூடும்; ஒருகாலும் இப்படி யருளிச் செய்திருக்க மாட்டார் என்றும் சிலர் சொல்லக்கூடும். திருமடல்களின் தலைப்பிலேயே ஸுஸ்பஷ்டமாகக் காணுமிவ் விஷயத்தில் ஸந்தேஹமென்ன? இவ்வாழ்வார் நாஸ்திகரல்லர்; ஆஸ்திகர்களில் அக்ரேஸரர் என்பதும் அசைக்கமுடியாததே. தம்முடைய பதிகங்களுக்குப் பலன் கூறுமிடத்து "இம்மன்னு பாடல் வல்லார்க்கு இடமாகும் வானுலகே" "வெங்கதிர்ப் பரிதிவட்டத்தூடு போய் விளங்குவாரே" "ஒளி விசும்பாள்வர் தாமே" என்றிப்படி அடிக்கடி யருளிச் செய்து போருகின்றார். தம்முடைய

திவ்ய ஸூக்திகளை யோதுகைக்குத் திருநாட்டில் வாழ்ச்சியையே பலனாகக் கூறியுள்ள இவ்வாழ்வார் மோக்ஷமென்கிற புருஷார்த்தமே கிடையாதென்று ஸ்தாபித்து இரண்டு திவ்ய ப்ரபந்த மருளிச் செய்தாரென்னில், இதன் கருத்தை ஆராய வேண்டும். நாம் புதிதாக ஆராயவேணுமோ?

— மோக்ஷத்தை இல்லை செய்வதன் கருத்து —

115. சாஸ்த்ரஜ்ஞர்கள் *ந ஹி நிந்தா ந்யாயமென்று ஒரு ந்யாயம் சொல்லுவர்கள். "ந ஹி நிந்தா நிந்த்யம் நிந்திதும் ப்ரவர்த்ததே, அபி து நிந்த்யாத் இதரம் ப்ரசம்ஸிதும்" என்பதே அந்த ந்யாயமாகும். விவேகிகள் ஒன்றை நிந்தித்தார்களாகில் அதற்கு நிந்தையில் நோக்கன்று; புகழ நினைத்த வொன்றைப் புகழ்வதிலேயே நோக்கு-என்பது இந்த ந்யாயத்தின் போக்கு. இந்த நீதியின்படி மஹான்கள் சிலவற்றை நிந்தித்தார்களாகில் நிந்தையிலே சிறிதும் தாத்பர்யமின்றிக்கே உத்தேச்யமானதொன்றின் புகழ்ச்சியிலேயே தாற்பரியமாகின்றமையை திரம்பக் காணநின்றோம். ப்ரக்ருதத்தில், மோக்ஷ புருஷார்த்த மென்பதொன்று கிடையாதென்றும் இருந்தாலும் அது அஸார மென்றும் மோக்ஷ நிந்தையாகக் கூறினவிதற்கு இந்த நிந்தையில் சிறிதும் நோக்கில்லை; மோக்ஷத்திற் காட்டிலும் மிகவும் உத்தேச்யமாக ஆழ்வார் தாம் கொண்ட திவ்ய தேசாநுபவமே மிகச் சீரியதென்று இதனைப் புகழ்வதொன்றிலேயே நோக்கெனக் கொள்ளத் தக்கதாம். ...

— ஆழ்வார்கள் கண்ட பஞ்சாமிருதம் —

116. சிறிய திருமடலில் மோக்ஷமுண்டென்பாரை அவிவேகிகளென்று கூறி வருமிடத்து "ஆராவமுதமங்கெய்தி அதில் நின்றும் வாராதொழிவதொன்றுண்டே" என்கிறார். இதன் உட்கருத்து யாதெனில்: ஆராவமுதம் உண்மையில் இந்த லீலா விபூதியில் இருக்க அந்த நித்ய விபூதியில் அஃதிருப்பதாகவும், அங்குச் சென்றவர்கள் உண்மையான இவ்வுலகத்தாராவமுதத்தை யநுபவிக்க மறுபடியும் வரவேமாட்டார்களென்பதாகவும் சொல்லுவது பொருத்தமுடைத்தோ? ஆராவமுத மென்பது இங்குத் தானுள்ளது-என்னுமிதுவே திருமங்கை மன்னனுடைய திருவுள்ளம். தேன், வாழைப்பழம் முதலான ஐந்து மதுர வஸ்துக்களைச் சேர்த்துப் பஞ்சாமிருதமென்று சொல்லிப் புசிக்கின்றோம் நாம், ஆழ்வார்கள் கண்ட பஞ்சாமிருதம் கேளீர்; (1.) *சீரார் செந்நெற் கவரிவீசுஞ் செழுநீர்த் திருக்குடந்தையில் ஆராவமுதே! என்றும் *ஆராவமுதாயடியேனாவியகமே தித்திப்பாய்* என்றும் நம்மாழ்வாரா லழைக்கப்பட்ட அமுதம். (2.) *கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன் என்னுள்ளம் கவர்ந்தானை அண்டர்கோனணியரங்கன் என்னமுது* என்று திருப்பாணாழ்வார் கண்ட வமுதம். (3) *அடியேன் மேவியமர்கின்ற வமுதே... திருவேங்கடத் தெம்பெருமானே!* என்று நம்மாழ்வார் திருவேங்கடத்திற் கண்ட வமுதம். (4.) *எனக்குத் தேனேபாலே கன்னலேயமுதே திருமாலிருஞ்சோலைக்கோனே* என்று நம்மாழ்வார் தாமே தெற்குத் திருமலையிற் கண்டவமுதம். (5.) *மன்னு குறுங்குடியாய் வெள்ளறையாய் மதில்சூழ் சோலைமலைக்கரசே! கண்ணபுரத்தமுதே!* என்று பெரியாழ்வார் திருக்கண்ணபுரத்திலே கண்ட வமுதம். ஆக இவ்வம்ருதங்கள் ஆழ்வார்களுடைய பஞ்சாம்ருதமாகும். இந்த அம்ருதாநுபவத்திற் காட்டிலுமா பரலோக அம்ருதாநுபவம் சிறந்தது? ஒரு நாளும் சிறவாது.

— எம்பெருமானுடைய சரிதைகளில்காணும் விபர்யாஸங்கள் —

117 கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்தில் "குணபத்தம் லோகே" என்கிற ச்லோகத்தில் "விபர்யஸ்தம் ஹஸ்திகிரிநாதே! தத் த்வயி புந:" என்று—தேவப் பெருமானிடத்தில் ஒரு விஷயம் விபரீதமாய் விட்டதாக அருளிச் செய்தார். அங்ஙனேயான வைபரீத்யம் ஒரு விஷயத்திலன்று; அநேகவிஷயங்களிலுண்டு. வேத வேதாந்தங்களில் எம்பெருமானுக்குப் பெருமையாகச் சொல்லப்பட்டு ஸித்தாந்தம் செய்யப்பட்ட மஹிமைகளெல்லாம் அவதாரங்களில் தலை கீழாகி விடுகின்றன வென்பதைக் காணுநின்றோம். அவற்றை அடைவே விவரிக்கின்றோம்.

— காரணத்வத்திற்கு மாறான கார்யத்வம் —

118 அவனுக்கு முக்கியமான பெருமையாவது ஸகலஜகத் காரணத்வம். சாரீரக மீமாம்ஸையும் *ஜந்மாத்யஸ்ய யத:* என்று தொடங்கிப் பலபல அதிகரணங்களிலும் ஸர்வ காரணத்வத்தை அநந்யஸாதாரணமாக ஸ்தாபித்து வைத்தது. இப்படியிருக்க, தான் கார்ய பூதனாகவும் தனக்கு வேறு சில காரண பூதர்களிருப்பதாகவுங் காட்டி அவதாரங்கள் செய்தருள்கின்றானெம்பெருமான். இவ்விஷயத்தைப் பேயாழ்வார் தமது திருவந்தாதியில் ஸூசிதமாக வருளிச் செய்கிறார்-*மகனொருவர்க்கல்லாத மாமேனி மாயன் மகனாம், அவன் மகன்றன் காதல் மகனைச் சிறை செய்த வாணன்...* என்கிற பாசுரம் காண்க. அனைவரும் தனக்குப் புத்ர பௌத்ராதிகளென்னும்படியாய் தான் ஒருவர்க்கும் மகனாகத் தகாதவனான எம்பெருமான் தானொருவர்க்கு மகனாக, அவனுக்குமொரு மகன் தோன்ற, அவனுக்குமொரு மகன் தோன்ற இப்படி ஸம்ஸாரம் வளர்ந்திட்டதென்று காட்டினார் பேயாழ்வார். க்ருஷ்ணாவதாரத்தில் தான் வஸுதேவ தேவகிகளுக்கு மகனானான்; தனக்கொரு மகன் ப்ரத்யும்நனென்று தோன்றினான்; அவனுக்கொரு மகன் அநிருத்தாழ்வானென்று தோன்றினான்; ஆக, காரணத்வமாகிற பெருமை கார்யத்வமாகிற சிறுமையாய் விபரீதமாயிற்று. இதுவொரு சமத்காரமான விபர்யாஸம்.

— ரக்ஷகத்வத்திற்கு மாறுபாடான ரக்ஷ்யத்வம் —

119 அடுத்தபடி ரக்ஷகத்வத்தையெடுத்துக் கொள்வோம். தனக்கொரு ரக்ஷகனின்றியே தானே ஸர்வரக்ஷகனாக ஓதப்பட்ட பெருமான் ரக்ஷகத்வம்போய் ரக்ஷ்யத்வத்தையடைகிறான். யசோதைப்பிராட்டி சொல்லுகிறாள் — *போய்ப்பாடுடைய நின் தந்தையும் தாழ்த்தான் பொருதிறல் கஞ்சன் கடியன், காப்பாருமில்லை கடல்வண்ணா உன்னை* என்கிறாள். *கண்ணனே என் கார்முகிலே கடல்வண்ணா காவலனே முலையுணாயே* என்று காக்குமியல்வினன் கண்ணபெருமானென்றறிந்து சொல்லச் செய்தேயு* 'கண்ணா! தனியே போய் எங்கும் திரிகிறாயே; உன்னைக் காப்பாருமில்லையே' என்று நின்றாள். ஸர்வரக்ஷகனுக்கும் ரக்ஷையிட வேண்டும்படியாகிறதன்றோ. ஸ்ரீவசன பூஷணத்தில் "மங்களாசாஸனம் ஸ்வரூபவிருத்த மன்றோ வென்று சங்கித்துக் கொண்டு "ஜ்ஞானதசையில் ரக்ஷ்யரக்ஷகபாவம் தன் கப்பிலே கிடக்கும், ப்ரேமதசையில் தட்டு மாறிக் கிடக்கும்" என்றன்றோ சங்காபரிஹாரம் செய்தருளிற்று; ரக்ஷகனை தன்னைத் தானே யன்றோ ரக்ஷ்யனாக்கிக் கொள்ளுகிறான். இல்லையாகில் பல்லாண்டு பாடுவதைத உகந்து கேட்டருள்வனோ? .... .... .... .... *

— சேஷித்வத்திற்கு மாறுபாடான சேஷத்வம் —

120. இனி சேஷித்வத்தையெடுத்துக் கொள்வோம்; கைங்கர்யம் செய்யப் பிறந்தவன் சேஷனென்றும், கைங்கர்யம் கொள்ளப் பிறந்தவன் சேஷி யென்றும் சொல்லப்படுவான்; *உன்றன்னோடுற்றோமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோம்* என்றும், *ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்* என்றும் ஞானிகள் நித்ய கைங்கர்யம் செய்யப் பாரிக்கும்படி ஸர்வசேஷியாயுள்ளவன் *இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ, ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம்* என்று விச்வாமித்ரர் போல்வார் பக்கலிலே கிங்கரவ்ருத்தி செய்யக் குதூஹலித்திருந்தானென்றால் இந்த விபர்யாஸத்தை என்னவென்று சொல்லுவது.

—நியாமகத்வத்திற்கு மாறான நியாம்யத்வம்—

121. *அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* என்று ச்ருதியோதினபடியே தான் ஸர்வநியாமகனென்று ப்ரஸித்தி பெற்றிருக்கச் செய்தேயும் தனக்குச் சிலரை நியாமகராகவுடையனாய்த் தான் நியாம்யனாயிருக்கும்படியைத் திருமழிசைப்பிரான் போல்வாருடைய சரிதையிலே கண்டோம். "கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்க வேண்டா, துணிவுடைய செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன், பைந்நாகப் பாய் சுருட்டிக்கொள்* என்றபோது தனது பைந்நாகப் பாயைச்சுருட்டிக்கொண்டு புறப்படுவதும்,* கணி கண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி மணிவண்ணா! நீகிடக்கவேண்டும் - துணிவுடைய செந்நாப்புலவனும் மீள்கின்றேன் நீயுமுன்றன் பைந்நாகப்பாய் விரித்துக்கொள்* என்றபோது மீண்டருளி யதாஸ்தானம் சயனித்துக் கொள்வதுமான சரிதையினால் தன்னுடைய நியாமகத்வப்ரதிபடமான நியாம்யத்வத்தையன்றோ நிலைநிறுத்திக் கொண்டான். கூரத்தாழ்வான் வரதராஜஸ்தவத்திலே *அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிககிர: பராதீநம் த்வாம் து ப்ரணதபரதந்த்ரம் மநுமஹே* என்கிற ச்லோகத்தில் முக்கியமாக இந்தச் சரிதையையன்றோ திருவுள்ளம்பற்றினர். பட்டரும் ஸஹஸ்ரநாமத்திலே *"விதேயாத்மா"* என்ற விடத்திலே பிறரைப்போலே 'அவிதேயாத்மா' என்று பதவிபாகம் பண்ணாமல் 'விதேயாத்மா' என்றே எடுத்து பாஷ்யமிட்டருளினது இதுபோன்ற பலசரிதைகளைக் கொண்டேயன்றோ.

—ஸ்வாமித்வத்திற்கு மாறான ஸ்வத்வம்—

122. எம்பெருமான் ஸர்வஸ்வாமியென்பதற்கு ப்ரமாணம் காட்டவேணுமோ? *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம், ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்,* என்றிவை முதலான ப்ரமாணங்களுக்கும் குறையில்லை. பிள்ளைலோகாசிரியர் தமது தத்வத்ரயத்தின் முடிவில் ஸாதித்திருக்கிற சூர்ணை "ஸ்வஸ்வாமிபாவத்தை மாறாடிக் கொண்டு" என்று தொடங்குகிறது. இது அர்ச்சாவதார நிலையைக்கூறுவது; எம்பெருமான் தான் ஸர்வஸ்வாமியாயிருக்கச் செய்தேயும் நம்முடைய சொத்துக்களிலே தானும்

ஒருமொத்தாகச் சேர்ந்து பரிகணிக்கலாம் படி ஸஹோதரர்கள் செய்து கொள்ளும் விபாகங்களுக்கும் அர்ஹமாயிருக்கு மிருப்பு விலக்ஷணமான விபர்யாஸமன்றோ.

## —ஆத்மத்வத்திற்கு மாறான சரீரத்வம்—

123.* ஜகத் ஸர்வம்"சரீரம் தே* இத்யாதிப்ரமாணப்படி விச்வாத்மாவாக ப்ரஸித்தனான ஸர்வேச்வரன் கீதையில் ஏழாமத்யாயத்தில் * சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந!* என்று தொடங்கி நால்வகையதிகாரிகளைச் சொல்லி, அவர்களில் ஜ்ஞாநி யென்னும் அதிகாரியைக் கொண்டாடிக் கூறும்போது *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்* என்றான்; 'ஞானியானவன் எனக்கு ஆத்மாவாயிருப்பன்' என்று சொன்னவிதனால் அவனுக்குத் தான் சரீரபூதன் என்பது'தேறிவிட்டது; இங்கு மே மதம் என்று விசிஷ்ய சொல்லியிருப்பதை நோக்கி வேதாந்தவாசிரியர் தாத்பர்யசந்திரிகையில் ஸாதித்திருப்பது மிகவழகியது; இவ்வர்த்தம் வேதாந்த ஸித்தாந்தமாக இருக்கட்டும் இல்லாமற்போகட்டும் கீதாசார்யனான என்னுடைய ஸித்தாந்த மிதுகாணீர்—என்கிறானும் கீதாசாரியன். உண்மையில் (மே மதம்)என்ற தன் உட்கருத்து இதுவேயாகும்.

## —போக்யதைக்கு மாறான போக்த்ருத்வம்—

124.எம்பெருமான் பரம போக்யன்; *ரஸோ வை ஸ:*என்கிறது உபநிஷத்து; *எனக்குத்தேனே பாலே கன்னலேயமுதே என்கிறார்கள் அநுபவ ரஸிகர்களான ஆழ்வார்கள், ஆனாலும் "ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்றுவிடாய்த்திருந்த எம்பெருமான் "என்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப்பருகினான்" (திருவாய்மொழி) என்னும்படியும்" "போகதசையில் ஈச்வரனழிக்கும் போது" (முமுக்ஷுப்படி) என்கிறபடியும் அவன் தானே போக்தாவாகிறான். ஆகவே போக்யதையை வெறுத்து போக்த்ருத்வத்தையாசைப்படுகிறான் எம்பெருமான் என்றதாயிற்று. .... *

## —வேதவிஷயத்தில் ஓர் அற்புதமான சுலோகம்—

125."சதுர்ப்பிச்ச சதுர்ப்பிச்ச த்வாப்யாம் பஞ்சபிரேவ ச, ஹூயதே ச புநர் த்வாப்யாம் ஸ நோ விஷ்ணு: ப்ரஸீதது." என்று வைதிகோத்தமர்களின் கோஷ்டிகளில் மட்டும் ப்ரஸித்தமானவொரு சுலோகமுண்டு; யஜுர்வேதம் முதற் காண்டம் ஆறுவது ப்ரச்நத்தில் "யோ வை ஸப்ததசம் ப்ரஜாபதிம் யஜ்ஞ மந்வாயத்தம் வேத"என்றுதொடங்கு மநுவாகத்தில் "ஆச்ராவயேதி சதுரக்ஷரம்; அஸ்து ச்ரௌஷடிதி சதுரக்ஷரம்; 'யஜேதி த்வ்யக்ஷரம'; யேயஜாமஹ இதி பஞ்சாக்ஷரம், த்வ்யக்ஷரோ வஷட்கார:,ஏஷ வை ஸப்த தச: ப்ரஜாபதிர் யஜ்ஞ மந்வாயத்த:" என்றோதி யிருப்பது கொண்டு இந்தச்லோக மவதரித்தது. சுலோகத்தில் நான்கு, நான்கு, இரண்டு, ஐந்து, (மறுபடியும்)இரண்டு'-என்று(பதினேழு அக்ஷரங்கள்தேறும்படியாக எடுத்துரைத்துள்ளது.இவ்வைந்துவார்த்தைகள் யஜ்ஞந்தோறும் தொடர்ந்துவரும்; இவற்றால் (ய: விஷ்ணு: ஹூயதே' ஸ: ந: ப்ரஸீதது) என்று சொல்லியிருக்கையாலே ஸகல யஜ்ஞங்களும் விஷ்ணுவுக்கே ஆராதந ரூபமானவை யென்பது தேறும்,

—வேள்விகளின் தத்துவ முணர்த்துதல்—

126. யாகங்களில் "இந்த்ராய ஸ்வாஹா ஸோமாய ஸ்வாஹா ..............என்று தேவதாந்தரங்களுக்கு ஹவனமிருந்தாலும் *ஸ ஆத்மா, அங்கா ந்யந்யா தேவதா:* என்று உபநிஷத்து ஓதின கட்டளையிலே அவ்வோ தேவதைகளுக்கு இடப்படுமவை அவயவ பூதர்களுக்கு இடுமதாகவே தேறி நிற்கும். நம்மாழ்வார் * இறுக்குமிறை யிறுத்துண்ண எவ்வுலகுக்கும் தன்மூர்த்தி நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வ நாயகன் தானே* என்கிற பாசுரத்தாலும், திருமழிசைப்பிரான் * உகைக்குமேல் எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும், அப்போதொழிய் மறைப்பு* என்கிற பாசுரத்தாலும் நிலைநாட்டி வைத்தனர். கீதாசார்யனும், *யே த்வந்ய தேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய! யஜந்த்யவிதி பூர்வகம்* என்றோதிவைத்தான். அங்கு ஸ்வாமி பாஷ்யத்தில் விளக்கம் காண்க

—*யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த தேவா: விவரணம் —

127. மூன்றாவது காண்டத்தின் முடிவான ருக்கு இது [யஜ்ஞேந யஜ்ஞம் அயஜந்த] யஜ்ஞத்தாலே யஜ்ஞத்தை ஆராதித்தார்கள் என்று பொருளாகிறது. முதல் யஜ்ஞ பதத்திற்குஆராதன ரூபமான க்ரியை அர்த்தம்; அடுத்த யஜ்ஞபதத்திற்குஆராத்ய னைவிஷ்ணு அர்த்தம்; வேள்வியைக் கொண்டு விஷ்ணுவை ஆராதித்தார்களென்றபடி. *யஜ-தேவபூஜாயாம்*என்று தாதுபாடமாகையாலே பகவதாராதன ரூபமான காரியமெல்லாம் யஜ்ஞசப்தவாச்யமேயாகும். யஜ்ஞேந என்பது ஜாத்யேக வசனமாய்க்கொண்டு ஆராதனரூபங்களான க்ரியா கலாபங்களெல்லாவற்றையுஞ்சொல்லும். "ஆகாசாத் பதிதம் தோயம்" என்ற கணக்கிலே ஸகல தேவதாராதனமும் விஷ்ணுவிராதனத்திலே பர்யவஸித்து நிற்குமென்றறிக. *வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணுராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷ காரக:* என்கிற ப்ரமாணத்தை பட்டர் (ஸஹஸ்ர நாம பாஷ்யத்தில்) எடுத்துக் காட்டி யிருக்கையாலே நாம் செய்து போருகிற சாஸ்த்ரீயங்களான வர்ணாச்ரமாசாரங்களெல்லாம் யஜ்ஞங்களே யென்றும் இவற்றால் ப்ரீதியடைபவன் மஹா விஷ்ணுவே யென்றும் கருத்து தேறிற்றாகும். [தேவா:] என்றது – நிலத்தேவர்களான அந்தணர்களை; இவர்கள் ஸத்கர்மாநுஷ்டானங்களாலே பகவானை ஆராதித்தார்களென்றதாயிற்று. இதன் சிறப்பைச் சொல்லுகிறதுமேல். [தாநி தர்மாணி ப்ரதமாந்யாஸந்.] என்று. தர்மாணி யென்றது கர்மாணி யென்றபடி. கீழ்ச் சொன்ன பகவதாராதன ரூபங்களான கருமங்கள் மிகச் சிறந்தவை என்றதாயிற்று

—பட்ட பாஸ்கரபாஷ்யங் காட்டுதல்—

128. பட்ட பாஸ்கரர் தமது பாஷ்யத்தில் எழுதுகிறார் – ஹிம்ஸையில்லாமையினாலே சிறந்தவை யென்று, வேதோக்தங்களான காம்யயஜ்ஞங்களில் பசுவதமாகிய ஹிம்ஸையுண்டன்றோ; அது இந்த யஜ்ஞத்தில் இல்லையென்று இதன் சிறப்பைக் காட்டினாராயிற்று. இனி இந்த யஜ்ஞபலனைச் சொல்லுகிறது *தே ஹ நாகம் மஹிமா ந: ஸசந்த்*... [illegible] தியால். தே, ஹ, என்று பதவிபாகம் [பூர்வே ஸாத்யா: யத்ர ஸந்தி, தம் நாகம் தே மஹிமாந: ஸசந்தே] மஹிமசாலிந: என்னுமர்த்தத்திலே மஹிமாந: என்று ஓதிற்று. நலமந்தமில்லதோர் நாட்டை யடைகிறார்கள். ஐந்தாவது காண்டம் மூன்றாவது ப்ரச்நத்தில் நாகசப்த நிர்வசனமுள்ளது—* நாஸ்மா அகம் பவதி * என்றது; துக்க

மில்லாத இடம் நாகம், அதுதான் நலமந்தமில்லதோர் நாடு. அது நித்ய முக்தர்களுக்கு இருப்பிடமான தென்கிறது [யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:] என்பதனால். ஸாத்யா:-பலாநுபவ நிஷ்ணாதா: என்று பாஷ்யம். .... .... .... *

—யதிராஜரும் யஜ்ஞமூர்த்தியும்

129. யஜ்ஞமூர்த்தியென்னுமொரு மாயாவாதிஸந்ந்யாஸி எம்பெருமானாருடைய வைபவங்களைக்கேட்டு அவரோடே தர்க்கித்து வெற்றி பெறவேணுமென்றுவிரும்பிக் கோயிலிலே ஸ்வாமி மடத்திலே வந்து ஸேவித்து 'நான் கேட்கிறகேள்விகளுக்கெல்லாம் நீர் விடை கூறவேணும்; த்ருப்திகரமாக விடைபெற்றேனாகில் உமக்குசிஷ்யனாகக் கடவேன்' என்று சொல்ல, ஸ்வாமியும் இசைந்தருள, பதினேழு நாள் வரையில்வெற்றி தோல்வியின்றியே வினாவிடை செல்லாநிற்க, முடிவில் உத்தரமருளிச் செய்யவேண்டிய பொறுப்பு ஸ்வாமி பக்கலிலே வந்து நின்று மேல்விஷயம் தோன்றாமேயிருக்கையில் 'நாளைக்கு ஆகிறது' என்று சொல்லி ஸபாவிஸர்ஜநமாயிற்று; பிறகு ஸ்வாமியின் திருவுள்ளம் மிகவும் வியாகுலப்பட்டு தம் திருவாராதனமான பேரருளாளரைத் திருவடி விளக்கி அமுது செய்யப்பண்ணி 'ஆழ்வார் தொடங்கி ஆளவந்தாரளவாக இத்தனை காலம் ஒரு குறையுமின்றியே விளங்கிவந்த இந்த தரிசனம் இன்று அடியேனால் பங்கமடையக் கடவதோ! இப்படியும் ஒரு லீலை கொண்டாடத் திருவுள்ளமாயிற்றோ!' என்று விண்ணப்பஞ்செய்து தாம் அமுது செய்யாமலே கண் வளர்ந்தருள, அன்றிரவு பேரருளாளர் கனவிலே யெழுந்தருளிக் காட்சி தந்து மாயாவாதியின் வாயடங்கும்படியான சில அர்த்த விசேஷங்களை ஸ்புரிக்கச் செய்து மறைய, ஸ்வாமியும் சிற்றஞ்சிறு காலையெழுந்து பரமஸந்துஷ்டராய் நித்யாநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு ப்ரஸன்னகம்பீரராய் விசாரகோஷ்டிக்கு எழுந்தருள, அவ்வளவிலேயே யஜ்ஞமூர்த்தி இன்று நமக்குத் தோல்வியே திண்ணமென்று நிச்சயித்து அப்போதே யெழுந்து ஸ்வாமி திருவடிகளிலே ஸாஷ்டாங்க ப்ரணாமம் பண்ணி நின்று 'அடியேனை அங்கீகரித்தருளவேணும்' என்று கைகூப்பி ப்ரார்த்திக்க, 'மேலே விஷய விசாரம் நடைபெறவேண்டியிருக்க இதுவென்?' என்று ஸ்வாமி கேட்க; அதற்கு யஜ்ஞமூர்த்தி, ஸ்வாமிந்! தேவரீருக்குப் பெரிய பெருமாள் ப்ரத்யக்ஷமான பின்பு தேவரீரென்றும் பெருமாளென்றும் வாசியுண்டோ? இனி அடியேன் தேவரீர் ஸந்நிதியில் வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்ல பராப்தியில்லை; இந்த ஆத்மா இது வரையில் அநர்த்தப்பட்டதுபோதும்; இனியும் அநர்த்தப்படாதபடி நோக்கியருளவேணும், என்று கனக்க ப்ரார்த்தித்து ஸ்வாமியின் இசைவும் பெற்று அப்போதே ஏகதண்டத்தை முறித்தெறிந்து ப்ராயச்சித்த பூர்வகமாய் சிகாயஜ்ஞோபவீதங்களையும் பஞ்சஸம்ஸ்காரங்களையும் பெற்று முக்கோல்பிடித்த முனியாகி சாஸ்த்ரப்படி ஆசார்யனுடைய நாமத்தையே வஹிக்க விரும்பி ப்ரார்த்திக்க, ஸ்வாமியும் பேரருளாளனுடைய ப்ரஸாதமடியாகவே இவர் ஆட்பட்டாரென்கிற உபகார ஸ்ம்ருதி உலகப்ரஸித்தமாம்படி அருளாளப் பெருமாளெம்பெருமானார் என்று திருநாமம் சாத்தியருளினார். உடனே அவரை யழைத்துக்கொண்டு போய்ப் பெரிய பெருமாளை ஸேவிக்கப்பண்ணிச் சிறப்புகளும் பெறுவித்து, அன்று முதலாகவே திருப்பல்லாண்டு தொடங்கி நாலாயிரமும் ஓதுவித்து மற்றும் தத்வசிக்ஷைகளும் செய்வித்தருளினார். .... .... .... .... ....

## — ஸ்ரீ ராமாநுஜருடைய லௌகிக சாதுர்யம் —

130. அக்காலத்திலே, அனந்தாழ்வான் எச்சான் தொண்டனூர் நம்பி மருதூர் நம்பி என்னுமிவர்கள் எம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயிக்க வேணுமென்றுவர, ஸ்வாமி அவர்களை அருளாளப் பெருமாளெம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்தருளினார். அப்போது அவர் அஞ்சி நடுங்கி அவ்வடியார்களை நோக்கி "குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாற்போலே ஸ்வாமி செய்தருளினாராகிலும், நீங்கள் ஸ்வாமி திருவடிகளே சரணமென்றிருங்கள்" என்று நியமித்தார். இவ்விதிஹாஸத்தினால் யஜ்ஞமூர்த்தியென்கிறவவர் மிகச் சிறந்த வாவதூகர் என்பது விளங்கும், அதுநிற்க, எம்பெருமானாருடைய பரம சாதுர்யமிங்குக் குறிக்கொள்ளத் தக்கது. பரமதத்தினின்று திருத்திப் பணிகொள்ளப்பட்டவரைப் பரம்பரா ஸ்ரீ வைஷ்ணவர்கள் உபேக்ஷித்து விடாமைக்காகவே ஸதுபாயஜ்ஞரான ஸ்வாமி யெம்பெருமானார் திருமலையனந்தாழ்வான் முதலானோரை அவர் பக்கலிலே ஆச்ரயிக்கச் செய்தருளினது; ஆழ்வான் திருக்குமாரர்களான பட்டரையும் சீராமப்பிள்ளையையும் எம்பார் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்ததையும் இங்கு நினைப்பது. இந்த வழியைப் பின்பற்றியே பட்டரும் தாம் திருத்திப் பணிகொண்ட நஞ்சீயர் பக்கலிலே நம்பிள்ளையை ஆச்ரயிக்கச் செய்தருளினர். இத்தகைய ஹ்ருதயவைசால்யம் இக்காலத்தவர்களிடமுண்டோ?

## —ப்ரமாண ப்ரமேய ப்ரமாத்ரு ஸாரவிசேஷம்—

131. ஸாரங்களும் அஸாரங்களும் கலந்தகட்டியாயிருக்குமிந்தவுலகில் அஸாரங்களையும் அற்பசாரங்களையும் தள்ளி ஸாரங்களைக் கொள்வோமாயின், அவை பிரமாணங்களின் திரள், பிரமேயங்களின் திரள், ப்ரமாதாக்களின் திரள்—என மூன்று வகுப்புகளிலடங்கும். யதார்த்தமான ஞானத்தைப் பிறப்பிக்கும் சாஸ்த்ரங்கள் ப்ரமாணமெனப்படும். அந்த சாஸ்த்ரங்களினின்று தேறுகின்ற அர்த்த விசேஷங்கள் ப்ரமேய மெனப்படும். மேற்சொன்ன அர்த்த விசேஷங்களைக் கண்டறிந்து உபகரிக்கவல்ல மாஞானிகள் ப்ரமாதாக்களெனப்படுவார்கள். இவற்றுள் பிரமாணங்கள் அளவுகடந்தவை; எம்பெருமான் அத்வாரகமாகவும் ஸத்வாரகமாகவும் வெளியிட்டருளியுள்ள சாஸ்த்ரங்கள் எல்லையில்லாதவை. ப்ரமேயங்களான அர்த்த விசேஷங்கள் பிரமாணங்களிற் காட்டிலும் அதிகமான கணக்கில்தேறும். ஏனென்றால் மூலம் சுருங்கியிருக்கும்; அர்த்தம் பெருகியிருக்கும் என்பதனால். ப்ரமாதாக்களின் ஸங்கியை குறைவாகவே யிருக்கும். இறந்த காலத்திற் சென்றவர்கள், நிகழ்காலத்தில் விளங்குமவர்கள், எதிர்காலத்தில் தோன்றப்போகின்றவர்கள் ஆக முக்காலத்திலுள்ளாரையும் கூட்டிக் கொண்டாலும் யதார்த்த ஞானமுடையவர்களாய்ப் பிரவசனம் செய்யவல்ல ப்ரமாதாக்கள் மிகக் குறைவாகவன்றோ தேறுவார்கள். ஆக ப்ரமாண ப்ரமேய ப்ரமாத்ருவர்க்கங்கள் மூன்றே அஸார அல்பஸார பூயிஷ்டமான இந்த ஜகத்தில் ஸாரமெனத்தகும். இவை உலகில் நிலவுவதனால்தான் பலவகைப்பட்ட க்ஷோபங்களினிடையே நாம க்ஷேமத்தை அநுபவித்து வருகிறோம்.

— ப்ரமாணப்ராபல்யநிரூபணம் —

132. ப்ரமாணவர்க்கமில்லாதபோது ப்ரமேயவர்க்கமும் ப்ரமாத்ருவர்க்கமும் தேற மாட்டா. ப்ரமாணமான மூலம் இருக்கவேயன்றோ ப்ரமேயங்களான அர்த்தங்களும் அவற்றையுணர்ந்து உணர்த்தும் ப்ரமாதாக்களும் தோன்ற நேர்ந்தது. ஆதலால் ப்ரமாணவர்க்கமே மிகச் சிறந்தது. ப்ரமாணங்கள் பல வகுப்பா யிருந்தாலும் *ஆதென வேதா: ப்ரமாணம்* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியின்படி வேதமே தலை சிறந்த ப்ரமாணமாகும். வேதத்தை யுபஜீவித்தே மற்ற ப்ரமாணங்கள் தோன்றின; ஆகவே வேதம் ஸ்வத: ப்ரமாணமென்றும், மற்றவை இதிஹாஸ புராணாதிகள் வேத விரோதம் காணாத விடங்களில் ப்ரமாணமென்றும் மேலையார்களின் கொள்கை.

— நான்கு வகைகளாலே வேதத்திற்குப்பெருமை—

133. வேதத்தின் மஹிமை முக்கியமாக நான்கு விஷயங்களைப் பொறுத்தது. 1. நித்யத்வம், 2. அபௌருஷேயத்வம், 3. அவிச்சிந்ந பரம்பரா ப்ராப்தத்வம், 4 அநந்தத்வம் என்பவையாம்அவை. இவைநான்கையும் விவரிக்கின்றேன். முன்னம் நித்யத்வ நிரூபணமாகிறது. ஸ்வரூபதோ நித்ய மென்றும் ப்ரவாஹதோ நித்யமென்றும்நித்ய வஸ்துக்கள் இருவகைப்படும்' வேதமென்பது சப்தராசியாதலால் உச்சரிக்கப்படாத போது அதுஇல்லை யென்று சொல்ல வேண்டி வருதலால் வேதம் ஸ்வரூபதோநித்யமாகாது; சிலர்பலர் சிலபலவிடங்களில் உச்சரியாமலிருந்தாலும் ஆங்காங்குப் பல விடங்களில் பலர் வேதத்தை உச்சரித்துக்கொண்டே யிருப்பர்களாதலால் ப்ரவாஹதோ நித்யவகுப்பில்சேரும். எம்பெருமான் ஸ்ருஷ்டி காலத்தில் ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்டிப்பதுபோல வேதங்களையும் ஸ்ருஷ்டிக்கிற படியாலும், ஸ்ருஷ்டிக்கு முன்பு வேதம் இருக்க முடியாதாகையாலும், ஒரு காலத்திலே லயமடைவதும் ஒரு காலத்திலே ஸ்ருஷ்டிக்கப் பெறுவதுமான வேதத்தை நித்ய மென்று எங்ஙனே சொல்ல முடியு மென்று சங்கை தோன்றும். கேண்மின்; ஈச்வரன் வேதத்தை ஸ்ருஷ்டிக்கிறானென்பது ஒரு நாளும் கிடையாது; வேதத்தை ஓதிவரும் அதிகாரிகள் ப்ரளயத்தில் அழிந்து போய்விட்டாலும் ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தனுமான ஈச்வரன் வேதத்தின் ஆநுபூர்வியைத் தான் ஞாபகத்தில்வைத்துக் கொண்டிருந்து "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்கிற ச்ருதியின் படியே முன்னிருந்த ஆநுபூர்வி மாறாமல் அப்படியே நான்முகனுக்கு உபதேசிக்கிறான். ஆகவே வேத சப்தராசிகள் அநாதிநிதனமாகும். ஸ்வாமி ஸ்ரீபாஷ்யகாரர் தேவதாதிகரண ஸ்ரீபாஷ்யத்திலே "ஏததேவச வேதஸ்ய அபௌருஷேயத்வம் நித்யத்வஞ்ச; யத் பூர்வ பூர்வோச்சாரண க்ரமஜநித ஸம்ஸ்காரேண தமேவ க்ரம விசேஷம் ஸம்ருத்வா தேநைவ க்ரமேண உச்சார்யமாணத்வம்" என்றருளிச் செய்திருப்பது இங்கே யநுஸந்தேயம். உபாத்யாயர்கள், இரவிலே உறங்கிக் காலையிலே கண் விழித்தெழுந்த வித்யார்த்திகளுக்கு வேதமோதுவிப்பது போல ஈச்வரன் பிரமன் முதலானோர்க்கு வேத மோதுவிக்கிறானத்தனை. இதை ஸ்ரீபட்டர் *ஸம்ஸ்காரம் ப்ரதிஸஞ்சரேஷு நிதநத் ..... ஸுப்தோத்புத்த விரிஞ்சபூர்வ ஜநதாம் அத்யாப்ய* என்று சுலோகமாக்கியருளிச் செய்தார். இதனாலேயே வேதங்களுக்கு அபௌருஷேயத்வமும் நிருபிதமாயிற்றென்று கொள்ளலாம். ஆனாலும் அதைச் சிறிது விவரிக்கிறேன்.

## —வேதங்களின் அபௌருஷேயத்வம்—

134. உலகில் கோடிக் கணக்கான வாங்மயங்கள் தோன்றியிருக்கின்றன. 'இதை இன்னாரியற்றினார், இதை இன்னார் செய்தார்' என்று ஒவ்வொரு நூலுக்கும் கர்த்தாக்கள் நிர்தேசிக்கப் பட்டுள்ளார்கள்; அப்படி வேதத்திற்கு ஒரு கர்த்தாவை யாரும் எந்நாளிலும் நிர்தேசித்ததில்லை. சிறு சிறு நூல்களுக்கெல்லாம் கர்த்தாக்கள் தெரிய வரும்போது அளவு கடந்த நூலாகிய வேதங்களுக்குக் கர்த்தா உண்மையாக வொருவரிருந்தால் அவரைச் சொல்லாமலிருப்பர்களா? வேதாந்த வாசிரியர் *ப்ரவக்தர ச்சந்தஸாம்,வக்தா பஞ்சராத்ரஸ்ய யஸ்ஸ்வயம்* என்றருளி யிருப்பது ப்ரஸித்தம். பஞ்சராத்ரத்திற்கு ஸ்வயம் வக்தா வென்றும் வேதங்களுக்கு ப்ரவசநகர்த்தா என்றும் இதில் சொல்லிற்று. இதனால் ஸர்வேச்வரனும் வேதங்களுக்குக் கர்த்தாவல்லன் என்பது விளங்கிற்று; வைதிகர்களுங் கூட இதைப் பற்றி சங்காகளங்கம் வஹித்திருக்கக் கூடும் (அதாவது) எந்த சப்தராசியும் ஒரு கர்த்தாவோ வக்தாவோ இல்லாமல் ஆவிர்ப்பவிக்க இயலாதாகையால் விஸ்தாரமான இதிஹாஸ புராணாதிகளை யெழுதிவைத்த மஹர்ஷிகள் தாமே வேதங்களையும் எழுதிவைத்திருப்பார்கள் என்று. நானுங்கூட இளமையில் இங்ஙனே எண்ணியிருந்ததுண்டு; நான் தெளிந்த விதத்தை இங்கு விவரிக்கிறேன். வேதங்கள் ஒரு நூறு வருஷங்களுக்கு உட்பட்டகாலத்தில் அச்சேறிவருகின்றனவேயன்றி அதற்கு முன் இவற்றை ஏட்டிலெழுதிவைத்தவர்களுங்கூடக் கிடையாது. "ஒலைப்படாப்ரமாணம்" என்றே பூருவர்களால் வழங்கப்பெற்றுள்ளது. வேதத்திற்கு ஸ்வரம் முக்கியமானது. அந்த ஸ்வர ஸந்நிவேசம் வெகு ஆச்சர்யமாக அமைந்திருக்கின்றது; அந்த ஆச்சரியத்தை வேதமோதினவர்களுங்கூட ஆழ்ந்து அறிந்திலர் என்றும் சொல்லலாம். கேண்மின்.

## — வேதசப்தராசிகளின் அற்புதத்தன்மை —

135. வேதத்தில் பல லக்ஷக்கணக்கான பதங்கள் வருகின்றன; அவற்றுக்கு அமைந்திருக்கும் ஸ்வரங்கள் நியதங்களாய் ஓரிடத்திலும் பிறழாமலும் ஒரே பதத்திற்கு [ஸமபந்தமோ நிகந்தமோ எதுவானாலும்] அர்த்த பேதத்தாலும் நிமித்த பேதத்தாலும் அமைந்த ஸ்வர பேதமும் ஓரிடத்திலும் பிறழாமலும் பூமண்டலம் முழுவதும் ஸமரூபமாக ஓதப்பட்டு வருவதை நோக்கினால் இது ஒரு புருஷனுடைய க்ருதிக்கு விஷயமாகக் கூடியதன்று என்பது ஸ்பஷ்டமாக விளங்கும். ஆகாசவாணியென்று ஒன்று சொல்லுவதுண்டே; அதேபோல வேதராசிகளும் ஆகாசத்திலே தோன்றிப் பரமபுருஷனால் க்ரஹிக்கப்பட்டிருக்கவேணுமேயல்லது பரம புருஷனுக்குங் கூட இந்த சப்த ஸந்தர்ப்ப ஸங்கலனம் ஸாத்யமன்று என்று துணிந்து கூறுவேன். மானிடர்க்கு ஸஹஜமான இருள் துயக்கு மயக்கு மறப்பு முதலான எவ்வகைக்குற்றமுமற்று விளங்கா நின்ற வேதங்கள் அனந்தங்களென்பது காடகச்ருதியிலுள்ள பரத்வாஜோபாக்கியானத்தினால் நன்கு விளங்கும். தேவேந்திரனருளால் முந்நூறு ப்ராயம் ஜீவிதம் பெற்று அந்நாட்கள் முழுதும் வேதமேயோதின பரத்வாஜ மஹர்ஷி முந்நூறு வருஷகாலம் ஓதினதெல்லாம் மூன்று மலைகளாகக் காட்டப்பட்ட வேத ராசிகளில் மூன்று முஷ்டிமாத்திரமேயென்று முடிவுபெற்றுள்ளது. அந்த ப்ரகரணத்தில் தான் "அநந்தாவை வேதா:" என்றோதப்பட்டது. ஆக நித்யமாய் அபௌருஷேயமாய் அதஏவ நிர்தோஷகந்தமாய் அவிச்சிந்ந பரம்பராப்ராப்தமாய் அனந்தமாயிருப்பது வேதத்தின் மஹிமை *

— திருமங்கையாழ்வார்க்குச் சார்பாக வேதமும் காட்டுதல் —

**135.** க்ருஷ்ணயஜுர்வேதத்தில் ஆறுவது காண்டம் ஆரம்பிக்கும் போதே 'கோ ஹி தத் வேத? யத்யமுஷ்மிந் லோகே அஸ்தி வா ந வேதி" என்று ஓதப்படுகிறது. "பரலோகத்தில் இருக்கிறதோ இல்லையோ, யார் கண்டார்?" என்கிறது. இதுவும் பரலோகத்திலில்லாமையைச் சொல்லுகிறதன்று; த்ருஷ்ட புருஷார்த்தமொன்றின் புகழ்ச்சியிலே நோக்காக இங்ஙனே ஓதிற்றென்று வியாக்கியானம் செய்கிறார்கள். வேதாந்த தேசிகனுடைய பரமதபங்க ரஹஸ்யத்திலும் இது காணலாம் *இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன்* என்றும் *அண்டர்கோனணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே* என்றும் *ஸத்யம் சபே வாரணசைலநாத! வைகுண்ட வாஸேபி ந மேபிலாஷ:" என்றும் ஆழ்வாராசாரியர்கள் சொல்லுவது மாத்திரமன்றிக்கே, ஸ்ரீராம திவ்ய சரிதாம்ருதத்தின் சுவடறிந்த திருவடியும் [மாருதியும்] கூட "ஸ்நேஹோ மே பரமோ ராஜந்! த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:. பக்திச்ச நியதா வீர! பாவோ நாந்யத்ர கச்சதி." என்னக் காணநின்றோம். சொன்னதோடு மட்டுமல்லாமல் "ஸோத்ரைவ ஹந்த! ஹநுமாந் பரமாம் விமுக்திம் புத்த்யாவதூய சரிதம் தவ ஸேவதேஸௌ" என்று கூரத்தாழ்வானருளிச் செய்தபடி இவ்விபூதியிலேயே யன்றோ வஸிப்பது .... ... .... .... *

— மஹாப்ரபுவுக்கு மந்திரியுரைத்த மோக்ஷம் —

**136.** ஒரு மஹாப்ரபு அத்வைத ஸம்பிரதாயத்தில் பரிபூர்ண ஜ்ஞானமுடைய தனது மந்த்ரியிடத்தில் 'மோக்ஷமாவது என்ன? என்பதை எனக்கு விளக்கமாகச் சொல்லவேணும்' என்று கேட்டாராம். அந்த மந்த்ரி 'இவருக்கு நாம் சாஸ்த்ரங்கொண்டு காட்டுவதைவிட அநுபவத்தையிட்டே காட்டி விடுவது நன்று' என்று நினைத்து ஒருபாயஞ் செய்தார். அதாவது, அந்த மஹாப்ரபு சயனக்ருஹத்தில் படுத்து உறங்கின பிறகு அந்த அறையை வெளியே பூட்டிக்கொண்டு அங்கேயே படுத்துக்கொண்டார் மந்த்ரி; மஹாப்ரபு மலஜலபாதையை விஸர்ஜனம் செய்ய வேண்டி யெழுந்து கதவைத் திறக்கப் பார்த்தபோது கதவு திறக்கமுடியாமற் போகவே வெளியில் பூட்டப்பட்டிருப்பதை யறிந்து கதறத் தொடங்கினர். வெளியே கிடக்கிற மந்திரி தாம் ஒன்றுமறியாதவர்போல, "கதவு பூட்டிக் கிடக்கிறதே, யார் பூட்டினார்களோ தெரியவில்லையே, இதோ பார்க்கிறேன்" என்று சொல்லி மாயஞ் செய்திருந்தார்; ப்ரபுவுக்கு தேஹபாதை பொறுக்க முடியாத நிலைமையாகிக் கூக்குரலிட்டு "பூட்டு திறக்கத் திறவுகோல் கிடைக்கவில்லை யென்றால் பூட்டை யுடைத்திடு; இனி என்னால் ஒரு நொடியும் பொறுத்திருக்கமுடியாது" என்று கத்த, மந்திரி உடனே கதவைத் திறந்து விட்டார்; ப்ரபு உடனே வெளி வந்து மலஜலபாதையைக் கழித்துக்கொண்டு அப்பாடா! என்றாராம். அப்போது மந்த்ரி அருகே வந்து, ப்ரபோ! இது தான் மோக்ஷமென்பது; இப்போது அப்பாடா! என்றீரே, என்ன ஸுகங்கண்டு இது சொன்னீர்? தேஹத்திலிருந்த பாதை தொலைந்ததிற் காட்டில் அபூர்வமான வொரு ஸுகம் வந்ததில்லையே; இருந்த பாதையின் நிவ்ருத்தியைத் தானே ஸுகமாகக் கருதுகின்றீர்; இதுபோலவே

பிறப் பிறப்பு மூப்புப்பிணித் துன்பங்களினின்று நாம் விடுபடுவதற்கு மேற்பட அபூர்வமாக ஒரு ஸுகமும் வருவதன்று; ஆத்யந்திக துக்க த்வம்ஸமே மோக்ஷமென்று கொள்வீர்' என்றாராம். "பாஷாணகல்பதைவ முக்தி:" என்கிற நையாயிகாதிகளுக்கும் இதுவே கருத்தாகத் தேறும்.

— விசிஷ்டாத்வைதிகள் கண்ட மோக்ஷம் —

137. ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தமோ வென்னில்; அபூர்வமாக வொரு மஹானந்தமநுபவிப்பதே மோக்ஷமென்பதாம்; ஆளவந்தார் "கதாஹமைகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்றருளிச் செய்தார். *ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்து அநுபவிக்கிற ஆனந்தம் அவரவர்களுக்கு ஆத்மைக வேத்யம். "வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ் ஐயைந்துமைந்தும்" என்னப் பட்ட திருப்பாவையில் *ஒருத்தி மகனாய்ப் பாசுரத்தில் * வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்* என்றது உயிரான வார்த்தை. வருத்தம் தீர்ந்ததோடு நில்லாமல் மகிழ்ந்து என்னும்படியான வொரு நிலைமையுண்மை காட்டப்பட்டது. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் (7—5—10) *வார்த்தையறிபவர்* என்ற பாட்டில் *போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரற நீக்கி* என்றிவ்வளவு சொன்னதற்கும் மேற்பட "தன் தாளின் கீழ்ச் சேர்த்து அவன் செய்யுஞ் சேமத்தை யெண்ணி" என்றருளிச் செய்திருப்பது நோக்கத் தக்கது.

— ஸ்ரீ ஹர்ஷ கவியின் அற்புதமான ஒருவாக்கு —

138. ஸ்ரீஹர்ஷகவி இயற்றிய நைஷத காவியத்தில் இரண்டாவது ஸர்க்கத்தின் முதல் ச்லோகம் வெகு அற்புதமாக அமைந்திருக்கின்றது நளமஹாராஜன் ஒரு தடாகத்திற்குச் சென்று ஹம்ஸபக்ஷி யொன்றைப் பிடித்துக்கொண்டான். அது தான்விடுபடுவதற்குப் பலவாறு முயன்றும் பயன் பெறவில்லை. அரசன்மனமிரங்குமாறு பலபேசி விடுபட்டது. அதைச் சொல்லுகிறார் மஹாகவி—*அதிகத்ய ஜகத்ய தீச்வராத்* என்கிற (2-1.) ச்லோகத்தினால். அதில் உத்தரார்த்தம்– ("வசஸாமபி கோசரோ நயஸ் ஸ தமாநந்தமவிந்தத த்விஜ:") என்பது. விடுபட்ட அந்த ஹம்ஸபக்ஷியானது வாசாமகோசரமான மஹானந்தத்தை யடைந்திட்டதாக இங்குச் சொல்லப்படுகிறது. இந்தச்லோகம் சிலேடையாகவும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஹம்ஸபக்ஷி விடுபட்டு இன்பமெய்தினது மாத்திரம் இங்குச் சொல்லப்பட்டிருக்கவில்லை ஒரு வேதாந்தி முக்திபெற்றுப் பேரின்பம் நுகர்வதும் இங்கு சப்த ஸந்நிவேச விசேஷங்களால் வெகு அழகாகக் காட்டப்பட்டிருக்கின்றது. 'விடுபட்டுப் பீடை தொலைந்தது' என்று இவ்வளவே சொல்லாமல் வாசாமகோசரமான ஆனந்த மடைந்தது என்றும் சொல்லியிருப்பது நல்ல தெளிவைப் பிறப்பிக்க வல்லது. *முக்திர் மோக்ஷோ மஹாநந்த:* என்றதையும் நினைப்பது. .... *

— மடாதிபதி யொருவரின் கதை —

139. ஒரு மடாதிபதி திவ்ய தேச யாத்திரை புறப்பட்டார். சிறந்த வொரு பண்டிதரை ஆஸ்தான வித்வானாக வைத்துக்கொண்டு திவ்யதேசங்கள் ஸேவித்து

வருகிறார். ஆங்காங்கு விசேஷ மரியாதைகள் செய்து பஞ்ச முத்திரை ஸாதித்து வருகிறார்கள். மடாதிபதி ஒன்றும் வாய் திறவாமலேயிருந்து வருகிறார். அது கண்ட ஆஸ்தான வித்வான் "ஸ்வாமிந்! அப்படிவாளாவிருந்திடக் கூடாது; தந்யோஸ்மி, க்ருதார்த் தோஸ்மி, அநுக்ருஹீதோஸ்மி" என்று கம்பீரமாக ஸாதிக்க வேணுமென்று ரஹஸி போதித்தார். அவரும் அப்படியே அநுஸந்தானம் செய்து கொண்டுவந்தார். தாயார் ஸன்னிதியில் ஸேவிக்கப் போனபோது, பிராட்டி ஸன்னிதியில் ஸ்த்ரீலிங்கமாகவன்றோ அநுஸந்திக்கவேணும் என்று நினைத்து "தந்யாஸ்மி, க்ருதார்த்தாஸ்மி அநுக்ருஹீதாஸ்மி" என்று திருமிடற்றோசையைப் பெருக்கி யநுஸந்தித்தார். பக்கத்திலிருந்த ஆஸ்தான வித்வான் மடாதிபதியை உறைக்கப் பார்த்தார்; அப்போது மடாதிபதி ஸாதிக்கிறார் - என்ன உற்றுப்பார்க்கிறீர்? பெருமாள் ஸன்னிதியில் சொன்னபடியே தாயார் ஸன்னிதியிலும் சொல்லி விடுவேனென்று பார்க்கிறீரோ? ஸ்த்ரீலிங்கபும்லிங்கபேதங்கூட அறியாதவனென்று நினைக்கிறீரோ? இதுகூட தெரியாமல் மடத்தை யாளுகிறேனென்று நினைத்து விட்டீர் போலும்! என்று உறுமுகிறார். ஸ்ரீமதே ராமாநுஜாய நம: என்கிறார்கள் சிஷ்யர்கள். *அஹோ! மோஹஸ்ய மாஹாத்ம்யம்* ... ... *

## —நந்திபுரவிண்ணகரத்தின் நலமான அநுபவம் —

140. திருக்குடந்தை ஸமீபத்தில் நந்திபுரவிண்ணகரமென்று ஒரு திவ்ய தேசம். நாதன்கோவில் என்று இத்தலம் வழங்கப்பெறும்; இதற்குப் பதிகம் பாடின திருமங்கையாழ்வார் (5—10—8) "மண்ணிலிது போலு நகரில்லை யென வானவர்கள்தாம் மலர்கள் தூய், நண்ணியுறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகர நண்ணுமனமே" என்றருளிச் செய்தார். நித்யவிபூதிநித்யவாஸிகளான நித்ய ஸூரிகளும் இத்தலத்தே போந்து 'இம்மண்ணுலகில் இத்திருப்பதிபோன்ற திருப்பதி வேறில்லை' யென்று புகழ்ந்துகொண்டு பரிசர்யைகள் பண்ணி இங்கேயே நித்யவாஸம் பண்ணிக் கொண்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அந்த வானவர்களைத் திருமங்கையாழ்வார் கட்கண்ணாலோ உட்கண்ணாலோ காணாமல் இங்ஙனே யருளிச் செய்திருக்கமாட்டார். இப்படி ஒரு திவ்ய தேசத்திலருளிச் செய்தது ஸகல திவ்ய தேசங்களுக்கு முபலக்ஷணமேயென்று கொள்ளக்கடவது. ..

## — கோயிலில் பட்டருடைய அநுபவம் —

141. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸூரயஸ் ஸ்ரஸ்தபந்தா: விமலசரமதேஹா இத்யமீ ரங்கதாம, மஹிதமநுஜதிர்யக் ஸ்தாவரத்வா: ச்ரயந்தே ஸுநியதம்" என்று நித்யஸூரிகளும் முக்தர்களும் முமுக்ஷுக்களும் மநுஷ்ய திர்யக்ஸ்தாவர ஜன்மங்களைக் கொண்டு திருவரங்கம் பெரிய கோயிலில் நித்யவாஸம் செய்வதாக அருளிச் செய்தார். இதுவும் மற்றுள்ள திவ்ய தேசங்களுக்கு முபலக்ஷணமேயாகும். பரமப்ராமாணிகர்களான ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இங்ஙனே யருளிச் செய்வதை அதிவாதமென்று நெஞ்சாலும் நினைக்கத் தகாது இவற்றை யடியொற்றியே கவிசக்ரவர்த்தியான கம்பரும் தமது ராமாயணத்தில் அயோத்திமாநகரை வருணிக்குமிடத்து "எவ்வுலகத்தோர் யாவரும் தவஞ்செய்தேறுவா னுதரிக்கின்ற, அவ்வுலகத்தோர் இழிவதற்கருத்தி

புரிகின்ற தயோத்திமாநகரம்'' என்றார். எல்லா உலகங்களிலுமுள்ள எல்லாராலும் தவம்புரிந்து பெற விரும்பப்படுகின்ற ஸ்ரீ வைகுண்டத்திலுள்ளாரும் இறங்கி வந்து இங்கே வஸிக்க விரும்பும் நிலம் திருவயோத்தி யென்றபடி.

— நம்முடைய பரமபாக்கியம் கேளீர்! —

142. அங்குள்ளாரும் இங்கு வந்து வஸிக்க விரும்புமிடத்தே உறைகின்ற நாம் எவ்வளவு பாக்யசாலிகளென்பதைப் பன்னியுரைக்க வேணுமோ? நாம் பிறந்து வளருமூரோ ஸாமான்யமானதன்று. தேவப்பெருமாள் திருவடிவாரத்திலுறையும் பாக்கிய முடையோம். திருமங்கையாழ்வார் ''வேள்வும் விழவும் வீதியிலென்று மறுதவூர்—நறையூர்'' என்று நாச்சியார்கோயிலென்னும் திருநறையூரைப் புகழ்கின்றார். அத்தலத்து வீதியில் என்று மருத விழவின் வைபவம் ஆழ்வார் திருவுள்ளத்திற்கே நிலமாகவேணும். உண்மையில் அந்த வைபவம் நம் தேவப்பெருமான் ஸன்னிதிக்கேயன்றோ ஏற்குமது இங்கு வாழ்வதொன்றே பேரின்ப வெள்ளமன்றோ. ''கழுதை மேய்த்தாகிலும் கச்சிவாஸம் பெறுய்'' என்கிற பழமொழியைத் திருத்தகப்பனர் பலகாலும் ஸாதிக்கக் கேட்டேன். .... *

— அபுநராவ்ருத்தியும் புநராவ்ருத்தியும் —

143. சாரீரகமீமாம்ஸையின் சரமஸூத்ரம் *அநாவ்ருத்திச் சப்தாதநாவ்ருத்திச் சப்தாத்* என்பது. இதனால் மோக்ஷலோகம் புக்கவர்களுக்கு இந்நிலத்தில் மீட்சியில்லை யென்று நிர்ணயிக்கப் படுகின்றது; இந்த நிர்ணயத்தை ஆழ்வார்களும் *மீட்சியின்றி வைகுந்தமாநகர்* *போயினர் பின்னையித்திசைக் கென்றும் புணைக் கொடுக்கிலும் போக வொட்டாரே* என்றிவை முதலான பாசுரங்களினால் வற்புறுத்தியுள்ளார்கள். அப்படியிருக்க அங்குள்ளாருமிங்கே வந்து பணிந்து களிக்கின்றார்களென்றால் இஃது எங்ஙனே பொருந்துமென்று பலர் கேட்பதுண்டு. இந்த சங்கையை வேதாந்திகளே யெடுத்துப் பரிஹரித்துள்ளார்கள். புநராவ்ருத்தியில்லை யென்றது கர்மநிபந்தனமான மீட்சியில்லை யென்றபடியத்தனை. தைத்திரீய-உபநிஷத்தில் *இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சாந* என்று ஓதியிருப்பதைக் குறிக்கொள்ளவேணும். ச்சாந்தோக்யத்திலும் ''ஸ ஸ்வராட் பவதி; தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி'' என்றோதிற்று. மற்றொருபநிஷத்திலும் *யேந யேந தாதா கச்சதி தேந தேந ஸஹ கச்சதி* என்றோதிற்று. இவற்றால் என்ன தெரிவிக்கப்படுகின்ற தென்றால் பரமபத நிலயனை பரம புருஷன் தன்னுடைய விபூதிவிஸ்தாரங்களைக் காண்பதற்குப் புறப்பட்டு வருவதுண்டு. அவனோடு கூட நித்ய முக்தர்களும் வருவதுண்டு. அப்பெருமானுடைய நியமனத்தைப் பெற்று இங்கே குணநுபவம் செய்து கொண்டிருப்பதுமுண்டு என்பது தெரிவிக்கப்படுகிறது

மேலே யெடுத்துக் காட்டிய உபநிஷத் வாக்யத்தில் [காமாந்நீ காமரூபீ] என்றதன் பொருளைத் தெரிந்து கொள்ளவேண்டும்; பொருளாவது, (காமாந்நீ) என்றவிடத்துக் காமசப்தம் *ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா* என்றவிடத்திற்போல கல்யாண குணவாசகமாய் குணநுபவத்தையே ஊணாகக் கொண்டவனாய் என்பது [காமாந்நீ] என்றதற்குப் பொருள். [காமரூபீ]

ஸ்வாபிமதமான உருவத்தைப் பரிக்ரஹித்தவனாகி யென்று பொருள். இங்கே (அநுஸஞ்சரந்) என்றது உயிரான வார்த்தை. பரம புருஷமநுஸ்ருத்ய ஸஞ்சரந் என்றும். பரமபுருஷஸ்ய ஆஜ்ஞாமநுஸ்ருத்ய ஸஞ்சரந் என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. ஏவஞ்ச நித்ய முக்தர்களுக்கு லீலாவிபூத்யநுபவம் ப்ராப்தமாகக் குறையில்லை யென்பது தேறிற்று. .... .... .... *

— வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ: —

144 தேவப் பெருமாளுடைய அநுபவத்திலே பழுத்த வேதாந்த வாசிரியர் "நிரந்தரம் நிர்விசதஸ் த்வதீயம் அஸ்ப்ருஷ்டசிந்தாபதம் ஆபிரூப்யம். ஸத்யம் சபே வாரணசைலநாத! வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ:" என்றார். இங்கு ஒரு மருமம் உணரத்தக்கதுண்டு; இந்த சுலோகம் இந்நிலத்திலிருந்து கொண்டு சொல்லப்படுவதாதலால் "வைகுண்ட யாநேபி ந மேபிலாஷ:" என்னவேண்டுமே யல்லது (வைகுண்டவாஸேபி) என்னத் தகுதியில்லை; இவ்விடத்து அநுபவத்தை விட்டு வைகுந்தம் செல்ல விருப்பமில்லை யென்றுதானே வார்த்தைப்பாடு இருக்கும்படி. இங்ஙனே சொல்லாமல் (வைகுண்ட வாஸேபி) என்று ஏன் சொன்னாரென்னில்; இதன் கருத்தைக் கேளீர்; நான் இவ்விடம் விட்டுப் பெயராதிருக்கவேணுமென்று மநோரதித்தாலும் நீ இங்கு வைக்கப்போகிறதில்லை; என்றேனுமொருநாள் கொண்டுபோகா தொழியாய்; தாராளமாகக் கொண்டுபோ; ஆனால் நான் அங்கே வஸிக்கப்போகிறதில்லை; *துரக விஹகராஜஸ்யந்தநாந்தோளிகாதிகளில் தேவரீரை ஆச்சரியமாக அநுபவிக்க அங்கிருந்து ஓடிவந்தே தீருவேன் என்பது ஆசிரியரின் உட்கருத்து. இது ப்ரமாணாநுக்ருஹீதமான பொருளே யென்பதை முன்னமே மூதலித்தோம். .... ... *

— அறுதொழிலந்தணர் பெருமை யுரைத்தல். —

145. திருமங்கையாழ்வார் தமது மூன்றாவது திவ்வியப்பிரபந்தமான திருவெழு கூற்றிருக்கையில் "அறுதொழிலந்தணர் வணங்குந்தன்மையை" என்றருளிச்செய்கிறார். இஃது எம்பெருமானைத் துதிக்கும் வாக்கியங்களில் ஒன்று; அறுதொழிலந்தண ரென்று ஷட்கர்ம நிரதர்களான பிராமணர்களைச் சொல்லி. அவர்களால் வணங்கப்படுபவன் எம்பெருமானென்று இதுவொரு தோத்திரமாக அமைந்தது. அறுதொழிலென்பதும் ஷட்கர்மமென்பதும் பரியாயம். அந்தணர்களுக்கு ஷட்கருமங்களாவன—அத்யயனம், அத்யாபனம், யஜநம், யாஜநம், தானம், ப்ரதிக்ரஹம் என்பவை. அத்யயனம்-வேதமோதுதல் அத்யாபனம்-வேதமோதுவித்தல். யஜனம் - வேள்வி செய்தல் (யாகம் செய்தல்): யாஜநம் - யாகம் செய்வித்தல். தானம் - ஸத்பாத்திரங்களில் கொடுத்தல். ப்ரதிக்ரஹம் - ஸத்துக்கள் விரும்பிக் கொடுப்பவற்றைக் கொள்ளுதல். ஆக இவையாறும் ஷட்கருமங்கள் [அறுதொழில்கள்] எனப்படும். இவற்றுள் இக்காலத்து அந்தணர்களான நாம் தானம் செய்வதையும் ப்ரதிக்ரஹம் கொள்வதையும் வைத்துக்கொண்டிருக்கிறோமேயல்லது அத்யயந-அத்யாபன-யஜன-யாஜனங்களைக் கொண்டிருக்கிறோமாவென்று பார்த்தால் இல்லையென்றே சொல்லவேணும். ஆனாலும் "வேதேஷு பௌருஷம் ஸூக்தம்" என்றபடி வேதங்களில் புருஷஸூக்தம் சிறந்ததாகையாலே அதையாவது ஓதி அத்யயனக்கடனை ஒருவாறு தீர்த்துக்

கொண்டோமாவோம். "யஜ—தேவபூஜாயாம்" என்கிற தாதுவின்படி பகவதாராதனமே யஜ்ஞமாகையாலே நாமுண்பதை அவனுக்குக் கைகாட்டி இதனாலே யஜ்ஞக்கடனையும் தீர்த்துக்கொண்டோமாவோம். ... .... *

— சாஸ்த்ரம் சொன்ன துர்ப்ராஹ்மணத்வம் —

146. "யஸ்ய வேதச் ச வேதீ ச விச்சித்யேதே த்ரிபூருஷம். ஸ வை துர்ப்ராஹ்மணோ ஜ்ஞேயஸ் ஸர்வகர்ம பஹிஷ்க்ருத:" [யாவனொருவனுக்கு வேதமும் வேள்வியும் மூன்று தலைமுறை இல்லாதபடி விச்சின்னமாய் விடுகிறதோ, அவன் எந்த கருமத்திற்கும் அதிகாரியல்லாதபடி துர்ப்ராஹ்மணனென்று பழிக்கப்படுகிறான்] என்று பிரமாணமிருப்பதால் நாம் வேத வேள்விகளை ஸர்வாத்மநா வஞ்சித்துவிடலாகாது: யதாசக்தி இவற்றில் அந்வயித்தே ஆகவேண்டுமென்று விஜ்ஞாபிக்கிறேன். ஆழ்வார்கள் திவ்ய தேச வாஸிகளை வருணிக்கும் போது "நல்ல வெந்தழல் மூன்று நால்வேதம் ஐவேள்வியோடாறங்கம் வல்லவந்தணர் மல்கிய நாங்கூர்" என்றும், "அங்கமாறைந்து வேள்வி நால் வேதமருங்கலை பயின்று. எரிமூன்றும் செங்கையால் வளர்க்கும் துளக்கமில்மனத்தோர் திருக்கண்ணங்குடி" என்றும், "தெருள்கொள் நான்மறை வல்லவர் பலர்வாழ் சிரீவரமங்கலநகர்" என்றும் அருளிச்செய்கிறார்கள். இக்காலத்திற்போல பாஷாந்தரப் படிப்பும் உத்யோகங்களும் வியாபாரங்களும் அக்காலத்தில் அந்தணர்களுக்கில்லாமையாலே வேதாத்யயனமும் அங்காத்யயனமும் கர்மாநுஷ்டானமும் வீறுபெற்றது. அக்காலம் இனி வரப்போகிறதோ? கனவிலும் வாராது. ... *

— வேதாத்யயனத்தின் அருமைபெருமைகளைப்பற்றி. —

147. "அஷ்டவர்ஷம் ப்ராஹ்மணமுபநயீத" என்றபடி கர்ப்பாஷ்டமமாகிய ஏழாவது பிராயத்தில் உபநயனத்தைப்பண்ணி உபாகர்மமான பிறகு வேதமோதத் தொடங்கினால் ஆறேழு வருஷத்தில் க்ரமாந்தம் அத்யயனம் செய்து முடிக்கலாம். நாற்பத்துநான்கு பிரச்னங்கள் கொண்ட ஸப்தகாண்ட ஸம்ஹிதையும் முப்பத்தாறு பிரச்னங்கள் கொண்ட ப்ராஹ்மணபாகமுமாகிய எண்பது பிரச்னங்களை ஓதுவதென்று வைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஸப்தகாண்டங்களுக்கு ஸம்ஹிதையை மட்டும் ஓதினால் அதைத் தரிப்பது சிரமம், பகவத் கைங்கரியத்திற்கும் உதவாது. ஸம்ஹிதைக்குமேல் பதம், க்ரமம், ஜடை, கனம் என்றிவை ஏற்பட்டிருக்கின்றன. இவற்றுள் ஜடையும் கனமும் ஸபாரஞ்ஜனமாகும், க்ரமந்தான் பகவத் கைங்கரியத்திற்குப் பெரும்பான்மையாக உதவுமது. க்ரமம் திடப்படுவதற்காகப் பதம் ஓதவேண்டியதும். அவசியமாகிறது பலர் பதமோதாமல் ஸம்ஹிதையோடு க்ருதக்ருத்யர்களாய்விடுவதுண்டு. (பதமோதாத பாவமே) என்று அவர்கள் ஏசப்படுவர்கள். பதபாடமோதாவிடில் பல பரிபவங்கள் நேரும்; பதமோதிவிட்டால் க்ரமத்தில் அதிக ச்ரமம் ஏற்படாது. ஆனாலும் க்ரமத்தையும் ஒரு ஸம்வத்ஸர காலமாவது குருமுகமாக அதிகரித்தேயாகவேண்டும். இதற்குமேல் வர்ணக்ரம சிக்ஷையும் ப்ராதிசாக்யாதி லக்ஷண சிக்ஷையும் செய்யவேண்டியதுண்டு. "க்ரமாந்தம் நிருடியாகச் சொல்லவல்லவர்கள்" என்று ப்ரக்யாதி பெற்றவர்களை இக்காலத்திலும் பெரும்பான்மையாகவே காண்கிறோம். வேதபாஷ்யங்களில் பரிச்ரமப்படுவாருமுளர் இந்த பாக்யம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மிகக் குறைவு ...*

— ஆசார்யபுருஷரொருவருடைய ஸித்தாந்த ஸ்தாபனம் —

148. மஹாகுலப்ரஸூதரான வொருவர் இளமையில் கல்வியொன்றும் கற்காமலே காலங்கழித்துவிட்டார்; அதனால் சிஷ்யர்கள் விரும்பியழைத்தாலும் எங்கும் போகாமலேயிருந்துவந்தார். நிர்ப்பந்தமாய் சிஷ்யஸஞ்சாரம் புறப்பட நேர்ந்தது. பண்டிதரான வொருவரைப் பரிசாரகராக அமைத்துக்கொண்டு அவர் கொடுத்த தைரியத்தினால் ஸஞ்சாரம் புறப்பட்டுவிட்டார். அந்த பரிசாரகர் இவர்க்கு திட்டம் செய்திருந்ததென்னவென்றால்; நீர் திருப்பரிவட்டமும் திருமண் காப்பும் திருமணித்தாவடங்களுமாய் வாசல்திண்ணையில் பெரியதொரு ஸ்ரீ கோசத்தை ஸரஸ்வதீபீடத்தில் அமர்த்திக் கடாக்ஷித்துக்கொண்டிரும்; யாராவது வந்து ஏதாவது கேட்டால் நான் பார்த்துக்கொள்ளுகிறேனென்றார். ஆசார்ய ஸ்வாமி அதற்கிசைந்து நல்லவேஷம்பூண்டு ஸ்ரீபாஷ்யகோசத்தை மிக்க ஊக்கம் தோற்றக் கடாக்ஷித்துக் கொண்டிருக்கிறார். ஒருநாள் ஒரு வித்வான் அருகே வந்து தெண்டனிட்டு "கோயம் க்ரந்த:?" என்றார். அப்போது பரிசாரகர் மடைப் பள்ளியில் தளிகைசெய்து கொண்டிருக்கிறார்; ஆசார்யர் பாதுகைசாத்திக்கொண்டு உள்ளேசென்று "அப்பா! ஒருவர் வந்து கோயம் க்ரந்த:? என்று பூர்வபக்ஷம் பண்ணிவிட்டார்; என்னசொல்லுவது? என்றார். 'ஸ்ரீபாஷ்யக்ரந்த:' என்று சொல் லும் என்றார். உடனே ஆசார்யர் வாசலிலே வந்து "நீர் கோயம் க்ரந்த:? என்று பூர்வபக்ஷம் பண்ணினீர்; நாம் ஸ்ரீபாஷ்யக்ரந்த: என்று ஸித்தாந்தம் பண்ணிவிட் டோம், போம் என்றார். அதற்குமேல் அந்த பண்டிதர் 'கேந நிர்மித:?' என்றார். உடனே பாதுகை சாத்திக்கொண்டு உள்ளேசென்று 'அப்பா! கேந நிர்மித:? என்று மறுபடியும் பூர்வபக்ஷம் செய்கிறான்பாவி; என்னசொல்லுவது? என்றார். பாஷ்யகாரேண நிர்மித: என்றுசொல்லும் என்றார் பரிசாரகர். உடனே ஸ்வாமி வாசலிலேவந்து 'ஓய்! நீர் கோயம் க்ரந்த: என்று பூர்வபக்ஷம்பண்ணினீர்; ஸ்ரீ பாஷ்யக்ரந்த: என்று நாம் ஸித்தாந்தம் பண்ணினோம்; மறுபடியும் கேந நிர்மித:? என்று பூர்வபக்ஷம் பண்ணினீர்; பாஷ்யகாரேண நிர்மித: என்று ஸித்தாந்தம் பண்ணிவிட்டோம் போம்-என்றார். பிறகு கோ விஷய:? என்றார் பண்டிதர்; ஸ்வாமி பாதுகை சாத்திக்கொண்டு உள்ளேசென்று 'அப்பா! அந்த படுபாவி பின்னையும் பூர்வபக்ஷம் பண்ணுகிறான், கோ விஷய:? என்கிறான், என்ன சொல்லுவது? என்றார். வேதாந்தவிஷய: என்று சொல்லும் என்றார் பரிசாரகர்; ஸ்வாமி வாச லில்வந்து 'ஓய்! நீர் கோயம் க்ரந்த:? என்று பூர்வபக்ஷம் பண்ணினீர்; ஸ்ரீபாஷ்ய க்ரந்த: என்று நாம் ஸித்தாந்தம் பண்ணினோம்; அதற்குமேல் கேந நிர்மித:? என்று பூர்வபக்ஷம்பண்ணினீர்; பாஷ்யகாரேண நிர்மித: என்று நாம் ஸித்தாந்தம் பண்ணினோம்; பின்னையும் நீர் கோவிஷய: என்று பூர்வபக்ஷம் பண்ணினீர்; வேதாந்தவிஷய: என்று நாம் ஸித்தாந்தம்பண்ணிவிட்டோம் போம் என்றார். பண்டிதர் மேன்மேலும் கேட்டுக்கொண்டிருந்தார்; இக்கதை இவ்வளவுபோதும்.

— ப்ராசீன வைதிகருடைய பரிஹாஸயுக்திமை

149. ஒரு வைதிகர் தமது திருமாளிகை வாசலில் தென்னைமரம் வைத்து வளர்க்கிறார். அதில் நிறையக் காய்கள் காய்த்துக் குலைகள் நிரம்பியிருக்கையில் ஒருநாளிரவு கள்ளன் மரத்தின்மீதேறிக் காய்களைப் பறிக்கிறான். காய்கள் கீழே

விழுந்து ஓசைப்படுவதைக்கேட்ட வீட்டுக்காரவைதிகர் வெளியில்வந்து பார்த்துக் கள்ளனைப் பிடிப்பதற்காகப் போலீஸ் ஸ்டேஷனுக்குப்போய் சேவகனை யழைத்து வர வெண்ணினார். ஸ்டேஷனோ மூன்றுமைல் தூரத்திலிருக்கிறது. போய்வருவதற்குள் கள்ளன் மரத்தில் நின்று மிறங்கிக் காய்களையெடுத்துக்கொண்டு போய் விட்டால் என்னபண்ணுவதென்று ஆலோசித்த வைதிகர்க்கு ஓர் உபாயம் தோன்றிற்று; மரத்தடியைச்சுற்றி ஸ்ரீபாததீர்த்தத்தைத் தெளித்துவிட்டால் அதை மிதித்துக்கொண்டு கள்வன் கீழே யிழியமாட்டானென்று துணிந்து உள்ளேபோய் பெரியோர்களின் பாதுகைகளிலிருந்து ஸ்ரீபாததீர்த்தம் சேர்த்துக்கொணர்ந்து "இது ஆசார்யர்களின் ஸ்ரீபாததீர்த்தம்" என்று உரக்கச் சொல்லிக்கொண்டே தெளித்துவிட்டு, சொம்பை வாசல் திண்ணையில் வைத்துவிட்டு ஸ்டேஷனுக்கு ஓடினார். அங்கு உறங்கிக்கொண்டிருந்த அதிகாரிகளை யெழுப்பிச் செய்திசொல்லி உடனே கள்ளனைப்பிடிக்க வாருங்களென்று அழைக்கிறார். சுவாமிகளே! இது வரையில் கள்ளன் ஓடிப்போயிருப்பானே யென்கிறார் அதிகாரி. அதற்கு வைதிகர் சொல்லுகிறார்—அய்யா! நானென்ன அசடா? பைத்தியமா? பெரியாருடைய ஸ்ரீபாத தீர்த்தத்தையன்றோ நான் மரத்தடியைச்சுற்றித் தெளித்துவிட்டு வந்திருக்கிறேன்; அதை அவன் காது கேட்கும்படி உரக்கவும் சொல்லிவிட்டன்றோ வந்திருக்கிறேன். அவன் எப்படி யிறங்கமுடியும்? ஸ்ரீபாததீர்த்தத்தில் கால்படாமல் இறங்கமுடியாதே; வாருங்கள்; விரைந்து புறப்படுங்கள் என்கிறார் வைதிகர். அதிகாரிகள் "இப்படியும் ஒரு அசடுண்டா?" என்று சிரித்துக்கொண்டே 'நாங்கள் பின்னால் வருகிறோம்' நீர்போம் என்று சொல்லியனுப்பிவிட்டார். வைதிகர்வந்து பார்க்கிறார்; தேங்காய்களோடு திருடன் போய்விட்டான்; திண்ணையில்வைத்த சொம்பையும் கொண்டு போய்விட்டானென்றறிந்த வைதிகர் 'ஐயோ! ஸ்ரீபாத தீர்த்தத்தைப் பாழாக்கி விட்டானே பாவி!' என்று கதறுகின்றார். இத்தகைய வைதிகர்கள் இக்காலத்திலுமிருப்பரோ! .... .... ....

## — திருந்நீங்காட்டுவதைத் தீர்த்தக நீவியர் பெரியார் —

150. வைதிக வுலகுக்குப் பயன்படுமாறு வெளிவரும் மாதாந்தப் பத்திரிகைகள் மிகச் சிலவே. அவற்றுள் ஒன்றான ஸ்ரீரங்கநாத பாதுகா பத்திரிகையைப் பற்றி இங்குச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன்: இப்பத்திரிகை ஸ்ரீமத் ஆண்டவன் அநுக்ரஹத்தினால் வெளிவருவதென்பதை உலகமறியும் வர்த்தமான ஸ்ரீமதாண்டவன் மஹா ஜ்ஞான நிதி யென்பதை அடியேன் பலகால் வெளியிட்டிருக்கிறேன். உண்மையில் உபயவேதாந்த ப்ரவர்த்தகசார்யரென்கிற விருது இந்த ஸ்வாமிக்கு மிக ஏற்கும். தாம் அநுக்ரஹித்து நடத்திவரும் பத்திரிகையில் எவ்விதமான பிழையும் புகாதபடி அவதானங்கொள்ள வேண்டிய பொறுப்பு ஸ்வாமியைச் சேர்ந்தது. இதைச் சில ஸமயங்களில் நேரிலும் விஜ்ஞாபித்திருக்கிறேன். "இனி நானே நேரில் கவனித்துக் கொள்ளுகிறேன்; கட்டுரைகளையும் நானே பெரும்பாலும் எழுதியனுப்பப் பார்க்கிறேன்" என்று திருவுள்ளமுகந்து ஸாதித்தருளினர்.

ப்ரக்ருதம் 15–6–70ல் வெளிவந்த ஸாதாரணஹூ ஆனி மாதப்பத்திரிகையை இப்போது கையில் வைத்துக்கொண்டு சில பல விண்ணப்பங்கள் செய்கிறேன். "ஸ்கா லித்யே சாஸிதாரம்" என்று தேசிகனருளிச் செய்த முறையில் அன்று அன்று அன்று. அதற்கு அதிகாரியுமல்லேன். "செய்வன திருந்தச் செய்" என்பதில் நெடுநாளாகவே மிகவுக்க முடையோனடியேன். அபரிமிதமான பணச்செலவு செய்து நிகழ்த்துங்காரியம் ஒழுங்காக அமைய வேண்டுமென்பதொன்றே முக்கியமான நோக்கமெனக்கு.



— அச்சுப்பிழைகளைப்பற்றி அறிவிக்கமாட்டேன் —

151. பதிப்புகளில் அச்சுப்பிழைகள் நேர்ந்துவிடுவது அநிவார்யம். ஆனால் அப்பிழைகள் அளவு மீறி ஸம்பவிக்கப் பார்ப்பது அழகியதாகுமா? விஷய விந்யாஸங்களிலும் விசேஷித்து அவதானம் வேண்டும். இக்காலத்தில் பத்திரிகை வாசிப்பவர்கள் நாளுக்குநாள் அதிகப்பட்டு வருகிறார்கள். பெண்மணிகளுங்கூட உபயோகமடைந்து வருகிறார்கள். அவர்கள் குறைகூற வொண்ணாதபடி யிருக்கவேண்டும். இப்போது அடியேன் இவ்விஷயத்தில் லேகினியைச் செலுத்த எழுந்தபடியால் கண்ணில்பட்ட விஷயங்களினால் நெஞ்சில் தோன்றின குறைகளை விநயத்துடன் விஜ்ஞாபிக்கிறேன். இவற்றைக் கடாக்ஷித்தருளி ஆண்டவன் திருவுள்ளம் உகக்குமேயன்றி வெறுப்படையாது, சீற்ற முறாது. அமுதனார் "இன்றவன் வந்திருப்பிடம் என்றனிதயத்துள்ளே தனக்கின்புறவே" என்றருளிச்செய்த கட்டளையில் ஸ்ரீமதாண்டவனுக்கு எவ்விதயத்துள்ளே தனியிருப்பிடமொன்று உண்டென்பதை "நானுமவனுமறிதும்" என்ற ஆண்டாள் ஸ்ரீஸூக்தியின்படியே அவருள்ளமும் என்னுள்ளமுமேயறியும்.

— ஆழ்வானை பட்டராக மருண்டது —

152. ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரார்த்த ஸங்க்ரஹம் என்பது முன் தொடர்ச்சியாக அச்சாகி வருகிறது; இதில் (பக்கம் 5.) "ஆயினும் நித்ய வஸ்துக்களுக்கு ஈச்வரன் எப்படிக் காரணமாவான் என்றால்" என்று தொடங்கும் வாக்யச்ரேணியில் "ப்ரமாணங்களிலேயே அறியப்படுகின்றது" என்றெழுதிவிட்டு, இதற்கு ஸம்வாதமாக பட்டர் ஏதோ ஸாதித்திருப்பதாக வரையப்பட்டுள்ளது ஸ்வாமியின் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரதாந ப்ரதிதந்த்ராதிகாரத்தில்

"இவ்வர்த்தத்தை " இச்சாத ஏவ தவ விச்வபதார்த்த ஸத்தா "
என்ற சுலோகத்தாலே அபியுக்தர் விவேகித்தார்கள்"

என்றுள்ளது. அதைத்தான் பாதுகை எழுதியுள்ளது. தேசிகன் எடுத்துக்காட்டின சுலோகம் கூரத்தாழ்வானுடையதே யன்றி பட்டருடையதல்ல இவ்

விஷயத்தை பட்டர் ஸாதித்திருக்கவுமில்லை. *இச்சாத ஏவ* என்று ஸ்வாமி யுதாஹரித்த ச்லோகம் மேலே ஸித்தோபாய சோதநாதிகாரத்திலும், மீண்டும் மூலமந்த்ராதிகாரத்திலும் உபாத்தமாகியுள்ளது. ஆக மூன்றிடங்களில் இரண்டிடத்தில் மட்டும் அபியுக்தர் அருளியதாகக் காட்டப்பட்டது. மூன்றுமிடத்தில் *"இச்சாத ஏவ தவ விச்வபதார்த்த ஸத்தா* என்கிறபடியே" என்றுள்ளது. பாதுகையிலும் (பெரியோர்கள்) என்று தேசிகோக்திச்சாயையிலே எழுதியிருக்கலாம்.

— ஆண்டவன் அவஹிதராகாதது அவகாசக்குறைவினால் —

153. "பட்டர் என்றது தவறாகவேயிருக்கட்டும்; அப்படியெழுதிவிட்டதனால் என்ன குடிகெட்டுப்போய்விட்டது?" என்று ப்ரமாணசரணர்கள் கோபிக்க முயலார்கள். வைபரீத்ய மென்பது இன்னதில் இருக்கலாம், இன்னதில் இருக்கலாகாது" என்று யாரும் நியந்த்ரணம் செய்திருக்கவில்லையன்றோ? ஸ்ரீமதாண்டவன் இதைக் கடாக்ஷித்தருளியிருந்தால் திருத்தம் வெளியிட நியமித்தே யிருப்பர். பல ஜோலிகளிலீடுபட்டிருக்கு மாண்டவனுக்கு இதையெல்லாம் ஊன்றிக் கடாக்ஷித்தருள அவகாசமிராதென்றே நினைக்கிறேன். இஃது ஒன்றேயன்று; மேலும் பல விஷயங்களை விவரிக்கிறேன்.

— எம்பெருமானுடைய த்ரிவிதகாரணத்வ நிருபணம் —

154. அடுத்தபடியாக "காரண மென்பது நிமித்தம் உபாதானம் ஸஹகாரி என்று மூவகைப்படும்" என்று ப்ரதிஜ்ஞை. இது அழகியதே. உடனே இதை உபபாதிக்கும் வழி வேதாந்தமார்க்கத்திற்கும் க்ராந்திக சைலிக்கும் சிறிது மிணங்கியதன்று; ஸ்வாமி தேசிகன் அச்யுதசதகத்தில் (ப்ராக்ருத பாஷையில்) *புரிஸபஹுாவஸரீரோ....* (சாயை) *புருஷப்ரதாந சரீரோ புவநாநாம் பவஸி அச்யுத! உபாதாநம், நிஜஸங்கல்பஸநாத: வஹஸி நிமித்தத்வமபி அத்புதசக்தி:* என்றருளிச் செய்த வொரு ச்லோக ரத்னத்தைச் சிந்தனை செய்துகொண்டு அதே வழியில் இரண்டே வரியில் பெண்களும் பேதைகளுமறியும்படி எளிதாக எழுதியிருக்கலாம். "*பஹு ஸ்யாம்* என்கிற ஸங்கல்ப விசிஷ்ட வேஷேண நிமித்த காரணமாகிறான்; நாமரூப விபாகயோக்யதையின்றிக்கே தன்னோடே கூடிக் கிடக்கிற ஸூக்ஷ்ம சேதநாசேதந விசிஷ்ட வேஷேண உபாதாநகாரணமாகிறான்; ஜ்ஞானசக்த்யாதி விசிஷ்டவேஷேண ஸஹகாரி காரணமுமாகிறான்";— என்று இங்ஙனே யெழுதியிருக்கவேணும்.

— "தான் அது—ப்ரவேசித்து" —

155. "ஸ்ருஷ்டி முதலானவைகளில் தனக்குத் துணையாக காலம் முதலிய தத்வங்களில் தான் அது ப்ரவேசித்து அவைகளை உபயோகப்படுத்திக் கொள்வதால் அவனே ப்ரபஞ்சத்துக்கு ஸஹகாரி காரணமுமாகிறான்" என்று அசடு பிசடாக எழுதியிருப்பதை ஸ்ரீமதாண்டவன் கடாக்ஷித்தருள வேணும். "அது ப்ரவேசித்து" என்றால் எது ப்ரவேசிக்கிறதென்று கேள்வி வரும். "இல்லையில்லை, இங்கு அச்சுப் பிழை; அநுப்ரவேசித்தென்று திருத்தவேணும்" என்றாலும் அசட்டு வாக்யமேயாமிது. வேதாந்த பரிசயமுள்ளவர் இப்படியெழுதார்

### — ப்ரும்ம ப்ரமம் தொலையவில்லையே —

156. மேலே (பக்கம் 6ல்) "தேர ஜோ ரூபியான ப்ரும்மமாகிய உன் பொருட்டு" என்றொரு வாக்யச்ரேணி உபக்ரமமாகிறது. இதில் (தேஜோ) என்பது (தேரஜோ) என்று அச்சுப்பிழையாக விழுந்திட்டதென்று கொள்வோம். அச்சுப்பிழைகள் ஆயிரம் என்று விட்டுவிடுவோம். உண்மையில் பக்கந்தோறும் பத்துக்கு மேற்பட்ட அச்சுப்பிழைகளுண்டு; அச்சினால் நேர்ந்த பிழைகளேயன்று; மருள் மூலமான பிழைகளே பலபல. மேலே உதாஹரித்த (தேரஜோ ரூபியான) என்றதற்கடுத்தபதம் (ப்ரும்மம்) என்பது. எழுதுகிறவர்களென்று கிளர்ந்தவர் களுக்கெல்லாம் இப்படியுமா ஒரு ப்ரமம்! எத்தனையோ வருடங்களுக்கு முன்பு மறைந்த சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் முதற்கொண்டு ஏறக்குறைய இருபது வித்வான்கள் இதைப்பற்றிக் கண்டிக்கப்பட்டிருக்கின்றார்களே. 'இவன் திருத்தியா நாம் திருந்துவது!' என்று ப்ரும்மம் ப்ரும்ம மென்றே பிடிவாதமாயெழுதிப் போய்ச் சேர்ந்தவர்கள் பலர்; ஜீவித்திருப்பவர்களும் பலரே. ப்ரஹ்ம என்கிற வட சொல்லில் இல்லாத உகரம் தமிழில் எப்படி வரும்? என்று ஆராய்ச்சி செய்ய மதியில்லையேயிவர்களுக்கு.

### — பெரியாழ்வாரும் பிரமகுருவும் —

157. ப்ரஹ்மகுரு என்கிற வடசொல்லைப் பெரியாழ்வார் தமது திருமொழி யில் மொழி பெயர்த்தருளியுள்ளார் *(பீதகவாடைப் பிரானார்) பிரமகுருவாகி வந்து* என்கிறார். அங்ஙனே சுத்தத் தமிழாக்கி யெழுத வேண்டா; வட சொல் இருக்கிறபடியே (ப்ராஹ்மணன்) இத்யாதி யெழுதுகிற ரீதியிலே ப்ரஹ்மம் என்றெழுத வேண்டாமா? இதே இடத்தில் மேலே நாலாவது வரியில் உபநிஷத் ப்ரமாண சரீத்தை யெடுத்துக் காட்டுகையில் "ப்ருஹ்மணே" என்றெழுதப் பட்டுள்ளது. ப்ரும்மம் ப்ரும்ஹமாயிற்று. ப்ரஹ்ம பதத்தில் அநுஸ்வாரம் எங்கிருந்து வருமையா? இதற்கு இலக்கணம் வாசிக்கவேண்டா, வியாகரணம் வாசிக்கவேண்டா. அடியேனுடைய நூல்களை அல்லும் பகலுமநுபவிப்பார்க்கு இத்தகைய மருள் எப்படி வந்ததோ தெரியவில்லையே!

### — அகாரத்திலும் ஏற்றுக்கொள்வது —

158. அதற்கடுத்த வரியில் "அகாரத்திலும் நாலாம் வேற்றுமையை ஏற்றுக் கொள்வது உசிதம்" என்றுள்ளது. இது சாஸ்த்ரஜ்ஞன் எழுதுகிற வாக்கியமா? ஏற்றுக் கொள்வதற்குக் கர்த்தா யாரென்று கேட்டால் ஆகாசத்தை நோக்கவேண்டியதே. "அகாரம் நாலாம் வேற்றுமையை ஏற்றுக் கொண்டிருப்ப தாகக் கொள்ள ப்ராப்தம்" என்றிப்புடையிலே யெழுதலாம். இந்த வாக்யராசி களைச் சிறிது ஊன்றிப்பார்க்குமிடத்து ஏதோ ஸம்ஸ்க்ருத வாக்யங்களைப் பார்த்து அவற்றின் மொழி பெயர்ப்பு முறையிலே எழுதிக் கொண்டு போவதாக நினைக்கலா கிறது. மருடமோ ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரார்த்த ஸங்க்ரஹம். ஆனால் அதற்கு மிதற்கும் ஒரு தொடர்புமில்லை. "தொகையில் வேற்றுமை உருபு கெடும் என்றர்த்தமுள்ள விதியின்படி" இத்யாதி வாக்யங்களை நோக்கும்போது மொழி

பெயர்ப்பின் வந்த அனர்த்தமிதுவென்று அறுதியிடப்படுகிறது. மொழி பெயர்ப்பின் அழகுகளைச் சிறிது காட்டக் காண்மின். வ்யுத்பத்திவைதேசிகத்வம்.

— மொழிபெயர்ப்புகளின் மாண்பு —

159. [தூமவ்யாபகோ வஹ்நி:] என்றெடுத்து மொழி பெயர்த்திருக்கிறாரொருவர். தூம மென்றால் புகை; வ்யாபகமென்றால் பரந்திருப்பது; வஹ்நியென்றால் நெருப்பு. நெருப்பைச் சுற்றிப் புகை பரந்திருக்கு மென்றபடி—என்று ஒருவர் எழுதினார். மற்றொருவரெழுதினார்—தூமவ்யாபகத்வமாவது—தூமஸமாநாதிகரண அத்யந்தாபாவ அப்ரதியோகித்வம். (அதாவது) புகைக்கு ஸமானமான ஆதாரமுண்டே, அது மிகவும் இல்லாமைக்கு ப்ரதிஸம்பந்தியாகாமை. [வஹ்நி வ்யாப்யோ தூம:] வஹ்ந்யபாவவதவ்ருத்தி: தூம: (அதாவது) நெருப்பினுடைய அபாவமுண்டே இல்லாமை, அதையுடைத்தாயிருப்பதிலே வ்ருத்தியில்லாமை. இதே ரீதியாய் எண்ணிலாத மொழி பெயர்ப்புகள் எழுதி யச்சிட்டிருக்கக் கண்டிருக்கிறோம். இவற்றால் பிறர் என்ன தெரிந்துகொள்ள முடியுமென்பது வேறு; எழுதினவர் எவ்வளவு தெரிந்து கொண்டிருக்கிறாரென்பது தெரிந்துகொள்ளமுடியாமலன்றோ இருக்கிறது. "அர்த்தம் புத்ர்வா சப்தாசநா" என்பது வெகு தூரத்திலிருக்கிறது. இத்தகைய ஜரத்கவாதி வாக்யங்களினால் யார் என்ன உபயோகமடைகிறார்களென்பதுதான் தெரியவில்லை.

— மாயக்கண்ணன் உணவுக்குப் படும்பாடு —

160. கீழே சில ஏடுகளைத் தள்ளிப் பார்த்ததில் "மாயக் கண்ணனும் உண்பதற்குப் பட்டபாடு" என மகுடமிட்ட ஒரு கட்டுரை காண்கிறது. அருளிச் செயல் மூலத்தையும் அர்த்தத்தையும் கொலை பண்ணுகிற கட்டுரையிது. கேவலம் பாண்டித்யமேயன்றிக்கே பரமாரஸிக்யமும் பொருந்திய ஸ்ரீமதாண்டவன் இதையெல்லாம் கடாக்ஷித்தருளி எப்படி ஸஹித்திருக்கிறாரென்று தெரியவில்லை. "செந்நெலரிசி சிறுபருப்புச் செய்தவக்காரம் நறு நெய் பாலால் பன்னிரண்டு திருவோணமட்டேன்.... எல்லாம் விழுங்கிட்டுப்போந்து நின்றான்" என்கிற பெரியாழ்வார் பாசுரம் கண்டு விவரிக்கப்படுகிறது. யசோதைப் பிராட்டியிடம் கண்ணனுடைய தீம்புகளைச் சொல்லி முறையிடுகின்ற ஓர் ஆய்ச்சியின் பாசுரம் இது. "நல்ல நெய்யை விட்டு அக்காரவடிசில் பண்ணிவைத்தேன்; சூடு ஆறிய பிறகு சாப்பிடவேண்டுமென்றிருந்தேன். அநியாயத்தைக் கேட்டாயா? உன் பிள்ளையிருக்கிறானே, இதை எப்படியோ தெரிந்துவைத்து சொட்டுகூட பாத்திரத்தில் மிகுதியில்லாமல் யாவற்றையும் விழுங்கிவிட்டானம்மா! என் மனஸ்ஸு என்ன தபிக்கிறது தெரியுமா?" என்றெழுதப்பட்டுள்ளது. தானுண்பதற்காகச் சமைத்து வைத்திருந்ததாகவும் அதைக் கண்ணன் விழுங்கிப்போய்விட்டதாகவும் அதற்காகப் பரிதாபப்படுவதாகவும் சொல்லுகிற ஆய்ச்சி திருவாய்ப்பாடியிலிருப்பளா? என்றாலோசிக்கவில்லையே.

— கோபியின் பரிதாபத்தினுண்மை —

161. இங்கு உண்மைப் பொருள் யாதெனில்; திருவாய்ப்பாடியில் திருவோண விழாக் கொண்டாட்ட மென்று ஒரு மஹோத்ஸவம் கோபிகளெல்

லாரும் தங்கள் தங்களில்லத்திலே நடத்துவதுண்டு: அயோத்தியில் அவதரித்த இராமன் தான் ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியாயிருக்கச் செய்தேயும் *ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயண பூஜை பண்ணினதுபோலத் திருவாய்ப்பாடியில் கண்ணபிரானும் நாராயண பூஜை செய்வன். அந்த விஷயம் நிற்க. கோபிகள் செய்து போருகிற திருவோண வழிபாட்டை இங்கு அறிந்து கொண்மின். திருவோணந்தோறும் செய்யவேண்டிய பூஜையை அப்போதப்போது செய்ய இயற்றியில்லாத வொரு கோபி பன்னிரண்டு திருவோணத்திற்காக ஒரு திருவோணம் அனுட்டிக்கமுயன்று பக்ஷ்யவர்க்கங்களைச் சமைத்து வைத்து ப்ராப்த ஸமயத்திலே திருவாராதனம் ஸமர்ப்பித்துக் கண்டருளப்பண்ண வேணுமென்றிருக்கையில் கண்ணபிரான் "ஸத்வாரகமாகக் கிடைக்கப்போகிற இந்த வழிபாடு நமக்கு அத்வாரகமாகவே கிடைக்கட்டுமே" என்று கருதித் தானே உட்கொண்டான். இதற்கு அந்த கோபி அந்தரங்கத: உகப்பவளே யொழிய வெறுப்பவள் அல்லள். பழிமொழிகளைக் கூறி முறையிடுதல் என்பது ஒரு வியாஜமாத்திரம். இந்த முறையீட்டை எவ்வளவோ அழகாக ரஸங்களுமிளங்கும் வகையிலே யெழுத வேண்டுமே. சூடு ஆறின பிறகு தான் வயிறுவளர்க்க வைத்திருந்ததாகவும், அதைக் கண்ணன் உண்டு விட்டதற்காகப் பரிதபிப்பதாகவும் எழுதுவது அந்தோ! சுவைக்கேடுகளில் தலையானதல்லவா? ஆண்டவன் இதை ஏன் கடாக்ஷிக்கவில்லை?

— கோபிகளறிந்த கண்ணபிரானுண்மை —

162. யசோதைப் பிராட்டி கண்ணனைக் கடிந்து பேசச் செய்தேயும் "மண்மகள் கேள்வன் மலர் மங்கை நாயகன் நந்தன் பெற்றமதலை அண்ணல்" என்றும் "சேடன் திருமறுமார்பன்" என்றும் ச்ரிய:பதித்வத்தைச் சொல்லுவதை விடுவதில்லை. இவன் செய்யும் தீம்புகளைச் சொல்லுகிற கோபிகளும் "சாளக்கிராமமுடைய நம்பி சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்" என்றன்றோ சொல்லுகிறார்கள். இப்படிப்பட்ட கட்டங்களிலே அருளிச் செயல்களை நிர்வஹிப்பது அற்புதமான மேதையுள்ளவர்களுக்கே உசிதமாகும். "நான் தின்பதற்கு வைத்திருந்ததை இவன் தின்றுவிட்டான், என் வயிற்றில் மண்ணைப் போட்டு விட்டான்" என்று பொடிகிற ஒரு கோபியைக் கற்பனை செய்வது அந்தோ! பரிதாபம்.

— சாப்பிட்டு— கூப்பிட்டு. —

163. அடியேன் ஒரு விஷயமெழுதத் தொடங்கினால் லோகோபகாரத்திற்குரிய பல விஷயங்களன்றோ இடையிடையே வந்து சேரும். மாயக்கண்ணன் கட்டுரையில் சாப்பிட்டு, சாப்பிட என்று பன்முறையும் எழுதப்பட்டுளது. இச்சொல்லின் உண்மைவடிவத்தை உணர்த்துகிறேன் கேண்மின். உண்பதை ப்ரஸாதப்படுதல் என்று பெரியோர் வழங்குவர். குருபரம்பராப்ரபாவம் முதலிய நூல்களில் இதை மிகையாகக் காணலாம். ப்ரஸாதப்படுதல் என்கிற அச்சொல்லில் (ப்ர) என்கிற உபஸர்க்கம் நீங்கிற்று. ஸாதப்படுதல் என்பது ஸாப்படுதல் என மருவிற்று. ஆகவே, (ஸாப்பட) (சாப்பட்டு) என்றுண்டேயொழிய (சாப்பிட்டு) என்று பகரத்தின்மேல் இகரமேறி வாராது. சாப்பீடு என்று பதமிருந்தால் சாப்பிட்டு என்னலாம்; சாப்பாடே தவிர சாப்பீடு இல்லை. கூப்பாடு கூப்பீடு என

இருவகைச் சொல்லுமுண்டாதலால் கூப்பிட்டு என்றும் சொல்லலாம், கூப்பட்டு என்றும் சொல்லலாம். சாப்பிட்டு என்பது ஸர்வாத்மநா அஸம்பாவிதம். இத்தகைய உத்போதனங்கள் விரைவில் ஸபலமாகுமென்று நாம் நினைத்துச் செய்வதன்று. ''காலோ ஹ்யயம் நிரவதிர் விபுலா ச ப்ருத்வீ'' என்ற பவபூதி பாஷிதத்தைக் கொண்டே நாம் பலபலவும் உணர்த்திவைப்பது. இத்தகைய உத்போதனங்கள் பிறர்க்கு நிலமன்று.

## — அருளிச் செயல்களுக்கும் சித்ரவதம் —

164. பாதுகைக்கட்டுரைகளில் அருளிச் செயல் மூலமுங்கூடக் கொலையுண்டு கிடப்பதாக வெழுதினேம். அந்த சித்ரவதத்தைச் சிறிது கேளீர். 'மாயக் கண்ணனுண்பதற்குப் பட்டபாடு' தொடங்கும் போதே ''தாமோருருட்டித் தயிர் நெய் விழுங்கிட்டு'' எனகிற பெரிய திருமொழிப் பாசுரம் கையாளப்படுகிறது; இதன் ஈற்றடி 'தாமோதரா கொட்டாய் சப்பாணி தாமரைக் கண்ணனே சப்பாணி' யென்றுதான் ஆழ்வாரருளியது. 'தாமரைக் கண்ணனே கொட்டாய்' என்று இக்கட்டுரைகாரர் கொட்டுகிறார். கொட்டாய் சப்பாணியை கொட்டாய்ச் சப்பாணியென்று கர்ணருந்துதமாக்கி வைத்திருப்பது அவலக்ஷணம். ''அப்பொழுதுத்தான் பாலைக் கறந்து'' என்று இவர் தமது ஸொந்த வாக்யத்தை எவ்வளவு அலங்கோலமாகவும் எழுதலாம். அருளிச் செயலையா கர்ணகடோரமாக்குவது !

## — பொய்கையார் பாசுரத்தின் பிறழ்வு —

165. பொய்கைப்பிரான்பரிவு என மகுடமிட்டு அவருடைய பாசுரமொன்று விரஸமாக விவரிக்கப்படுகிறது. "கொண்டானையல்லாலென்ற பாசுரத்தின் இரண்டாமடியில் ''மண்தாவென விரந்து மாவலியை'' என்றுள்ளதை இந்த மாவலியாக்கி மஹாபலிதான் யாசகம் செய்ததாகக் காட்டியுள்ளது. அதற்கு முன் பக்கத்திலே "மனத்திலோர் தூய்மையில்லை" என்கிற திருமாலைப்பாசுரத்தை முழுது மெழுதி ''சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன்'' என்கிற இரண்டாமடியை "தீவினை விளிவன்'' என்று கொலைபண்ணியுள்ளது. பெருமாள் திருமொழி ஸேவிக்குமொருவர் ''அல்லனேய பொற்குவடாம் அனந்தபத்மநாபனே'' என்றாராம். அப்படிப்பட்ட விபர்யாஸங்களுக்கு ஆனந்திப்போம்; தீவினைக்கும் விளிவுனுக்கும் எங்கே போயழுவது! அடியேன் உத்தேசித்த அரிய பெரிய விருந்துகளில் இப்படிப்பட்ட விருந்துகளா வந்துபுகவேணும்? ஒருகால் அடியேன் திருக்குடந்தை விடைகொண்டிருந்தபோது திருமாலை ஸேவிக்குமொருவர் சாத்துமுறைப்பாசுரத்தை ''வறவரந்தவழமாழ'' என்றார்; அது ஆனந்தமாகவேயிருந்தது. இங்குத் தீவினையன்றோ வந்து சேர்ந்தது; யாருடைய தீவினையோ? இதையெல்லாம் அச்சுக்கூடத்தார் தலையிலேற்றுவது அநியாயமேயாகும். மிக்க பரிதாபத்தினால் இது எழுதுகிறேன்.

## — ஆயனூர்க்கூடின அழகு —

166. நம் ஆழ்வார்கள் இடையர்களை ஆயர் என்று கூறியிருப்பதுண்டு; பாதுகைக்காரர் ஆயரை ஆயனூராக ஆக்கிவிட்டார். தன்வாசகமாக ஆயனூர்

என்றெழுதியதோடு நில்லாமல் "ஆனாயர்கூடியமைத்த" என்ற பெரியாழ்வார் பாசுரத்தை "ஆயனார்கூடியமைத்த" என்று வதம் பண்ணிவிட்டார். அந்தோ! இப்படி நாலா எட்டா? நூற்றுக்கணக்கிலன்றோ குவிந்து கிடக்கின்றன. ருக்மிணியை ருக்மணியென்றே நூறுதடவை யெழுதுகிறார்; இருபத்துமூன்று, இருபத்துநாலு....இவை இருபத்திமூன்றும் இருபத்திநாலுமாய்க்கிடக்கிறது. இரவத்மூணு, இ ர வ த் ந ா லு என்றில்லாமைக்கு உகந்திடுவோம். தங்கள் உக்திகளை இவர்கள் எப்படியாவதெழுதிக்கொள்ளட்டும்; அருளிச் செயற்பாசுரங்களை அநியாயமாய்க் கொலைபண்ணவேண்டாமென்று அஞ்ஜலிசெய்து வேண்டுகிறோம். இவற்றையெல்லாம் அருளிச் செயற்புலியான ஸ்ரீமதாண்டவன் கடாக்ஷியாமலிருக்கமுடியாதே; கடாக்ஷித்தருளி ஸஹித்திருப்பதுதான் வியப்பு.

— ஆடிமாதப் பாதுகையின் அழகு

167. இது எழுதிக்கொண்டிருக்கும் போதே அடுத்த ஆடிமாதத்துப் பாதுகையும் வந்திட்டது. இதில் வித்யையைப்பற்றி ஒரு கட்டுரை. முன்னிதழில் ஆத்மா என்று ஒரு கட்டுரை. இவற்றினழகைக் கேளுங்கள்.

"கர்மயோகத்தினால் ஞானயோகத்திற்குக் குறிப்பறிந்த ஒருகுலசலன் பக்தியோகத்தில் கைவைக்க முடியாமல் "அஹமேவம் விதோர்ஜுத!" என்கிறபடியே ப்ரபத்திக்குப் பாடுபடுவதை விட்டு நாமஸங்கீர்த்தனத்திலே அவகாஹித்து த்யானஸமாதி ப்ரதக்ஷிணாதிகளிலே ஊன்றினாலுங்கூட தைலதாராவதவிச்சின்ன ஸ்ம்ருதி ஸந்தானத்தாலே *ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி* யென்கிறவனுடைய உறவை விட்டு *வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்* என்கிற ஆர்த்தப்ரபன்னனும் த்ருப்தப்ரபன்னனுங்கூடி *நானேதுமுன்மாய மொன்றறியேன்* என்கிற கணக்கிலே நரகமும் சுவர்க்கமாகும் படியாக சிசுபாலாதிகளையும் திருத்தி நிறுத்திக் கொள்வதற்கு உபலக்ஷணமாகாதோ வென்று சங்கித்தால் இதற்குப் பரிஹாரமெப்படி? என்றால், இதைப்பற்றி உபகோஸல வித்யையிலே உஷஸ்தி நஹுஷாதிகளின் ப்ரச்ன ப்ரதிவசனாதிகளைக் கண்டு கொள்வது" என்றிப்படிப்பட்ட வாக்கியங்களையும், "அஜாதசத்ருர் மஹிமாதமாசாத் யாத்ருச்சிகாத்யை ரவகாஹ்ய கங்காம், ஸ்ரோதோவிபாகப்ரணயேந க்ருத்வா ஸ்வசேமுஷீம் பச்யதி பாண்டுரங்க:"—"ஜகத்யாம் விச்வேஷாம் விநயமஸ்ருணநாம் ப்ரதிபடம் புராணஸ்ம்ருத்யாதிஷ் வமிதமவலோக்ய ப்ரபலதாம், பரோக்ஷே ப்ரத்யக்ஷே கலிமதனவித்வேஷகலிதாம் நிருந்தந் நித்யாயந் விலஸதி விரிஞ்சோபி வஸுமாந்." என்கிற ச்லோகங்களையும் கண்டால் இவை வம்பனான வழிப்போக்கனொருவனுடைய கைத்திறம் என்று துணிந்து சொல்லமாட்டாதே, இதில் ஏதோ நுட்பமான விசேஷமிருப்பதாக வெண்ணி "இது பெரியவிஷயம்; மிகவும் கஹனமான விஷயம்; என்போல்வார் இதற்கு இலேசாக அர்த்தம்சொல்லிவிட முடியாது; ஆனாலும் பார்க்கிறேன்" என்பர்களாம் சிலர். அன்னவர்களே இந்த "வித்யா—ஆத்மா" கட்டுரைகளைப் படித்துச் சுவைகாணக் கடவர்கள்.

## — ஆத்மாகட்டுரையின் அற்புதரசனை —

168. வெள்ளைக்காகிதத்தைக் கறுப்பாக்குவதுதான் எழுதுவதென்பது—என்று கொண்டு எழுதுகிறார் (ஆத்மாகட்டுரைக்காரர்)—

“இங்கே ஒரு ஸந்தேஹம் எழுகின்றது; ஒரு உடலில் இருக்கும் ஆத்மா மற்றொரு உடலில் இருக்க முடியாது. அப்படியிருக்க ஈச்வரன் எல்லாவஸ்துக்களுக்கும் ஆத்மா என்பது எப்படி? இதற்குப் பரிஹாரம் கூறக் கருதி மேலும் கூறுகின்றார்—அது ஒரு தனிப்பட்ட வஸ்து; அசையாது. ஆனால் மனஸ்ஸைக் காட்டிலும் வேகமுள்ளது. முன்பே அது தேவர்களை அடைந்திருக்கிறது. ஆனால் தேவர்கள் அதை அடையவில்லை. நிலையாய்நிற்கும். ஆனால் ஓடுகின்றவர்களையெல்லாம் கடந்து செல்லும்; காற்று அதில்தான் ஜலத்தை தரிக்கின்றது” என்று.

ஆரியர்களே! எழுந்த ஸந்தேஹம் ஒருநொடிப்பொழுதில் ஒழிந்தமைகண்டீரே. இதையெல்லாம் ஸ்ரீமதாண்டவன் எப்படித்தான் கடாக்ஷித்தருளிப் பொறுமையோடிருக்கிறாரோ தெரியவில்லையே. “ப்ருதிவீகுண: கந்த: ஜலே கதம் வர்த்ததே?” என்று ஒருவர் கேட்டாராம்; “ப்ருதிவ்யா: கடிநத்வாத் ஜலஸ்ய கர்க்கசத்வாத் கந்தஸ்ய குடிலத்வாத் இதம் உபபந்நம்” என்று ஒருவர் விடையிறுத்தாராம். தந்யோஸ்மியென்று கைகூப்பிச் சென்றாராம். அதே கதைதான்.

## — ஸந்தேஹபரிஹார விசித்திரங்கள் —

169. ராஹுகாலமானது ஞாயிற்றுக்கிழமையன்று மாலையிலும், திங்கட்கிழமையன்று காலையிலும் வருவதற்கு என்னகாரணமென்று ஒருவர்கேட்டாராம். இது பெரியவிஷயம்; அவகாஹித்துக்கொள்ள அரிதான விஷயம்; ஆனாலும் நெஞ்சில்படும்படியாக எளிதாக்கிச் சொல்லுகிறேன் கேளும். ராஹுகேதுக்களிருவரும் மலையுச்சியில் இரவி மறையும்போது “எங்காணும் ஈதொப்பதோர் மாயமுண்டே” என்னும்படியாக, தலையும் தலைக்குக்கீழ்ப்பாகமும் ஒன்றுக்கொன்று இணையில்லாதபடி மருண்டுபோய் மாயவனுடைய வலையில்பட்டு மதிமயங்கித் துயக்கும் பிறவியில்தோன்றி நச்சு நச்சென்றும் நொணநொணவென்றும் பேசிக்கொண்டிருந்தபடியால் இது நன்றாயில்லையேயென்று பலருஞ்சொல்ல ராஹுவானவன் மாலையையும் கேதுவானவன் பகலையும் பற்றிக்கொண்டான் என்று விருபாக்ஷஸம்ஹிதையில் விளக்கப்பட்டுள்ளது என்றாராம். இவ்வளவு அழகாக ஸந்தேஹ பரிஹாரம் செய்வாரில்லையே! என்று வியந்து வணங்கி மகிழ்ந்து சென்றாராம் ஸந்தேஹங்கேட்டவர். இப்படிப்பட்ட கதைகள் பலவற்றையும் இணையோட்டவல்ல மஹாமதிகள் கட்டுரைகள் க்ருபைசெய்யக் காத்திருக்கும்போது பாதுகைக்கு என்ன குறை?

170. முடிவாக ஸ்ரீமதாண்டவன் திருவடிவாரத்திலே இந்த விண்ணப்பத்தை ஸவிநயம் ஸப்ரச்ரயம் தலைக்கட்டுகிறேன். இங்ஙனே குற்றங்குறைகளையெடுத்துக்காட்டுவதற்காகத் திருவுள்ளம் சீறியருளலாகாது. ஸம்பத்ஸம்ருத்

திக்கு ஒருகுறையில்லை; விவேகிகளும் நிருபகர்களுமான மேதாவி பண்டிதர்களை நியமித்து ஒருவர் ஒருபிழையுமெடுத்துக்காட்ட இடமில்லாதபடி லேகனத்தையும் சோதனத்தையும் நடத்திவைக்கவேணும். பழங்கதையொன்று கேட்டருள வேணும்; ஒருபண்டிதர் ஒருக்ரந்தமெழுதி அதை அரசாணிபாலை வேங்கடாத்வரியிடம் கொணர்ந்து கொடுத்து இதைக் கடாக்ஷிக்கவேணுமென்றாராம். அவர் அதைச் சிலநாழிகைகள் பார்த்துக் கொண்டிருந்தாராம்; க்ரந்தகர்த்தா அவரை நோக்கி "என்ன ஓயாமல் பார்க்கிறீர். ஏதாவது தப்பு அகப்படுமா? என்று பார்க்கிறீரோ? என்றாராம். "இல்லையில்லை. ஏதாவது நல்லது அகப்படுமா என்று தேடிப்பார்க்கிறேனென்றாராம் வேங்கடாத்வரி. இப்படிப்பட்ட கதைகளை நினைவூட்டும்படியாக இருக்கக்கூடாது.

### — பன்னுதிருப்பாவைப் பல்பதிகம் —

171. ஸ்ரீஆண்டாள்வைபவம் என்று ஆரம்பித்து (ஆடிமாதப்பாதுகையில்) முகப்பிலேயே திருப்பாவைத் தனியனில் "பன்னுதிருப்பாவைப் பல் பதிகம்" என்றுள்ளது. க்ராமீணர்கள் சிலர் இப்படி ஸேவிப்பதுண்டு. பத்யம் (வசநம்) என்கிற வடசொல் "இணைந்தியல்காலை யரலக்கிகரமும்" என்ற நன்னூல் விதிப்படி பதியமென்றாகியிருக்கிறது. பதிகமொன்று தசகத்திற்குப்பெயர்; முப்பது பாட்டிலே தசகங்கள் இல்லையோ? என்று கேட்பதை ஆண்டவன் ஸஹிக்கமாட்டார்.

### — ஓர் கல்பகோடி —

172. அடுத்தபடி "வளர்ந்தது ஓர் கல்பக்கோடி." என்றுள்ளது. "கல்ப கோடி சதேநாபி" என்கிற ப்ரமாணத்திற்கு இங்கென்ன ப்ரஸக்தியோ? "இழவு தறியாததோர்" "கொம்மைப் புறக்குன்றர்" என்றிங்ஙனே பாகரக்கோலைகள் பல பல. குசேலர்கதையை யெழுதுகையில் "தூணிமுடிம்பிடிவிருந்த மிகுதி அவலை" என்றுள்ளது; முடிம்பிடு என்பது என்னபாஷையோ? பரச்சதம், பரஸ் ஸஹஸ்ரம் என்னும்படியானவற்றிலே இவ்வளவு போதுமிப்போது. .... *

173. உபஸம்ஹார விஜ்ஞாபனம்:—குற்றங்குறைகளை யெடுத்துக்கூறினால் யாருக்குமே கோபம் வருவது ஸஹஜமேயொழிய அதை பத்யமாக நினைப்பவர்கள் மிகச் சிலரே. குற்றமிருந்தால் அதை யெடுத்துக்காட்ட வேணுமோ? "குணதோஷேஷு புதோ க்ருஹ்ணந் இந்துக்ஷ்வேளாவிவேச்வர:, சிரஸா ச்லாகதே பூர்வம் பரம் கண்டே நியச்சதி" என்று. குணமிருந்தால் அதைக்கொண்டாட வேண்டியதென்றும், தோஷமிருந்தால் அதை மறைத்திட வேணுமென்றும் சொல்லியிருக்க, இப்படி தோஷங்களை நிரம்ப எடுத்துக்காட்டுவது யுக்தமோ? என்று பண்டிதர்கள் நினையார்கள். உத்தராம சரித்திரத்தில் பவபூதி தெரிவிப்பதொன்றை நினைவூட்டுகின்றேன். அயோத்திமாநகரை ஆண்டு வருகின்ற பெருமான் தன்னைப்பற்றி ஆங்காங்கு என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார்களென்பதைத் தெரிந்துகொள்ள விரும்பி சாரர்களை நியமித்திருந்தாராம்; அவர்கள் ஆங்காங்குத் திரிந்துவந்து எங்கும் குணகீர்த்தனமேயாயிருக்கிற தென்றார்களாம்;

இது இருக்கட்டும், தோஷகீர்த்தனங்களு மிருக்குமே, அதைச்சொல்லு என்றாராம் பெருமாள். இதனால் தோஷ ப்ரகடனத்தைத்தான் விரும்பி ஸ்வீகரிக்க வேணு மென்பது விளங்கும். தோஷங்களுக்கு இடமில்லாமலிருக்கவேணுமென்கிற நல் லெண்ணமே தூண்ட எழுதியவற்றை ஸ்ரீமதாண்டவன் தவறாக க்ரஹித்தருள மாட்டாரென்று தேறி நிற்கிறேன். .... .... ...

## — ஆண்டவன் திருநாமத்தின் ஆதிமூலம். —

174. ஒரு ஸமயம் அடியேன் நம்பெருமாள் ஸந்நிதிக்கு விடைகொண்ட போது ஸ்ரீமத்தென்பரையாண்டவனை ஸேவிக்க ஆச்ரமத்திற்கு விடைகொண் டேன். மஹாரஸிகரான அந்தஸ்வாமி பூர்வம் பரிசிதரல்லராயினும் அக்ரூரனைக் கண்ட கண்ணபிரான்போலே பரமாதரம் காட்டியருளி "ஸ்தூலஸ்தூலாந் நயந முகுலைர் பிப்ரதே பாஷ்பபிந்தூந்" என்னும்படியாக அடியேனையாக்கி வார்த்தை யாடுகையில் "இவ்விடத்திற்கு ஆண்டவன் என்று திருநாமம் வழங்குவதற்குக் காரண விசேஷமுண்டோ? என்று கேட்டேன். ஸாக்ஷாத்ஸ்வாமியென்கிற திரு நாமம் கேட்டிருக்கிறீரா? அதன்காரணம் கேட்டிருக்கிறீரா? என்றார். "திருநாமம் கேட்டிருக்கிறேன்; காரணம் தெரியாது" என்றேன். 'அதேபோலத்தான் இதுவும்' என்றார். இரண்டையும் விளக்கியருளவேணுமென்றேன். "அந்த ஸ்வாமி ஸ்ரீமத் ராமாயணப்ரவசனம் செய்வாராம்; ஸாக்ஷாத் ராமசந்த்ரன், ஸாக்ஷாத் பாதசத்ரு க்நர், ஸாக்ஷாத் கும்பகர்ணன், ஸாக்ஷாச் சூர்ப்பணகை என்று வாயெடுத்த தெல்லாம் ஸாக்ஷாத்தாகவேயிருக்குமாம்; அதனால் அவர்க்கு ஸாக்ஷாத்ஸ்வாமி யென்று திருநாமமாயிற்றாம். இவ்விடத்துஸ்வாமி, யார் எது சொன்னாலும் "ஆண்டவன்செயல், ஆண்டவன் ஸங்கல்பம், ஆண்டவன் இஷ்டம்" என்றே ஸாதிப்பாராம். அதனால் நிகழ்ந்த வ்யபதேசமிது—என்று திருவாய்மலர்ந்தருளினார்.

## புஸ்தக விமர்சனம்

### — திருப்பாவையபார்த்ததிரஸ்காரம் —

175. இப்பெயர் பூண்டதொரு புத்தகம் விமர்சனத்திற்கு நம்மிடம் வந்திருக்கிறது. ஸமீபகாலத்தில் வெளிவந்த திருப்பாவை வாஸ்தவார்த்தம்—உள்ள பொருள் என்ற சிறுகவடியை நீறுநீறுக்கிப் பாறுபாறுக்கி யொழிப்பது இந்த திவ்ய க்ரந்தம். T. நகர். வித்வான் P. R. நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி நூலாசிரியர். வாஸ்தவார்த்தமென்று பெயரிட்டு அஸம்பந்தங்களும் அஸமஞ்ஜஸங்களுமான சப் தங்களையும் அர்த்தங்களையும் நிரப்பியிருப்பதாக நிபுண நிரூபணங்கள் செய்திருக் கிறார், அதிலிருந்து சிலவற்றை எண்டெடுத்துக் காட்டுகிறேன்.

அட்டையில் "வ்யங்க்யம்" என்று தொடங்கி "சொல்லின் நேர் பொருளாயிராமல் அதிலிருந்து தோற்றுவிக்கப்பட்ட பொருள் வ்யங்க்யப்

பொருள். உதாரணம்; ஒரு பெரியவரைப் பார்த்து 'இவர் பகவான்' என்றால் அதற்கு ஸ்ரீமந்நாராயணனென்பது முக்கியமான பொருள்; ஆனால் அப் பொருளை விட்டு லக்ஷணயா நாராயணனைப் போன்றவர் என்ற பொருளையுணர்த்தும்; அதி லிருந்து "இவரை வணங்கு, அதனால் க்ஷேமமுண்டாகும்" என்ற கருத்துத் தோன்றுகின்றது. இது வ்யங்க்யமாகும்" என்று எழுதப்பட்டிருக்கிறதாம். இது திரஸ்கார நூலில் வெகு நேர்த்தியாக மறுக்கப்பட்டுள்ளது. "கதிரவன் குண திசைச் சிகரம்வந்தணைந்தான்" என்பதில், குளத்திற்குப் போகச் சொல்லுவதும், வயலுக்குப் போகச் சொல்லுவதும், காபிகுடிக்கச் சொல்லுவதும் வ்யங்க்யம் என்பதோ டொக்குமிது—என்கிறார் திரஸ்காரகாரர். ஸ்ரீ பாஷ்யோபக்ரமம் 'பகவத் போதாயநக்ருதாம்' என்பது. இங்கு "பகவச் சப்தத்தைக் கேட்டுக் கைகூப்பு வாருமில்லை; குருகூர்ச்சடகோபனென்று கேட்டவாறே "யந்நாண்டலம்[ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ரா:" என்கிறபடியே உலகமெல்லாம் கையெடுத்துக் கும்பிடுகிறது. இங்கு வ்யங்க்ய மென்கிற பேச்சே கிடையாது—என்று நன்கு விலக்கியுள்ளார் திரஸ்காரகாரர்.

176. திருப்பாவையில் ஒரு பாட்டில் ஒருத்தியைக் கோவலர்தம் பொற் கொடியே! என்றழைக்கிறார்கள்; மற்றொரு பாட்டில் வேறொருத்தியை நற்செல் வன் தங்காய்! என்றழைக்கிறார்கள். ஓரிடத்தில் கோவல ரென்கிற பன்மையும், மற்றோரிடத்தில் நற்செல்வனென்கிற ஒருமையும் இருப்பதாகக் காட்டி இவற்றி லிருந்து ஏதோ வ்யங்க்யார்த்தம் தோன்றுவதாக எழுதியிருக்கிறதாம் அபார்த்தகச் சுவடியில். இதற்கு திரஸ்கார நூலில் கொடுத்திருக்கிற சாட்டை இன்சுவை மிக்கது. (அதாவது) பெரிய திருமொழி முதற்பாட்டில் ஓரடியில் வாடினேனென்றார், மற்றோரடியில் கூடினே னென்றார்; இன்னோரடியில் ஓடினேனென்றார், வேறோரடி யில் நாடினேனென்றார்; இவற்றுக்கு அபார்த்தஜநகர் வ்யங்க்யம் ஸாதித்தாராம். வாடினேன் வாடியென்றதற்கு வாடி வாடுமிவ்வாணுதலேயென்ற நம்மாழ்வா ருடைய வாட்டம் வ்யங்க்யம்; கூடினேன் கூடியென்றதற்கு கூடிக்கூடியுற்றார்க ளிருந்து என்ற பெரியாழ்வார் காட்டின கூட்டம் வ்யங்க்யம். ஓடினேனோடியென்ற தற்கு ஓடியோடிப் பலபிறப்பும் பிறந்தென்று நம்மாழ்வார் காட்டின ஓட்டம் வ்யங் க்யம்; நாடினேன்நாடியென்பதற்கு ப்ரத்யாஹாரந்யாயேந நாமடி வ்யங்க்யம். பலர் திருமொழி தொடக்கத்திற்கு நாமடி சாத்திக்கொண்டு செல்வதுமுண்டு. என்று சொல்லி வ்யங்க்யங்கள் வகுத்தாராம். அவருடைய திறமையை வென்று விட்டது இந்த அபார்த்தக் குடுக்கையின் திறமையென்று விரிவான விளக்கம் காட்டியிருக்கிறார் திரஸ்காரகாரர்.

177. மற்றொன்றும் மிக்க சுவைமிக்க நிருபணம். (அதாவது) "பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்" என்கிற அடைக்கலப்பத்துப் பாட்டுக்கு இவர் வ்யங்க்யார்த்தம் கூறினாராம்; ஒரு ஸ்வாமிக்கு மூன்று தேவிகளாம்; ஒருத் திக்கு பக்தியென்றும், மற்றொருத்திக்கு சக்தியென்றும் இன்னொருத்திக்கு முக்தி யென்றும் பெயராம். இம்மூவர்க்கும் பதியானஸ்வாமி இவர்களோடு கூடாமல் எத்திசையுமுழன்றோடினாராம். இக்கதை பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக்

கூடாமல் என்றதற்கு வ்யங்க்யமாம். முதலாமென்ற ஆதிசப்தத்தாலே பக்தி யென்பவனுக்கு ஸபத்நிகளான சக்திமுக்திகளை க்ரஹிக்கவேண்டுமாம். பதி யெனக்கு என்றவிடத்தில் பதியென்றது வடசொல்லாய் பர்த்தாவைச் சொல்லு கிறதாம். அவர் மனைவிகளோடு கூடாமற்போனதை ஒவ்வொருத்தியும் 'பதி யெனக்குக் கூடாமல் எத்திசையுற்றானென்றேடுகின்றார்'' என்கிறாளாம். இந்த மஹார்த் தம் அந்தப்பாட்டுக்கு வ்யங்க்யமென்று திருமாமணிமண்டபத்தில் ப்ரஸங்கமாம். ப்ரபலகரகோஷமாம். இப்படி அற்புதமான அநேகவிஷயங்கள் திரஸ்கார நூலில் திகழ்கின்றன. ப்ராஜ்ஞ ரஸிகர்களுக்குப் பஞ்சாம்ருதம்போன்றது இந்நூல். விலை ஒரு ரூபா: கிடைக்குமிடம திருமாமணி புக்டெபோ. மயிலை. .... ...

> நால்வர் கூடி நால்வரைப் பெற்றார்;
> நால்வர் கூடி ஒருவரைப் பெற்றார்;
> அறுவர் கூடி ஆயிரவரைப் பெற்றார்;

178. தசரதரும் கௌஸல்யா கைகேயீ ஸுமித்ரைகளுமாகிற நால்வர் கூடி ராமலக்ஷ்மண பரத சத்ருக்நர்களாகிற நால்வரைப்பெற்றமை ப்ரஸித்தம்; வஸுதே வதேவகீ நந்தகோப யசோதைகளாகிற நால்வர் கூடி கண்ணனாகிற வொருபிள்ளை யைப்பெற்றதும் ப்ரஸித்தம். அறுவர் கூடி ஆயிரவரைப் பெற்றது எங்கே? என்று கேள்வியெழும். கூரத்தாழ்வானுடைய வொரு ஸ்ரீஸூக்தியைக்கொண்டு இதற்கு ஸமாதானமுரைக்கவேணும். அவருடைய பஞ்ச ஸ்தவத்திலொன்றான வரதராஜஸ் தவத்தில் ''ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம் பல மதுல மைச்வர்யமகிலம்'' என்றுள்ள ச்லோகத்திலே ''ப்ரவர குணஷட்கம் ப்ரதமஜம் குணாநாம் நிஸ்ஸீம்நாம் கணந விகுணாநாம் ப்ரஸவபூ:'' என்னப்பட்டது. இதன் கருத்து யாதெனில்; அஸங்க் யேய கல்யாண குணகண நிதியாகச் சொல்லப்படுகிறான் எம்பெருமான். ஆனால் "தவாநந்த குணஸ்யாபி ஷடேவ ப்ரதமேகுணா:" என்கிறது பகவச் சாஸ்த்ரம். ஜ்ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு என்கிற ஆறு குணங்களே தாயான குணங்களென்றும், இவை மூலமாகவே மற்ற ஆயிரக்கணக்கான திருக் குணங்கள் விளைகின்றன வென்றும் நூற்கொள்கை. இதைக் கூரத்தாழ்வான் "ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம்" என்கிற கீழேயுதாஹரித்த ச்லோகத்தினால் அருளிச் செய்தார். இதில் "ப்ரவர குணஷட்கம் ப்ரதமஜம் குணாநாம் நிஸ்ஸீம்நாம் கணந விகுணாநாம் ப்ரஸவபூ:'' என்றருளிச் செய்த சொற்சுவைகொண்டே ''அறுவர் கூடி ஆயிரவரைப் பெற்றார்'' என்று ப்ரஹேளிகையாகப் பணித்தேன். ....

— ஒரு மஹா மேதாவியின் வியாக்கியானம் —

179. திருப்பல்லாண்டில் ஒவ்வொருபாட்டின் முடிவும் சிறுவர்களுக்கு ஞாபகம் வைத்துக் கொள்ள முடியாதபடி பல்லாண்டு கூறுதும் - பல்லாண்டு கூறுமின் - பல்லாண்டென்மின் - பல்லாண்டுபாடுதும் - பல்லாண்டு கூறுவன் என்றிப்படி வெவ்வேறு விதமாகவருவதால் இதை நினைவு வைத்துக்கொள்வதற்காக முன்னோர்

கள் தாமே "ஆதி கூறுதும் அனந்தரம் கூறுமின் அண்டமென்மின் எந்தை பாடு தும் தீயுடுத்தெந்நாள் கூறுதும நெய்யுமல்லும் கூறுவனே" என்றொரு சந்தை இயற்றிவைத்தார்கள். இதுவும் அத்யயன பரம்பரையில் வந்திருக்கிறது. எல்லாப் புத்தகங்களிலும் அச்சிட்டுமிருக்கிறது. 'அபிநவ அகஸ்த்யர்' என்று டைடல் பெற்ற வொரு பெரும் புலவர் 'எனக்குப் பொருள்படாத செய்யுள் எதுவுமே கிடையாது' என்று சொல்லிக் கொண்டிருந்தாராம். அவரிடம் சென்று இச்சந்தையைச் சொல்லி இதற்குப் பொருள் சொல்ல இயலுமோ? என்று கேட்டார்களாம். இதை இரு முறை சொல்லச் சொல்லி 'ஆஹா! இது ஆச்சரியமான செய்யுள்; வேதாந்த விழுப்பொருளன்றோ இதில் அடங்கியுள்ளது; கேளுங்கள்' என்று சொல்லி உடனே பொருள் விளக்கப் புறப்பட்டாராம்; [ஆதி கூறுதும்] இதில் ஆதி என்னுஞ் சொல்லை இருமுறை கொள்ளவேணும். ஆதி-முதல் முதலிலே, ஆதி—ஆதிமூலப் பொருளை, கூறுமின்-சொல்லுங்கோள். அனந்தரம் கூறுமின் - அதல்பிறகு உங்களுக்கு இஷ்டமான தெய்வத்தைச் சொல்லுங்கள்; அண்டம் என்மின் - "யதண்டம் அண்டாந்தரகோசரஞ்சயத்" என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியைச் சொல்லுங்கள்; எதற்காகவென்றால், அதனால் பரதெய்வம் இன்னதென்று புலப்படும். எந்தை பாடுதும் - எந்தையென்று தகப்பனுக்குப் பெயர்; அவரைப் பாடுவோம். எதற்காக? இப்படிப்பட்ட மஹார்த்தம் நமக்கு ஸ்புரிக்கும்படி அருள் செய்வதற்காக. தீயுடுத்தெந்நாள் கூறுதும்- தீயையுடுத்துக் கொள்வதாவது சிதையில் அக்நியினால் தஹனமடைவது. ச்மசானத்திலே அக்னிஸம்ஸ்காரம் பெறுகை என்றபடி. அது எந்நாள்? எந்நாள்? என்று கூறுவோம். கூவிக்கொள்ளும் காலம் இன்னுங் குறுகாதோ? என்று கதறுவோம் என்றபடி [நெய்யும மல்லும் கூறுவனே] ஆஸந்தியில் ஏற்றுவதற்கு முன் ஹோமம் பண்ணுவதற்காக நெய்யும், ஆஸந்தியில் ஏற்றின பிறகு உடலை மூடிக் கட்டுவதற்கு மல் பீஸாம் வேண்டும் என்றபடி. கூறுவனே என்பது பிழை; கோருவனே என்றிருக்கவேண்டும். நெய்யும் மல்பீஸாம் விரும்புகிறேனென்றபடி. இப்படியாக அர்த்தம் சொல்லுகிறவர்களும் இவ்வுலகில் மலிந்துள்ளார்கள். இவர்களுக்கு மஹா மேதாவிகளென்று பெயர். ....

— ஒரு வேடிக்கை துக்கடா —

180. ஒருவர் நாலுகால் மண்டபமொன்றைக் காட்டி இது என்னுடையதென்று சொல்லி அதை அடகுவைத்து நாலாயிரம் ரூபா கடன் வாங்கினாராம். அதைப் பொருக்வொருவன் இவரிடம் வந்து 'இதில் எனக்கு ஏதேனும் பங்கு கொடுத்தால் சரி; இல்லையானால் இது ஏமாற்றமென்று தெரிவித்துவிடுவேனென்றானாம். அட! கையிலாகாத முண்டமே! உனக்கு ஸாமர்த்தியமிருந்தால் பதினாறுகால் மண்டபத்தை அடகுவைத்துப் பதினாறாயிரம் ரூபா வாங்கேன்' என்றாராமவர்.

— ஸீதா பிராட்டியின் அற்புதவாக்கு —

181. இலங்கையில் அசோக வனத்தில் ஏகாக்ஷி ஏககர்ணி முதலான எழுநூறு ராக்ஷஸிகளிடையே வாழும் ஸீதாபிராட்டி இராவணனுக்குப் பரமகருணையினால் பலபல ஹிதங்களைச் சொல்லுகிறாள்; அந்த ச்லோகங்களை வால்மீகி ராமா

யணத்தில் வாசிக்கும்போது கல்லும் கரையும்; மரங்களுமிரங்கும். அந்த ஸந்தர்ப்பத்திலுள்ள ச்லோகங்களுள் விலையில்லா மாணிக்கமென்னும்படியான ச்லோகமொன்றே நம் ஆசாரியர்களின் திருவுள்ளத்தில் சிறந்து திகழ்வது; அதாவது 'இஹஸந்தோ ந வா ஸந்தி ஸதோ வா நாநுவர்த்தஸே. ததாஹி விபரீதா தே புத்தி ராசார வர்ஜிதா" என்பது. பிராட்டி இலங்கையைச் சுற்றிப்பார்த்தாள். அங்கு இல்லாத வஸ்து எதுவுமேயில்லை யென்று தோன்றிற்று. ஸ்வர்க்கலோகத்திலும் காணக்கிடைக்காத பொருள்கள் இலங்கையில் சேமித்துவைக்கப்பட்டிருந்ததாகத் தெரியவந்தது. ஆனால் ஒரே ஒருவஸ்து இல்லையென்று குறை தோன்றிற்று; அந்தவஸ்து எதுவென்ன;

182. [இஹ ஸந்தோ ந.] அப்பா! ராவணா! மனமும் மதியும் நல்வழியிற் செல்லும்படி நல்ல வுபதேசங்களை நிச்சலும் நல்கவல்ல நல்லார்கள் இவ்வூருக்கு அவச்யமல்லவா? அப்படிப்பட்ட ஸத்துக்களைத் திரட்டி இங்கு நீ கொண்டு சேர்க்கவில்லையே! ஒவ்வொரு க்ராமத்திற்கும் நகரத்திற்கும் மருத்துவர்கள் எப்படி அவச்யமோ அப்படி நல்லுபதேசம் நல்கவல்ல நல்லார்களும் அவச்யமென்று உணராய். தேஹத்திற்கு நேரும் வியாதிகளைப் போக்குவதற்கு வைத்யர்கள் வேண்டும்; ஆத்மாவுக்கு நேரும் நோய்களை விலக்குவதற்கு ஸத்துக்கள் வேண்டும். இது உனக்குத் தெரியாததன்றே. உண்பாரும் உறங்குவாரும் உடுப்பாரும் அடிப்பாருமேயான இப்பெரிய வூரிலே ஐயோ! ஸத்துக்களைத் திரட்டிவைத்தாயல்லையே! என்று வருந்திச் சொன்னாள் பிராட்டி. உடனே ஆலோசித்தாள்; தவறுதலாகச் சொல்லிவிட்டோமென்று தோன்றிற்று. அகம்பநன் மாரீசன் மால்யவான் விபீஷணன் முதலானவர்கள் [கும்பகர்ணனுங்கூட] ஆச்சரியமான உபதேசங்களைச் செய்தவர்களென்பது ப்ரஸித்தமாகையாலே அப்படிப்பட்ட ஸத்துக்களிருக்க, ஸத்துக்களில்லை யென்று சொன்னேனே யென்று வருந்தி [ஸந்தி] என்கிறாள், ஸத்துக்கள் இருக்கிறார்கள், அதிலொரு குறையில்லை என்றபடி. இடையில் (வா) என்றது பூர்வபக்ஷவ்யாவர்த்தகம். இவ்வூரில் ஸத்துக்களில்லையோவென்று முதலிலே சங்கித்து, அஃதில்லை நன்றாகவுண்டு என்று முடிப்பதான அர்த்தமே சுவைமிக்கது.

183. ஸத்துக்கள் இருந்தும் அவர்களுடைய இருப்பு கார்யகரமாகவில்லையே யென்கிற வருத்தத்தை உடனே காட்டுகிறாள் [ஸதோ வா நாநுவர்த்தஸே] என்று. ஸத்துக்களெல்லாரும் நம்மாழ்வாரையும் எம்பெருமானாரையும் போன்றவர்களல்லரே. *பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்ளவேணுமென்கிற உதாரமான எண்ணம் ஸத்துக்களெல்லார்க்கும் எளிதாக வுண்டாய்விடுமோ? *சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ* என்றார் நம்மாழ்வார். *பாருலகிலாசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று பேசி வரம்பறுத்தார் ஏராரெதிராசரின்னருளால்; இப்படிப்பட்ட பெரும்புகழ் எல்லார்க்கும் வாய்க்குமோ? அநுவ்ருத்திப்ரஸந்நர்களாகவன்றோ பெரும்பாலும் ஸத்துக்களிருப்பது. அன்னவர்களை அநுவர்த்தித்தன்றோ ஹிதோபதேசம் பெறவேணும். அந்தோ! அது செய்யமாட்டிற்றிலையே

யென்றாள் பிராட்டி. "ஸ்தோ வா நா நுவர்த்தஸே" என்கிற இவ்வார்த்தை எவ்வளவு கம்பீரமானது! ஸத்துக்களை அநுவர்த்தித்தே ஹிதோபதேசங்கள் பெற வேணும் மென்பதை எவ்வளவு அழகாகக் காட்டுகிறாள் காண்மின். .... ▪

## — கலியன் வைபவ விருந்துகள் பத்து —

184. கிருத்திகையில் அவதரித்த கலியனுக்கும், மறுநாள் ரோஹிணியில் அவதரித்த கண்ணனுக்கும் பத்துவகைகளாலே ஸாம்ய மநுபவிக்கும் முகத்தால் கலியன்வைபவத்தைப் பத்து விருந்துகளாக விஜ்ஞாபிக்க விரும்புகிறேன். 1. கண்ணனும் ஸூர்யன் கலியனும் ஸூர்யன். ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் கண்ணனவதாரத்தைக் கூறுகின்ற பராசரமுனிவர் கண்ணனவதரித்தானென்று கூறவில்லை. "*ததோகிலஜகத்பத்ம போதாய அச்யுதபாநுநா, தேவகீ பூர்வஸந்த்யாயாம் ஆவிர்ப்பூதம் மஹாத்மநா" என்று, தேவகியாகிற பூர்வஸந்த்யையிலே கிருஷ்ண ஸூர்யன் ஆவிர்ப்பவித்தானென்றார். "கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோக திவாகரம்" என்கிற கலியன் தனியனானது இவ்வாழ்வாரை லோக திவாகரரென்றது. ஆக இருவரும் ஸூர்யர்கள் என்னுமத்தாலே முதல் ஸாம்யம்.

### — ஆகாசவாக்கு பலித்ததனால் ஸாம்யம் —

185. (2) கண்ணனவதாரமும் கலியனவதாரமும் இவர்களவதரிப்பதற்கு நெடுநாள் முந்தியே ஸூசிதமென்னுமத்தாலே இரண்டாவது ஸாம்யம். க்ருஷ்ண ஜநநியான தேவகியானவள் கம்ஸனுக்கு உடன்பிறந்தவள். அவன் இவளுக்கு மிகச்சிறப்பாக வஸுதேவரோடே விவாஹத்தை நடத்தி தம்பதிகளைத் தேரிலிருத்தி மிக்க அன்புடன் தானே தேரைச்செலுத்திக்கொண்டு போகையில் இவளுடைய எட்டாவது குழந்தையினால் உனக்கு ம்ருத்யு விளையும்' என்று ஆகாசவாணி தோன்றிற்று. அந்தவாக்கு அப்படியே பலித்தது. இதனால் கண்ணனவதாரம் முன்னமே ஸூசிதமென்று தேறிற்று. கலியனுடைய திருவவதாரமும் திருவாய்மொழியில் (5-2-1.) "கலியுங்கெடுங் கண்டுகொண்மின்" என்று ஆகாசவாணி போன்ற பாசுரத்தினால் ஸூசிதம். தவறாமல் பலிப்பது ஆகாச வாக்கு எனப்படும். இந்தத் திருவாக்கும் அப்படியே பலித்திருக்கின்றது. ஆசார்யஹ்ருதயத்தில் "கலியுங்கெடும்போலே ஸூசிதம்" என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் "இவர்தாம் மயர்வறமதிநலம் பெற்றவராகையாலே *கலியுங்கெடுமென்று திருமங்கையாழ்வார் உடையவர்போல்வார் அவதரித்துக் கலியுக ஸ்வபாவமும் கழியுமென்று மேல்வரும் அம்சத்தை தர்சித்து அருளிச்செய்தாப்போலே" என்று திருவாய்மலர்ந்தருளியுள்ள திவ்யஸூக்தி இங்கே அநுஸந்தேயம். கண்ணன் கம்ஸவதம் செய்தவன்; இவ்வாழ்வார் கலிபுருஷவதம் செய்தவர்.

### — கண்ணனும் கலியனும் கள்வர்களன்றோ —

186. (3) கள்வத்தினால் இருவர்க்கும் மூன்றாவதான ஸாம்யம்; 'வெண்ணெய் களவு செய்தான், பெண்களைக் களவு செய்தான்' என்று கண்ணனுடைய கள்வம் ஸுப்ரஸித்தம். கலியனும் கோயிலில் கோபுரப்ராகாராதி நிர்மாணத்திற்காகப் பல களவுகள் செய்தமை சரித்ரஸித்தம்.

— கட்டுண்டிருந்தவர்கள் கண்ணனும் கலியனும் —

187. (4) கட்டுண்டிருந்ததனால் நான்காவது ஸாம்யம். *மத்துறு கடை வெண்ணெய் களவினிலுரவிடையாப்புண்டு* என்றும் *கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான்* என்றுமுள்ள பாசுரங்களினால் கண்ணன் கட்டுண்டிருந்தது ப்ரஸித்தம். கலியன் பாகவதாராதனத்தில் ஊன்றியிருந்து அரசனுக்குச் செலுத்த வேண்டிய பகுதிப்பொருளுமுட்படச் செலவுசெய்த குற்றத்திற்காகக் கொற்றவனால் சிறையில் கட்டி வைக்கப்பட்டிருந்தது குருபரம்பராப்ரபாவஸித்தம்.

— உய்யும்வகையுணர்த்தினதனால் இருவர்க்குமொற்றுமை —

188. (5) சேதநர்க்கு உஜ்ஜீவநோபாயமான சாஸ்த்ரப்ரதானம் பண்ணின படியைக்கொண்டு ஐந்தாவது ஸாம்யம். *அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத்துரைத்த நிறை ஞானத்தொருமூர்த்தி* என்ற திருவாய்மொழியின்படியே ஸகலார்த்தப்ரகாசகமான கீதாசாஸ்த்ரத்தை உபகரித்தவன் கண்ணன். கலியன் *நெஞ்சுக்கிருள் கடிதீபம் அடங்கா நெடும்பிறவி நஞ்சுக்கு நல்லவமுதம் தமிழ நன்னூல் துறைகளஞ்சுக்கிலக்கிய மாரண சாரம் பரசமயப் பஞ்சுக்கனலின் பொறி பரகாலன்பனுவல்களே* என்னும்படி கீதையிற்காட்டிலும் உத்தமமான ஆறுதிவ்ய சாஸ்த்ரங்களையுபகரித்தார்.

— தமக்கேற்ற துணைவர்களையுடைமையினாலொற்றுமை —

189. (6) குறும்பு செய்கைக்கு நிபுணரான துணைவர்களோடு கூடியிருக்குந்தன்மையினால் ஆறாவது ஸாம்யம். *கொத்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகனை* கண்ணன் தான்செய்யும் தீம்புகளுக்குத் துணைவரான தன்னேராயிரம் பிள்ளைகளோடு கூடியிருந்தான்; கலியனும் நீர்மேல் நடப்பான் நிழலிலொதுங்குவான் தாளூதுவான் தோலாவழக்கன் முதலானவர்களைத் தமது செய்கைகளுக்குத் துணைவராகக் கொண்டிருந்தது சரித்ரப்ரஸித்தம்.

— கண்ணனுக்கும் கலியனுக்கும் திருநாமஸாம்யம் —

190. (7) துல்யமான திருநாமத்தை வஹிப்பதனால் ஏழாவது ஸாம்யம். கண்ணபிரான் *கண்ணனென்னுங் கருந்தெய்வம்* கானகமெல்லாந் திரிந்து உன் கரிய திருமேனிவாட* இத்யாதிப்படியே நீல நிறத்தழகார்ந்தவன்; கலியன் நீலனென்று திருநாமம் படைத்தவர்; இராமானுச நூற்றந்தாதியில் *தண்டமிழ்ச் செய்த நீலன் தனக்கு உலகிலினியானை* என்ற விடத்து நீலனென்பதற்குத் திருமங்கையாழ்வாரென்று வியாக்கியானம்.

— அபக்யாதி பெறுதலினாலான ஒற்றுமை —

191 (8) நீதிநெறிவழுவினவரென்னும் அபக்யாதியில் எட்டாவதான ஸாம்யம். கண்ணனது சரிதைகளை நோக்குங்கால் *மச்சொடுமாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடுபட்டைக் கிழித்துக் காம்பு துகிலவைகீறி நிச்சலும் தீமைகள் செய்வாய்* இத்யாதி பாசுரங்களின்படியே நீதிநெறிவழுவியவனென்று

அபக்யாதிக்கு இடமாயிருக்கும். கலியனுடைய சேஷ்டிதங்களிலும் [நாகைப் பட்டினத்துச் செய்தி முதலானவற்றால்] அநீதியினலாய அபக்யாதிக்கு இடமிருந்தது. உண்மையில் இருவரிடத்திலும் அநீதிகிடையாது. கண்ணனிடத்தில் அநீதிகிடையாதென்பதை தேசிகன் யாதவாப்யுதயத்தில் (4-64.) "விமோஹநே வல்லவகேலிநீநாம் ந ப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம், ஸம்பத்ஸ்யதே பாலகஜீவநம் தத் ஸத்யேந யேநைவ ஸதாம் ஸமக்ஷம்" என்கிற ச்லோகத்தினால் உபபாதித்தனர். [*யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் - இத்யாதி மஹாபாரத ச்லோகம் காண்க.] கலியனிடத்தில் அநீதி கிடையாதென்பதை பட்டர் "ஜிதபாஹ்யஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்திவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்." என்கிற ஸ்ரீரங்கராஜஸ்தவ ச்லோகத்தினால் முதலித்தருளினர்.

— விரோதிகளை வென்றொழித்ததனால் விளைந்த ஸாம்யம் —

192. (9) விரோதி நிரஸநநைபுண்யத்தினால் ஒன்பதாவது ஸாம்யம். கண்ணன் "தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப்பூடுகளடங்கவுழக்கியவன்; "மல்லைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியச் செய்தவன்; "காட்டை நாடித் தேனுகனும் களிறும்புள்ளுமுடன்மடிய வேட்டையாடி வந்தவன். ஆகையாலே விரோதிநிரஸநநிபுணன் கண்ணன். கலியனும் "அருள்மாரி அரட்டமுக்கி அடையார்சீயம்" என்றும் "ஒன்றலர் தங்களை வெல்லும் ஆடல்மா வலவன் கலிகன்றி" என்றும் விரோதி நிரஸநத்தாலே ப்ரக்யாதி பெற்றவர்.

— அவதாரத்தின் அவஸானத்திலான வொற்றுமை —

193 (10) அவதாரத்தில் கடைசியான தன்மையினால் பத்தாவதான ஸாம்யம். எம்பெருமானுடைய விபவாவதாரங்களில் க்ருஷ்ணாவதாரமே கடைசியாக நிகழ்ந்திருக்கின்றது. கலியனவதாரம் ஆழ்வார்களுக்குள் கடைப்பட்டது. "பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசையையன் அருள்மாறன் சேரலர்கோன் - துய்யபட்டநாதன் அன்பர்தாள்தூளி நற்பாணன் நன்கலியன். ஈதிவர் தோற்றத்தடைவாமிங்கு" என்னக்கடவதிறே. .... ... ... ....

— ஸ்ரீராமாயண பாரதாதிகளின் பிறழ்வுபற்றி —

194. இதிஹாஸபுராணங்களில் நாளடைவில் அனேக ப்ரக்ஷேப உத்க்ஷேபங்கள் நேர்ந்துவிட்டனவென்பதை அடியேன் பல நூல்களில் விவரித்திருக்கிறேன். ப்ராமாணிர்கள் அச்சிட்டிருக்கும் ஸ்ரீ ராமாயணபாரதாதிகளில் ஆங்காங்கு "ப்ரக்ஷிப்தஸ்ஸர்க்க:- ப்ரக்ஷிப்தோத்யாய:" என்று மகுடம் கொடுத்திருப்பதைக் காணாநின்றோம். அத்யாய ஸர்க்கங்கள் கிடக்க; ச்லோகங்களும் உருமாறிப் போனவை பல; இடம் மாறிச்சென்றவை பல; அறவே ஒடுபட்டுப் போனவை பல; புதிதாக வந்து புகுந்தவை பல. இப்படிப்பட்ட ஆபத்துக்கள் நம்முடைய ப்ராசீன நூல்களுக்கு நேர்ந்திருப்பதை அடியேன் விரிவுக்கு அஞ்சாமல் பல ப்ரகரணங்களில் உபபாதித்திருக்கிறேன். இதிஹாஸ புராணங்களில் அடியோடு இடம்பெறாத கதைகள் ஹரிகதாகாலக்ஷேபகாரர்களிடத்திலும் ஸினிமா மேடைகளிலும் வெற்றிபெற்று விளங்குவதாகப் பல பெரியார்கள் கூறுகின்றனர்.

— துலாபார சரித்திரம்பற்றி —

195. மத்ஸ்ய புராணத்தில் 185, 186ஆம் அத்யாயங்களில் துலாபாரதானத்தின் ப்ரசம்ஸையுள்ளது. திருவேங்கடமுடையான் ஸந்நிதியில் ப்ரார்த்தனையினாலாகும் பலவகை ஸமர்ப்பணைகளில் துலாபார ஸமர்ப்பணையும் ஒன்றாக நடந்து வருகின்றது. ஸ்ரீகாஞ்சியிலும் தேவப்பெருமாள் ஸந்நிதியில் திருமுற்றவெளியில் ஒரு சிறிய நாற்கால் மண்டபமுள்ளது; அதற்குத் துலாபாரமண்டபமென்று பெயர் வழங்கிவருகின்றது. முற்காலத்தில் துலாபார ஸமர்ப்பணை இங்கும் நடந்துவந்ததாகச் சொல்லுகிறார்கள். ஸ்ரீக்ருஷ்ண சரித்திரத்தில் ஆகரம் தெரியாத ஒரு துலாபார கதை சொல்லப்பட்டு வருகின்றது. இது பலவிதமாகச் சொல்லப்பட்டு வருவதால் அடியேனறிந்த வொருவிதத்தை உபந்யாஸதத்வயத்தில் விளக்கியிருப்பது காண்க. ஸ்ரீராமாநுஜன் தொ. 200. பக்கம் 68.

— அடியேனை நோக்கிப் பெரியார்செய்த பரீக்ஷைகள் மூன்று —

196. இயற்பாவில் பரீக்ஷிக்கிறேனென்று சொல்லிப் பதினெட்டாவது வயதில் பரீக்ஷித்தார் ஒருமஹான். எம்பெருமான் எங்கிருக்கிறான்? இடங்களைப் பெயர்த்துக்கொண்டு எங்கே போனவன்? எம்பெருமானார் எங்கெங்கு இருக்கிறார்? என்று கேட்டார், அடியேன் கூறின விடைகள்; (1) எம்பெருமானுக்கு இருப்பிடம் – வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை. (2) அவன் இடங்களைப் பெயர்த்துக்கொண்டு எங்கே போனான்? *அவைதன்னொடும் வந்திருப்பிடம் மாயன் இராமாநுசன் மனத்து.* (3) எம்பெருமானார்எங்கெங்கிருக்கிறார்! "இன்றவன் வந்திருப்பிடம் என்றனிதயத்துள்ளே" என்றபடி அமுதனார் திருவுள்ளத்திலே.

— எங்கெங்கிருக்கிறார் என்று விசேஷித்த கேள்வி. —

197. எம்பெருமானார் எங்கிருக்கிறாரென்று கேளாமல், "எங்கெங்கிருக்கிறார்?" என்று நான் கேட்டதற்கு ஏற்ற விடை கூறவில்லையே என்றார் அந்த மஹான். இன்னும் சில இடங்களைக் காட்டவேணுமென்று திருவுள்ளம் போலுமென்றறிந்து உடனே விஜ்ஞாபித்தேன் *இராமானுசனென் குலக்கொழுந்து. உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும் திருவாய்மொழியின் மணந்தரு மின்னிசை மன்னுமிடந்தொறும் மாமலரான் புணர்ந்த பொன்மார்பன் பொருந்தும் பதிதொறும் புக்கு நிற்பதை விஜ்ஞாபித்தேன். .... .... .... *

— நெஞ்சே! பார்த்தையா கேட்டையா? —

198. இதுவும் ஒரு பரீக்ஷை. திருவாய்மொழி முதற்பத்தில் *கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று. ஓர் எண்டானுமின்றியே வந்தியலுமாறு" என்ற பாசுரத்தையும், பத்தாம்பத்தில் *வாட்டாற்றானடிவணங்கி மாஞாலப் பிறப்பறுப்பான், கேட்டாயே, மடநெஞ்சே!* என்ற பாசுரத்தையும் சேர்த்துப் பிணைத்துக் 'கேட்ட' கேள்வியிது. ஆழ்வார் தமது திருவுள்ளத்தை நோக்கி நெஞ்சே! கண்டாயே, கேட்டாயே' என்று உசாவுவது எத்தனை நாள் அநுபவித்தாலும் பேரின்ப வெள்ளம் பெருகுமே!. கண்டாயே நெஞ்சே யென்கிற பாசுரம் எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபைக்கு வியந்து உருகியுருகிப் பேசுவது. கேட்டாயே

மடநெஞ்சே! யென்பது, தாம் ஒன்று அபேக்ஷிக்க, அவன் பலவும் உபகரித்த பெருமையைப் பேசுவது. இங்கு ஈட்டு ஸ்ரீஸூக்திகளை அழாமல் ஸேவிக்கவல்ல கல்நெஞ்சினருமுளரோ? ... ... — ... ... *

— பெரியார்களை ஸேவைஸாதிப்பிக்கும் விருந்துகள் இரண்டு —

199. அடியேன் அறுநூறு விருந்துகளை யளிக்க ஸங்கல்பித்துக்கொண்டு இருநூறு விருந்துகளை முடிக்குந் தருவாயிலிருக்கிறேன். இளமையிலிருந்தே



அடியேனுக்குள்ள ஓர் ஆசையை உலகமறியும் நம்முடைய பாக்கியவசத்தினால் இற்றைக்கும் வாழ்பவர்களான பெரியார்களைப் பிரகாசப்படுத்தவும், கீர்த்தி மூர்த்திகளான பெரியார்களைப் பிரகாசப்படுத்தவும் நெஞ்சு நிரம்பிய ஆசையுடையேன். இவ்வாசை அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் குறையற நிறைவேறியே வருகின்றது. இனியும் எம்பெருமானருளால் நிறைவேறிவரும். இங்கே ஸேவை ஸாதிக்கின்ற இரு திருநாமங்கள் ஆழ்வார் திருநகரியில், "மாமலைவண்ணா! உன் கோயில் கடைப்புகப்பெய்" என்று பெரியாழ்வார் பிரார்த்தித்தபடியும், "உன் கடைத்தலை யிருந்துவாழும் சோம்பரையுகத்திபோலும்" என்று தொண்டரடிப் பொடியாழ்வாரருளிச்செய்தபடியும் ஆழ்வாருடைய நித்யகோஷ்டியை நிரந்தரமாக நிர்வஹித்து அந்தாணிச்சேவகம் செய்து என்னுள்ளத்துள்ளுறைகின்ற ஸ்ரீமதுபயவே. திருவாய்மொழிப்பிள்ளை ஸ்ரீசைலநாதர்ய ஸ்வாமியும் அவருடைய திருக்குமாரரான சீராமப்பிள்ளையும். "எந்தை தந்தைதந்தை தந்தை தம்மூத்தப் பனேழ்படிகால் தொடங்கி வந்துவழிவழியாட்செய்து ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்களென்னும் திருவம்சத்தில் திலகமாக விளங்குபவர்கள். .... *

— ஸ்ரீமத் பரமஹம்ஸ - சடகோப ராமாநுஜஜீயர் ஸ்வாமி —



200. இங்கே நடுநாயகமாக ஸேவை ஸாதித்தருளாநின்ற ஜீயர் ஸ்வாமியின் பூர்வாச்ரமத் திருநாமம் 'வானமாமலை ஆழ்வாரையங்கார்'' என்பது. ஆழ்வார் திருநகரி, ராஜமன்னார் ஸந்நிதி, நந்திபுர விண்ணகரம் முதலான திவ்ய தேசங்களில் மடம் அரங்க நகரப்பன் திருவாராதன கைங்கர்யத்துடன் அருளிச் செயல் கோஷ்டியையலங்கரித்து ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. சின்ன கலியன் ஸ்வாமி நியமனத்தினால் ஸ்ரீவில்லிபுத்தூர் மணவாள மாமுனிகள் ஸந்நிதியில் ஸ்ரீ சடகோப ராமாநுஜஜீயர் என்ற திருநாமத்துடன் எழுந்தருளியிருந்தவர். இருபக்கத்திலும் ஸேவை ஸாதிப்பவர்கள் ஸ்வாமிக்குத் திருவடி நிழலாகவும் ஸ்ரீபாதஸேவகர்களாகவு மிருந்தவர்கள். ...*

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ. அண்ணங்கராசாரியார்

எழுதிய

**அரியபெரிய அறுநூறு விருந்தில் இரண்டாவது நூறு**

முற்றுப்பெற்றது.